1921

பத்மநாதன்

அல்லது

களவு போன

வைரப் பதக்கம்

# பத்மநாதன்

அல்லது

# களவுபோன வைரப்பதக்கம்

சா. வே. தைரியம்
எழுதியது

பர்மா
நாட்டுக்கோட்டை செட்டியார் சங்கக் காரியதரிசியும்
கடியாபட்டி தனவைசிய வாலிபர் சங்கத்தலைவருமாகிய
ஸ்ரீமான் - சு. பழனியப்பா அவர்களால்
வெளியிடப்பெற்றது





சென்னை
கார்டியன் அச்சேந்திரசாலையில்
பதிப்பிக்கப்பட்டது
1921

 [விலை ரூ

# முகவுரை



நாட்டுக்கோட்டை நகரவைசியர்களாகிய நமது சமூகத்தாருக்குள் காணப்படும் வீண் செலவு, பெண்களின் அறியாமை, அபாத்திரதானம், முதலிய குறைகளை நிவர்த்தி செய்யும்படி வாசகர்களைத் தூண்டி விடுவதும், காலத்துக்கேற்ற சமூக சீர்திருத்தம், கல்வி, ஆகியவைகளின் அவசியத்தை உணர்த்துவதுமே இந்த நவீனகத்தை வெளியிட்டதின் நோக்கமாகும். நம்மவர்களின் அன்றாடக ஜீவியத்தில் நிகழுகிற பற்பல சம்பவங்களே இந்தக் கதையில் விவரிக்கப் பெற்றிருக்கின்றன. நமது சமூகத்திலுள்ள குறைபாடுகளை வெளிப்படுத்தி அவைகளைப்பரிகாசம் செய்திருப்பதாகக் கருதாமல், குறிப்பிடப்பட்ட குறைகளையுணர்ந்து, அவற்றை யகற்றி ஒழித்துவிட்டு நமது சமூகத்தை மேல் நிலைமைக்குக் கொண்டு வருவதைப்பற்றி ஒவ்வொருவரும் சிந்திக்க வேண்டுமென்பதே எம் கோரிக்கை.

இதை வாசிப்போரில் ஒரு சிலராவது நமது சமூகத்தில் காணப்படும் குறைகளை யுணர்ந்து அவற்றை நிவர்த்தி வேண்டுமென்னும் விருப்பங் கொண்டு, சீர்திருத்தங்களைக் கைக்கொள்வாராயின் அதுவே நாமெடுத்துக் கொ பிரயாசைக்கு தக்க கைம்மாறு என்று கருதுவோம்.

சு. பழனியப்பா.

உ

சிவமயம்

# பத்மநாதன்

அல்லது

# களவுபோன வைரப் பதக்கம்



## முதலாவது அத்தியாயம்



### கலியாண முழக்கம்



மதுரை, இராமநாதபுரம், திருச்சினாப்பள்ளி ஜில்லாக்களிலும், புதுக்கோட்டை சமஸ்தானத்திலும் நாட்டுக்கோட்டையா ரென்னப்படும் தன வைசியர் வசிக்கும் பிரதேசமாகிய தனவைசிய மண்டலத்திலே திருப்பத்தூரை அடுத்து செவல்பட்டி என்று ஒரு கிராமம் இருக்கிறது. "சிறு மதுரை செவல்பட்டி இளையாத்தங்குடி நகரம் சிறந்து வாழ்க" என்றார் பாடுவார் முத்தப்ப செட்டியார், அந்தக் கிராமத்தின் கிழக்குவீதியில் ஒரு பெரிய நாலுகட்டு மாடிவீடு நிற்கிறது. அதன் கோபுரங்களும் பலவர்ணம் பூசின வளைவுகட்டுகளும், கண்டோர் அதிசயிக்கத்தக்கவை. இப்பொழுது அந்த வீட்டின்முன் பெரிய கொட்டகைபோட்டு வாழை மரங்கள் நட்டு தோர

ணங்கள் கட்டி அலங்கரிக்கப்பட் டிருக்கிறது. ஆடையா பரண அலங்கிருதர்களான தனவைசிய ஸ்திரிகளும் புருஷ ரும் அங்கு நடமாடுகின்றனர். மேளவாத்தியம் கோஷம் செவிகளில் படுகிறது. அந்தத் தெருவழியேபோகிற அவ் வூர்க்கார னொருவனே அழைத்து "அது யார்வீடு, என்ன விசேஷம்" என்று கேட்போமானுல் அவன் அது முத்துக் கருப்பன் செட்டியார் வீடென்றும், அவர் செல்வ மகளுக் குக் கல்யாணம் நடக்கிறதென்றும் நமக்குத் தெரிவிப்பான்.

முத்துக் கருப்பன் செட்டியார் அந்தக் கிராமத்தி லுள்ள தனவந்தரில் ஒருவர். அவருக்கு மூன்று புத்திரரும் இரண்டு புத்திரிகளுமுண்டு. ஆண் மக்களுக்கு ஏற்கனவே கலியாணம் ஆகிவிட்டது. பெண் மக்களில் மூத்தவளான கல்யாணிக்கு இப்பொழுது கலியாணம் நடந்துகொண்டிருக் கிறது. இராயபுரம் வேலாயுதம் செட்டியார் மகன் ஆறு முகம் என்னும் சிறுவன்தான் மணமகன். அவனுக்கு வயது பதினுலுக்குக் குறையாமலிருக்கும், பெண்ணுக்கு வயது பதினேழு என்று கேள்வி. ஆனுல் அதற்கு மேற்பட இரு க்குமென்று பெண்ணின் தோற்றத்தால் அநுமானிக்கலாம். இன்று சீர் கொடுத்தல் விசேஷம் நடக்கிறது. அதற்காக நாலைந்து மாதங்களுக்கு முன்னுகவே, பம்பாய், கல்கத்தா, சென்னை, கொழும்பு, சிங்கப்பூர், இரங்கோன் முதலான விடங்களுக்கு கடிதங்கள் எழுதி பற்பல சாமான்கள் தரு விக்கப்பட்டிருந்தன. அவற்றை யெல்லாம் இரண்டாங் கட்டின் உள் தாழ்வாரத்தில் காட்சியாக வைத்திருக்கிறது. கல்யாணத்துக்கு வந்திருக்கிற ஸ்திரி புருஷர்களெல்லாரும் அவற்றைப் பார்வை யிடுகின்றனர். ஒரு பக்கத்தில் வெண் கலப் பாத்திரங்கள் அடுக்கடுக்காய் வைக்கப்பட் டிருக்கின்

றன. மற்ருெரு பக்கத்தில் வெள்ளிப்பாத்திர அடுக்குகளும் பிங்கான் அடுக்குகளு மிருக்கின்றன. நவ நவமான சேலை களும் மாலைகளும் ஜாடிகளும் வகைவகையாய்க் காணப் படுகின்றன. ஒரு கோணத்தில் தலையணை, மெத்தை, ஜமுக் காளம் முதலியன டஜன் கணக்காக, சிறு குன்றுகள்போல நிற்கின்றன. இன்னொரு கோடியில் சுக்கு, மிளகு, மல்லி, புளி, இஞ்சி, ஏலம், கடுகு, சீரகம், திணை, பயறு முதலியன மூட்டை மூட்டையாக அடுக்கி யிருக்கிறது. இதைத்தவிர அங்கு சேகரிக்கப்பட் டிருக்கும் மண் கலங்கள், உரல், உல க்கை, அம்மி, திருகை எலிப்பொறி, அரிவாள்மணை. விள க்குமாறு போன்ற வீட்டுப்பண்டம்பாடிகள் வைத்திருப்ப தைப் பார்த்தால் அவை பத்துகுடும்பங்கள் புளங்குவதற்கு போதுமென்று தெரிகிறது. தனவைசியரின் கலியாண விப ரந்தெரியாத அன்னிய மனிதன் ஒருவன் அதைக்கண்ணுறு வானே யானல் அதை ஓர் "கைத்தொழில், விளைபொருட் கண்காட்சி" என்றே எண்ணுவான். அவ்வளவு சாமான்கள் அங்கு வைக்கப்பட் டிருந்தன.

கலியாணத்துக்கு வந்திருந்தவர்க ளெல்லாரும் பார் வைக்கு வைத்திருந்த சீதனப்பொருட்களைக் கண்ணுற்றனர். பெண்களில் பலர் தாங்கள் இதற்குமுன் போயிருந்த கலி யாணங்களில் கண்டுள்ள சீருடைமைகளுடன் இவற்றை ஒப்பிட்டுப்பார்த்து எதெது குறைவு எதெது ஏற்றமென்று மனதிலே தீர்மானித்துக்கொண்டார்கள். இது இப்படி இருக்க,

கல்யாணவீட்டுக்கு எதிர்வீட்டிலே அக்கம் பக்கத்தி லுள்ள பெண்கள் பலர் வந்து ஒரு சபை கூடினுர்கள். உமையாள் என்ற ஸ்திரி சபைத் தலைமை வகித்தாள். கலி

யாணவீட்டு விசேஷங்களைப்பற்றி பிரசங்கங்கள் நடந்தன. "வெங்கல அடுக்கு செம்பமட்டம்," என்றாள் அரியநாயகி. அதைக்கேட்ட கண்ணம்மாள் "ஆமடி குறிக்கினும் பட்டி சின்னக் கருப்பன் செட்டியார் மகளுக்கு வைச்சிருந்தது சீருடைமை அந்த ஓவியத்தைப் பார்த்த யிண்ணு-இதெல்லாம் என்ன. எல்லாம் மட்டந்தான்," என்றாள். இதற்குள் சபா நாயகி உமையாள் தலையிட்டு "வள்ளியம்மை (வள்ளியம்மை முத்துக் கருப்பன் செட்டியார் மனைவி) அண்ணைக்கு ஒரே யடியாய் தாளிச்சுக்கிட்டாளே இந்த ஓவியத்துக்குத்தானு?" என்று அக்கிராசன உரை கூறினாள்.

இவர்களைப் பின்தொடர்ந்து அச்சபையில் விஜயம் செய்திருந்த ஸ்ரீமதிகள் சிட்டாள், அன்னபூரணி, விசாலாக்ஷி, ஜெயலட்சுமி முதலிய ஸ்திரிகளெல்லாரும், அவரவர் பார்த்துவந்த குறைகளைப்பற்றி வார்த்தைகளை அடுக்கியும் நீட்டியும் சொற் பெருக்கமாய்ப் பிரசங்கங்கள் செய்ய, சபாநாயகி உமையாள் இடையிடையே அக்கிராசன உரை கூறிக்கொண்டிருந்தாள். இவ்விதமாக அந்த வம்பர் சபை இரண்டுமணி நேரம் நடந்தது. எல்லாரும் அதிக உற்சாகம் காண்பித்தார்கள். சபை முடிந்ததும் இரண்டொரு ஸ்திரீகள் இந்த அபிப்பிராயங்களை யெல்லாம் ஒன்றாய்த் திரட்டி, அதனுடன் தங்களுக்கு இஷ்டமான கூட்டுவர்க்கங்களையும் சேர்த்துக்கொண்டுவந்து வள்ளியம்மையிடம் ரகசியமாகச் சொன்னபின்பு அதிகத் திருப்தியும், மகிழ்ச்சியும், அடைந்தவர்களாய் தங்கள் வீடுகளுக்குப்போனார்கள்.

* * * *

"சீரழிஞ்சுபோரானுகளே, சீரழிஞ்சு. பணமிருந்தாத்தான் என்ன இப்படியெல்லாமா பண்ணச்சொல்லி

யிருக்கு. சீ, செட்டியாவது செட்டாவது; கெட்டுக் குட்டியச் சுவராய் போச்சு," என்று இரைச்சலிட்டுக்கொண்டு ஓர் கிழவர் அந்தத் தெருவின் தென்கோடியிலிருந்த ஒரு வீட்டுத் திண்ணையில்போய் உட்கார்ந்தார்.

"என்ன பெரியவரே, என்ன சீரழிஞ்சு போச்சு, என்னக் குட்டிச்சுவராய்ப் போச்சு? என்ன அது?" என்று கேட்டுக்கொண்டே, ஒரு வயோதிப ஸ்திரிவந்து எதிர் திண்ணையில் உட்கார்ந்தாள். பெரியவர், "என்ன பெரியவரே என்ன சீரழிஞ்சு போச்சா. நம்ம நாட்டுக் கோட்டயார் இருக்கிறார்களே நாட்டுக்கோட்டையார் அவர்கள் செய்கிற வேலைதான். கலியாணம் சீர் சீராட்டிண்ணு இப்படியா? வெள்ளிப் பாத்திரமாம் வெங்கலப் பாத்திரமாம் மங்கு மரவையாம். பம்பாய் தினுசாம், வங்காளம் சாமானும். இப்படியெல்லாமா வீடு நிறைய கண்டது கடியதெல்லாம் வைக்கச்சொல்லி யிருக்கு? காசைக் கரியாக்கி இதையெல்லாம் வாங்கி ஏதும் பிரயோசனமா? முந்தியெல்லாம் இப்படித்தானா, லட்சுமி?

லட்சுமி.—"அப்ப சீர் சீராட்டுக்கு இப்பமாதிரி பண்டங்கள் அது எண்ணும் இது எண்ணும் வைக்கிறதில்லை. எனக்கெல்லாம் ஒரு அண்டா, ஒரு கம்பி நிலை விளக்கு, ஒரு மாடவெங்கல விளக்கு, 2 அடுக்கு வெங்கலச் சட்டி, 2 செப்புக்குடம், 1 தவலை, ஒரு மெத்தை 5 தலையணை, ஏழேட்டுப் பாய், சிருசு பெரிசு 10 மண்பாண்டம்-இவ்வளவு தான் வச்சது. இப்ப பதினைந்து இருபது வருஷத்துக்குள் தானே இந்தமாதிரியெல்லாம். இப்ப என்னெண்ணு, கோடாலி, அறுவாள், கட்டப்பாரை, உரல், அம்மி, மாப்பிள்ளைக்குக் குடை, செருப்பு, குண்டுசட்டி, விளக்குமாறு இன்

ளும் என்ன மெல்லாமோ வைக்கிருக, செய்யிருக. இப்படி ஆடப்படாது. அப்ப ஊமை, செவிடுகளுக்கெல்லாம் கலியாணங் காக்ஷி நடந்தது. இப்ப அப்படி யெல்லாம் கிடையாது. ஊமை, செவிடு இல்லாதது எளிய தெல்லாம் சிவ சிவா எண்ணு சும்மா இருக்கவேண்டியதுதான்.''

பெரியவர்.—“ஊமைசெவிடாவது கலியாணமாவது. பதிஞயிரம், இருபதிஞயிரம் வைச்சுக்கிட்டு சிங்கக்குட்டி மாதிரி இருக்கிறவன்களுக்கே கலியாணமில்லே யெண்ணு கிடக்கு. அதிலே ஊமை, செவிடுகளுக்கா கலியாணம் பண்ணி வைத்திடுவார்கள்? ஒரு பெண்ணுக்கு எட்டு வாரகன், பத்துவாரகனெண்ணு வாங்கிருர்களே இது சரியா, கடவுளுக்கு எற்குமா? அட அநியாயமே இப்படியுமுண்டா?''

லட்சுமி.—“அதுதான் வழக்கமாய் போச்சே''

பெரியவர் (எரிச்சலாக).—“நல்லா வழக்கமாய்ப் போச்சு! அருமையாய்ப் பெற்ற பெண்களே ஆடு மாடு மாதிரி விலேக்குக் கொடுக்கவா சாஸ்திரத்தில் சொல்லியிருக்கு? அது மார்க்கத்துக்குப் பொருந்துமா, யோக்கியதையா? கல்லியாணத்தின்போது கன்னிகையை தானம் செய்வதே சரி. அதுவே விவாகம். பணத்துக்குப் பெண்ணைக் கொடுத்தல் கேவலம சந்தை வியாபாரமே யாகும். அது விவாகமாகாது. தர்மமே உருவாய்க்கொண்ட நம் குலத்தில் இந்த மாசு இருக்கப்படாது. நம்மஜாதியிலே தலேவர்கள் இருக்கிருர்களே தலேவர்கள் அவர்கள் இந்தக் கறையை நீக்க முயற்சித்தாலென்ன? சும்மா அவர்கள் பார்த்துக்கொண்டிருக்கிருர்களே. இது நல்லதா. குலத்தைக் கெடுத்த கோடாலிக் காம்பு போல எந்தப் புண்ணிய

வாஞே இந்தக் கொடிய வழக்கத்தை ஏற்படுத்திவிட்டான். என்ன அநியாயம் நீயே யோசித்துப் பார்"

லட்சுமி.—"ஆம் அநியாயந்தான். பெண்களை விலைக்குக் கொடுத்துக் கிரயம் வாங்கப்படாதுதான். ஆனால் எல்லாரும்தான் பணம் கொடுக்கிறார்களே. எட்டு வாரகன் பத்துவாரகன் எண்ணுகொடுக்கிருக. இரண்டாந்தரம் செய்யும் கிழவன்கள் இன்னும் அதிகமாகவும் கொடுக்கிருக. அது தோதாய்ப் போய்விட்டது. அதனாலே வயசுக்காரப் பிள்ளைகளுக்குப் பெண்கிடையாமல் திண்டாடுது."

பெரியவர்.—"இந்தமாதிரி முன்காலத்திலுண்டா?

லட்சுமி.—"முந்திக் கிடையாது. எங்க காலத்திலெல்லாம் இவ்வளவு பணங்கொடுத்துக் கொள்ளுவதில்லை. எனக்கு ஆயிரம் ரூபா கொடுத்துக் கொண்டார்கள்."

பெரியவர்.—லட்சுமி! உனக்கா ஆயிரம் ரூபா கொடுத்துக் கொண்டார்கள். சரி, அப்பவே கிரயம் வாங்கிற வழக்கம் துவங்கி விட்டுது. உங்க தாய் தகப்பனார் உன்னை எப்படி விலைக்குக் கொடுக்க மனம் துணிந்தார்கள் லட்சுமி. வாங்கினவர்கள் பல்லைப் பிடிச்சுப் பார்த்தார்களா?

லட்சுமி.—"ஏன் பல்லைப் பிடிச்சுப் பார்க்கணும்? அப்ப அது தோதாயிருந்தது. எல்லாரையும் போலத்தான் எங்க தாய் தகப்பமாரும் செய்தாக."

பெரியவர்.—"சரி, ஒருத்தனுக்கு நாலு பெண்களிருந்தால் அவனைப் பெரிய சீமான் என்று சொல்லவேண்டியதுதான். ஒரு இடையனுக்கு பத்துக்கிடை ஆடு இருந்தால் "அவனுக்கென்ன மகாராஜன் பத்துக்கிடை ஆடுகள் இருக்குது. அவன்பாட்டுக்குப் போதும்" என்று சொல்றது போல, நாலு பெண்ணைப் பெற்ற ஒரு நாட்டுக்கோட்டை

செட்டியாரையும் பெரிய சீமான் என்றுதான் சொல்லணும். இப்ப இல்லாட்டாலும் இன்னும் நாலைந்து வருஷங்கள் கழித்தாவது அந்தப் பெண்களை தலைக்கு எட்டுவராகன் பத்துவாராணுக்கு விற்றால் 30 அல்லது 40 வராகன் கிடைக்கும். அதிலே பாதிக்குப் பாதி செலவழிஞ்சாலும் 50 ரூபா அல்லது 70 ரூபா லாபம் கிடைக்குமல்லவா? அவனும் தொலைக்கு போகாது ஒரு பணக்காரனாய் விடலாம். என்ன நான் சொல்றது சரிதானே லட்சுமி?''

லட்சுமி—(சிரித்துக்கொண்டு) "நீங்கள் பரியாசம் பண்ணுறீய. ஆனால் சொல்றது சரிதான்''.

இந்தச் சமயத்தில் லட்சுமி ஆச்சியின் மகன் வீரப்பன் செட்டியார் வெளியில்போயிருந்தவர் வந்து சேர்ந்தார். பெரியவரைக் கண்டதும் "வாருங்கள் ஐயா. வந்தது இப்பொழுதுதான் போலும்'' என்று உபசாரமாகக் கூறினார்.

பெரியவர்.—"ஆமா ஐயா வாரவேண்டியது தான் வார''

வீரப்பன் செட்டியார்—"என்ன ஐயா, பலத்த கோபத்தில் இருக்கிறுப்போலிருக்கே''.

பெரியவர்.—"பொய்யும், புரட்டும், போட்டியும் தாறுமாறும் பெருத்துப்போனால் கோபம் வாராதா?

வீரப்பன்செட்டியார்.—"என்ன பொய்யும், புரட்டும் ஐயா? விபரமாகச் சொல்லுங்கள்''

பெரியவர்.—"கலியாண வீட்டிலே சீருடைமைச் சாமான்களைப் பார்த்தாயா நீ?''

வீரப்பன்செட்டியார்.—"ஆம் பார்த்தேன். எல்லாம் குறைவில்லாமல் இருந்ததே''

பெரியவர்.—"எல்லாம் குறைவில்லாமல் இருந்தது சரி

தான் அதை யெல்லாம் இசைகுடிமானத்தில் கண்டெழுதி ஞர்களா? நீ இசைகுடிமானம் எழுதினதைப் பார்த்தாயா?

வீரப்பன்செட்டியார் —"இசைகுடி மானத்திலே மாமூல்போல பழய வழக்கப்படி எழுதினர்கள்.

பெரியவர்.—"என்ன பழய வழக்கப்படி? சீர்வரிசைகள் வைக்கிறதிலே பழய வழக்கமில்லை. இசைகுடிமானம் எழுதுகிறதிலே மாத்திரம் பழய வழக்கமோ? அழகு சிந்துதே. வைக்கிற சீர்சாமான்களைத் தானே அதிலே எழுதவேண்டும். அப்படியில்லாமல் மணப்பந்தலிலே இவ்வளவுபெயரையும் வைத்துக்கொண்டு பொய்யும் புரட்டும் எழுதலாமா? கொடுக்கிற சாமான்களைக் காட்டாமல், வேறே எதை யெல்லாமோ மாறுபாடாய் எழுதிவிட்டு கடைசியிலே இவ்வகைப்படி செய்வோம். அவ்வகைப்படி செய்வோம் என்று வக்கணையாய் எழுதினுல் சரியாய்ப்போகுமா? என்னத்தை இவ்வகைப்படி செய்வோம், பொய்யும், புரட்டையுமா? நன்ருயிருக்கிறது!"

வீரப்பன்செட்டியார்.—"ஐயா, நீங்கள் சொல்றது சரி, ஆனுல் அப்படி வழக்கமா யிருக்குதே."

பெரியவர்.—நல்ல வழக்கமடா அப்பா, நல்லவழக்கம், சுட்டெரி இந்த வழக்கத்தை," என்று எரிச்சலாய்க்கூறிஞர்.

இந்தப் பெரியவரின் பெயர் சுப்பய்யா செட்டியார். அவர் 10 வருடங்களுக்கு முன்னே நல்ல அந்தஸ்தில் இருந்தார். இருபத்திரண்டாவது வயதிலே இருபதிஞயிரம் ரூபா செலவில் அவருக்கு கல்யாணம் நடந்தது. பெண் தொகையும், கலியாண செலவுகளும் அவர் கையிலிருந்த பணத்தை யெல்லாம் சுரண்டிச் சாப்பிட்டு விட்டது மன்றி அவரைக் கடன்படவும் செய்துவிட்டன. அந்தக்கடனைத் தீர்ப்பதற்

காக கலியாணம் முடிந்த வெகு சீக்கிரத்திலேயே தொழில் நடத்த அன்னியதேசம் செல்லவேண்டியதாயிற்று. ஒரு கணக்கு முடிந்து வீடு திரும்பினாலும் வெகுநாள் தங்கமாட்டார். துரிதத்திலேயே மறு கடைக்குப் போய்விடுவார். இப்படி பல வருடங்கள் நடந்துவந்தது. கல்யாணமான பத்தாவது வருடத்தில் அவருடைய மனைவி பரகதி அடைந்தாள். சுப்பய்யா செட்டியார் கல்யாணமானபின் அடிக்கடி அயல்தேசம் போய்க்கொண் டிருந்ததால் அவர்களின் இல்வாழ்வு சிறப்புற்றிருக்கவில்லை. கலியாணத்தா லேற்பட்ட கடனும் தீராமல் இன்னும் பாக்கியிருந்தது. அப்பொழுது சுப்பய்யா செட்டியாருக்கு முப்பத்திரண்டு வயது தான் நடந்ததென்றாலும், மறு விவாகம் செய்வதற்கு பணமில்லாமையால் அவர் பிரமசாரியா யிருக்கவும், கையிலுள்ள பணமும் போய்விட்டதால் சோற்றுக்குத் திண்டாடவும் நேரிட்டது. இவ்விஷயங்களைப்பற்றி நினைக்க நினைக்க அவருக்குப் பெரும் ஆத்திரமுண்டாவது வழக்கம்.

ஆகையால் பெண் தொகை, கலியாணச் செலவு முதலிய விஷயங்களைப்பற்றி அவர் எப்பொழுதும் மிகவும் வெறுப்புடன்தான் பேசுவார். அன்று கலியாண வீட்டில் காட்சிக்கு வைத்திருந்த சீர்வரிசைகளையும், அங்கு நடக்கும் வீண்செலவுகளையும் கண்டவுடனே அவருக்கு பொறுக்கமுடியாத எரிச்சல் பிறந்தது. உடனே அவ்விடம் விட்டு நீங்கி மேற்கண்ட வீட்டுக்குச்சென்று தமது எண்ணங்களை வெளியிடலானார்.

*　　*　　*　　*

இனி கலியாண வீட்டிலே என்ன நடக்கிறதென்று பார்ப்போம். சமயல்கட்டு முழுவதும் குத்தகைச் சமயல்

காரர்களின் ஆதீனத்தில் இருக்கிறது. சமயல் வேலைகளை யெல்லாம் அவர்களிடம் ஒப்படைத்துவிட்டு ஸ்திரிகள் எல்லாரும் கலியாணத்துக்காக ரஜா எடுத்துக் கொண்டாற்போ லிருக்கின்றது. சமயற்காரர்கள் தங்களுக்கு நல்ல பெயர் கிடைக்கவேண்டும், இனும் வாங்க வேண்டுமென்ற ஒரே நோக்கத்துடன் பெரும்பணஞ் செலவிட்டு உக்கிராணத்தில் சேகரித்து வைத்திருக்கும் பதார்த்தங்களை யெல்லாம் அளவு நிறையின்றி அள்ளியிட்டு மனம்போன வாறெல்லாம் ஆக்கிப் படைக்கிறார்கள். என்ன ஆக்கிப் படைத்தாலும் அவற்றில் அரைவாசிக்குமேல் அள்ளியெறிய வேண்டியது தானே. அதையேன் நாம் பார்க்கவேண்டும்? பார்த்தால் ஐயோ எவ்வளவு வீணாய்போகிறதென்று சஞ்சலமுண்டாகும். ஆகையால் மற்ற விஷயங்களைக் கவனிப்போம்.

வீட்டுக்குள்ளே இரைச்சல் கேட்கிறது. நேற்றுக் கூடிய பெண்கள் மகா சபையில் நடந்த பேச்சுகள் வள்ளியம்மாளுக்கு ஏற்கனவே அறிவிக்கப்பட்டிருந்த தல்லவா! இப்பொழுது அவள் அவ்விஷயமாய் முத்துக் கருப்பன் செட்டியாரிடம் தன் அபிப்பிராயத்தைச் சொல்லுகிறாள். அவள் சொல்வதை ஆமோதித்தும் ஆதரித்தும் வேறு சில ஸ்திரிகளும் பேசினார்கள். பேசினவர்கள் எல்லாரும் ஏக காலத்தில் பேசினபடியாலும், தாங்கள் சொல்வது கேட்பவர் மனதிலே ஆழ்ந்து பதியவேண்டுமென்று உச்சத்தொனியிலே பேசினதாலும் வீடு முழுவதிலும் எதிரொலி கிளம்பத்தக்க அவ்வளவு இரைச்சல் உண்டானது. சீருக்குவைத்த வெண்கல பாத்திரங்கள் மட்டமென்பதுதான் இவ்வளவுக்கும் காரணம். முத்துக்கருப்பன் செட்டியார் தமது குமாஸ்தாக்களி லொருவனாகிய கனகசுந்தர மென்பவனைக்

கூப்பிட்டு அவனுடைய கவலைத்தாழ்ச்சியினால் தான் அப்படி நேரிட்டதென்று அவன்மேல் சீறிவிழுந்தார். ஊருக்கு எளியவன் பிள்ளையார் கோவில் ஆண்டிதான் அல்லவா!

குமஸ்தா தான் குற்றமற்றவனென்றும், உயர்ந்த சாமான்களையே அனுப்பும்படி புதுவயலிலுள்ள க. மு. சொ. வெண்கல பாத்திரக் கடைக்காரனுக்குத் திட்டமான உத்தரவு கொடுத்துவந்ததாயும், வெண்கல பாத்திரக்காரர்தான் அப்படி மோசம் செய்திருக்க வேண்டுமென்றும், அந்தப் பாத்திரங்கள் வந்த அன்று செட்டியார் பார்வையிட்ட போது ஒன்றும் சொல்லவில்லை யென்றும் தெளிவாக எடுத்துக்கூறி வாக்கு வல்லபத்துடன் பலமான எதிர்வாதம் செய்தான். ஸ்திரிகளின் பேச்சுக்கு எதிர் நிற்கமாட்டாமல் குமஸ்தாவின்மேல் திரும்பின செட்டியார் அவனது எதிர்வார்த்தைக் கேட்டதும், வெண்கலப் பாத்திரக் கடைக்காரன் மேல் குற்றத்தைச் சாட்டினார். குமஸ்தாவும் அவரை ஆதரித்துப் பேசினான். பெண்களும் பக்கபலமாகப் பேசினார்கள். கடைசியில் வெண்கல பாத்திரக்காரர் மட்டசாமான்களை யெல்லாம் எடுத்துக்கொண்டு அவற்றுக்குப்பதில் அதேமாதிரி உயர்தர சாமான்கள் கொடுக்க வேண்டுமென்றும் அப்படிக் கொடாத விஷயத்தில் அவருக்குப் பணம் ஒரு பைசாக்கூட கொடுப்பதில்லை யென்றும் தீர்மானிக்கப்பட்டது. இந்தத் தீர்மானத்தை உடனே கடிதமூலமாய் புதுவயல் வெண்கலப் பாத்திரக் கடைக்காரருக்குத் தெரிவிக்கும்படி செட்டியார் குமஸ்தாவுக்கு கட்டளையிட்டார். அந்தக் கட்டளையை நிறைவேற்றும்படி குமஸ்தா அவ்விடம் விட்டு நீங்கினான். செட்டியார் ஏதோ ஓர் பெருங்காரியத்தை சாதித்து விட்டதுபோல திருப்தியுடனும் களைப்புட

னும் முன் கட்டுக்குச்சென்ருர். ஸ்திரிகள் கலந்து சென்று பின்பு இருவர், மூவராகக்கூடி தங்கள் தங்கள் அந்தரங்க அபிப்பிராயங்களைக் கலந்துகொண்டார்கள். இப்படியாக நடந்துகொண்டிருக்கிறது கல்யாணம்.

* * * *

செவல்பட்டியிலிருந்து பலமைல் தூரத்துக்கப்பால் அரிமளம் என்ெருரு கிராமம் உண்டு. இந்தகிராமத்துக்கு சிறிது தூரத்தில் ஓர் பெரிய காடு இருக்கிறது. இந்தக் காட்டினூடாக வண்டிப்பாதை செல்லுகிறது. வண்டிபாதையின் இருபக்கங்களிலும் ஏறக்குறைய மூன்றுநான்கு மைல் தூரத்துக்கு மரங்களும் செடிகொடிகளும் நிறைந்த அந்தக்காடு பரந்துகிடக்கிறது. பார்க்கப் பயங்கரமான ஆரண்யம்; கள்வருக்கேற்ற கருங்கானகம். புதுக்கோட்டை அரசர் வேட்டையாடும்படி அது அழிக்கப்படாமல் பரிபாலிக்கப்பட்டு வருகின்றது. கொள்ளையும் வழிப்பறிகளும் இந்தக் காட்டில் அடிக்கடி நிகழ்வதுண்டு. அரிமளம் கோட்டக்கரை காடு என்ருல் எல்லாருக்கும் பயந்தான். அதனல் அரிமளத்தில் போலீஸ் படை ஒன்று வைக்கப்பட்டிருக்கிறது. ஆனலுந் திருடர்கள் தங்களுடைய தொழிலைச் சரிவர நிறைவேற்றிச் சுகமாய் வாழ்ந்து வருகிருர்கள். அவர்களுக்கும் இன்னம் இடைஞ்சல் ஏற்படவில்லை. எற்படினும் எப்படியும் தப்பித்துக்கொண்டு விடுகின்றனர். இந்தக் காட்டினலும், இதில் நடைபெறும் வழிப்பறிகளினலும் அரிமளம் கிராமத்துக்கு மற்றவூர்களுக்கில்லாத பிரபலமும், கீர்த்தியும் உண்டாயிருக்கிறது. இதற்குச் சமீபத்தில்தான் ஆதியில் நாட்டுக்கோட்டையார் வந்து குடியேறிய ஓங்காரக்குடி இருந்தது.

இந்தக் கிராமத்தின் வடகோடியிலிருக்கும் ஒரு சிறிய வீட்டிலே இப்பொழுது இருவர் பேசிக்கொண்டிருக்கிறார்கள். என்ன பேசிக்கொண்டிருக்கிறார்களென்று பார்ப்போம்.

"கூட்டம் அதிகமாயிருக்குமே. அப்படிச் செய்ய முடியுமா? என்று கேட்டான் ஒருவன். மற்றவன் "கூட்டம் அதிகமாயிருந்தால் தானே நமக்கு நல்லது. கும்பலிலே கோவிந்தாப் போடலாம்."

முதல் பேசினவன்.—"கலியாணத்திலே பலவிதமான ஆட்கள் வந்திருப்பார்கள். உஷார்க்காரரு மிருப்பார்கள். அதனால்தான் நான் யோசிக்கிறது"

இரண்டாவது மனிதன்.—"நீ ஒண்ணுக்கும் யோசிக்க வேண்டாம். அண்ணன் எல்லாம் சரிப்படுத்தி விடுவார். நீ செய்யவேண்டிய தெல்லாம் போறதும் வாரதுந்தான்."

முதல் பேசினவன்.—"போறதும் வாரதுந்தா னென்றால், சும்மா போயிட்டு வந்திடவா. வேறு ஒண்ணும் செய்யவேண்டிய தில்லையா?"

இரண்டாவது மனிதன்.—"அது தெரிந்தது தானே. சொல்ல வேணுமா."

முதல் பேசினவன்.—"சரி, தெரிந்தது தானென்றால் கிடைக்கிறதில் பாதி எனக்கு வந்துவிடவேண்டும். எல்லாம் முடிந்த பிறகு தெரிந்தது தானென்றால் வருத்தம் வரும்.

இரண்டாவது மனிதன்.—"அதற்கென்ன, உழைச்சவனுக்குக் கூலியில்லாமல் போகுமா" என்று கூறிக்கொண்டு மற்றவனுக்கு அருகில் நெருங்கி காதோடு காதாய் ஏதேதோ சொல்லிக்கொண் டிருந்தான்.



# இரண்டாவது அத்தியாயம்

## களவு.



கலியாண வீட்டில் ஆர்ப்பாட்டமா யிருக்கிறது. காலை ஒன்பதுமணி யிருக்கும். வெளியிற் போவோரும் வருவோருமாக விருந்தாளிகள் நடமாடிக்கொண் டிருக்கின்றனர். சிலர் உட்கார்ந்து பேசிக்கொண் டிருந்தார்கள். முத்துக்கருப்பன் செட்டியாருக்கு நெருங்கின பந்துவும் சமீபத்தில் மலாய் நாட்டிலிருந்து வந்தவருமான சிவநேசன் செட்டியார் தமக்கு அன்று காரைக்குடியிலிருந்து வந்த தனவைசிய ஊழியன் பத்திரிகையை வெகு கவனமாகப் படித்துக்கொண்டு வெளித்திண்ணையில் உட்கார்ந்திருந்தார். ஒரு வைதீகப் பிராமணன் வந்து முத்துக் கருப்பன் செட்டியாரிடமும் மற்றவர்களிடமும் தனது எளிமையைப்பற்றி தனக்கு லாபமுண்டாகத் தக்கதாக முகமன் கூறிக்கொண்டிருந்தான். சிவநேசன் செட்டியார் ஒரு கோடியில் உட்கார்ந்து வாசித்துக் கொண்டிருப்பதைக் கண்டதும் அந்தப் பிராமணன் அவரையணுகி "செட்டியார் வந்தது எப்போ?" என்று கேட்டுக்கொண்டே பக்கத்துத் திண்ணையில் உட்கார்ந்தார். செட்டியார், "சுவாமி வாருங்கள். நான் வந்து நாலைந்து தினங்களாகிறது" என்று கூறிவிட்டு மீண்டும் பத்திரிகையின்மீது கவனத்தை செலுத்தலானார்.

தனது பிராமண சமுகத்தைக் கண்டவுடனே பத்திரிகையை தூர எறிந்துவிட்டு தன்னைக் கவனிக்காமலும் நமஸ்கரிக்காமலும் செட்டியார் பத்திரிகைமீதே கருத்தாயிருப்பதை உணர்ந்த பிராமணன் தான் இனிச்சும்மா பார்த்துக்

கொண்டிருந்தால் காரியம் நடவாதென்று கருதினவர்போல விசுக்கென்றெழுந்து செட்டியார் இருந்த திண்ணைக்குப் போய் அவருக்கு எதிராக இருந்துகொண்டு பத்திரிகையில் லயித்திருக்கும் செட்டியார் கவனத்தை கலைக்கத்தக்க உரத்ததொனியிலே ஒரு சமஸ்கிருத சுலோகத்தைச் சொன்ஞர். செட்டியாருக்காவது, அங்கிருந்த மற்றவர்களுக்காவது சமஸ்கிருதம் தெரியாதாகையால், அவர் சொன்னதில் எத்தனை தப்புகளும் தவறுகளும் இருந்தனவென்று தீர்மானிக்க முடியவில்லை. அவர் சமஸ்கிருத வார்த்தைகளை அழுத்தி உச்சரித்து திருப்பித் திருப்பிச் சொன்னபின், சினேகம், தானம், விருந்தோம்பல் ஆகிய மூன்றும் முக்கியமான தர்மங்களென்று அந்தச் சுலோகம் குறிப்பிடுவதாக தமிழிலே அர்த்தம் சொல்ல ஆரம்பித்தார்.

பிராமணன்.—"சினேகமே அதிமுக்கியம்; சினேகமே மனுஷரை உயர்த்துவது; சினேகமே தேவர்களுக்குப் பிரியமானது. அப்படியே தானமும் சிறந்தது. தானமே தலை காக்கும். தானம் செய்யாத ஜென்மம் இருந்தும் பயனில்லை. இனி விருந்தோம்பல் என்ருல் பிக்ஷை என்று வந்தபேர்களை ஆதரித்தல். ரெம்பசிலாக்கியமான தர்மம் இதுதான்."

என்று பின்னும் வருணிக்க ஆரம்பிப்பதைக் கண்ட செட்டியார் அந்தப் பிராமணனுக்கு ஏதாவது சொல்லியனுப்பாவிட்டால், தான் பத்திரிகை வாசிக்கமுடியாதென்று நினைத்து பிராமணனைப் பார்த்து, "நீங்கள் சொல்லுகிறது போல சினேகம் விசேஷந்தான். ஆனுல் சினேகம் சினேகமென்று வெறுமனே சொல்லிக்கொண்டிருந்தால் மாத்திரம் சினேகம் ஏற்படுமா? சினேகம் ஏற்படத்தக்க முறைகளைக் கையாடினுல் தானே சினேகம் வளர்ச்சிபெறும்," என்ருர்,

பிராமணன்.—"ஆம் அப்படிப்பட்ட தர்மங்களைக் கையாடவேண்டியதுதான். ஆனால் இப்போ காலங் கெட்டுப் போச்சுது. சாஸ்திரங்களைப் படிப்பாரில்லை, சமஸ்கிருத பாஷைக்கு மதிப்பில்லை. நீசபாஷையாகிய இங்கிலீஷ் விருத்தியடைந்து வருகிறது."

செட்டியார்.—"சாஸ்திரங்கள் சமஸ்கிருதத்தில் இருந்தாலும் நமது தாய்ப்பாஷை தமிழ்தானே. இப்பொழுது நீங்கள் பேசுவது தமிழ் பாஷை யல்லவா? அந்நிய பாஷைகள் வரப்போய் தமிழ் ஆதரிப்பாரின்றி க்ஷீணித்துவிட்டது. நம் தாய்ப் பாஷையைத்தான் ஒவ்வொருவரும் மதிக்க வேண்டும். அதிருக்க, நீங்கள் இங்கிலீஷ் பாஷை நீச பாஷையென்று சொல்வது சரியா? அது துவேஷத்தைக் காண்பிப்பதுபோலாகிறதே. தற்சமயம் உலகத்தில் பிரபலமாய் வழங்கி வரும் பாஷைகளில் இங்கிலீஷ் பாஷையே முக்கியமானது. தற்கால சாஸ்திர ஞானமும், வியாபார விபரங்களும் அதில் நிறைந்து கிடக்கின்றன. மேலும் எதையும் துவேஷமாய்ச் சொல்லுவதும் சரியல்ல."

பிராமணன்.—"ஆமாம் நீங்கள் சொல்றதும் சரிதான், ஆனால் அந்தப்பாஷை வரப்போய் தருமங் குறைந்துவிட்டது. வருணாசிரம தர்மம் நிலைகுலைந்து நிற்கிறது. பிரம்ம க்ஷத்திரிய, வைசிய, சூத்திரன் என்ற தாரதம்மியம் இல்லை. பறையன், பள்ளன், பிராமணன் என்கிற பேதாபேதங்கூட மாறி பிராமண விசுவாசமே அனேகமாய்க் குறைந்து போச்சு."

செட்டியார்.—"சற்றுப்பொறுங்கள் ஜாதியைப்பற்றி நீங்கள் சொல்வதை நான் ஒப்புக்கொள்ளமுடியாது. ஜாதி விஷயமாய் நான் இங்கே பேசப்பிரிமில்லை. பேசவேண்

டிய இடத்தில் அவ்விஷயமாய்ப் பேசிக்கொள்ளலாம். பிராமண விசுவாசம் என்று சொன்னது சரியல்ல. எல்லாரிடத்திலுமே விசுவாசமும், அன்பும் காண்பிக்கவேண்டும். ஒரு வகுப்பாரிடம் விசுவாசம் பாராட்டுவதனுல், மற்றவர்கள் பொருமைப்படவும், துவேஷங் கொள்ளவும் ஏதுவாகும். துவேஷத்தை விருத்திசெய்யத்தக்க எவ்விதச் செய்கையும் கூடாது. ஜீவர்கள் எல்லாரிடமும், சிறப்பாய் மனிதர் அனைவரிடமும் சமமாய் அன்புபூண்டொழுகலே வேண்டும். பேத மிருக்கக்கூடியதுதான். பேதமில்லாமல் எல்லாரிடத்தும் கல்யாண சம்பந்தம் வைத்துக்கொள்ளவேண்டுமென்று யாரும் சொல்லுவரவில்லை. ஆனுல் பேதம் இருக்கவேண்டிய இடத்திலும் சந்தர்ப்பத்திலு மிருக்கவேண்டுமே தவிர எல்லா விடங்களிலும் எல்லா விஷயங்களிலும் அநாவசியமாக, துவேஷத்தை எழுப்பத்தக்க விதமாக, பேசுதலும், நடத்தலும் அவசியமல்ல."

பிராமணன்.—"ஆம். அது வாஸ்தவந்தான். ஆனுல் பிராமண ஜென்மத்துக்கும் மற்ற ஜென்மங்களுக்கும் வித்தியாசமில்லையா? முந்தின ஜென்மத்தில் செய்த புண்ணிய கிரியைகளின் பலனுக பிராமண ஜென்மம் கிடைக்கிறது. பிராமணுளுக்கு வலது கையிலே மூன்றுவித அக்கினிகளிருப்பதாய்ச் சாஸ்திரங்களிலே சொல்லியிருக்கு. அதனுலேதான் பிராமணுள் மற்றவர்களுக்கு ஆசீர்வாதம் சொல்லும்பொழுது வலதுகையைத் தூக்காமல் இடது கையை உயர்த்தி ஆசீர்வாதம் கூறுரு. வலதுகையைத்தூக்கிணுல் அக்கினி பற்றிடும். (செட்டியார் தனக்குள்—"அப்படி அக்கினி பற்றுமானுல், எந்தச் செட்டியார் தயவையாவது சம்பாதிக்க விரும்பும் பிராமணர்கள் அந்தச் செட்டி

யாராவது ஆச்சியாவது ஆடுவேண்டுமென்ருலுங்கூட 'எங்கிட்ட சொல்லுங்களேன் நான் போய்க்கொண்டுவர்றேன்' என்று போய்த் தாங்களே ஆடுகளைத் தூக்கிப்பார்த்து பிடித்து வருகிருர்களே. அப்பொழுது அவர்கள் வலது கையிலிருக்கும் அக்கினி அந்த ஆட்டை தகிக்கிறதில்லையே. ஒருவேளை ஏமாந்த சோணகிரிகளான சூத்திரரை மாத்திரம் அது பஸ்மீகரித்து விடும்போலும், என்று எண்ணி புன்சிரிப்புடன் கேட்டுக்கொண்டிருந்தார்). ஆகையால் பிராமண ஜென்மத்துக்கு கௌரவம் குறையலாகாது. கொஞ்சம் கேட்கணும் செட்டியாரே' நானும் முந்தின ஜென்மத்தில் செய்த புண்ய வசத்தால் இந்தப்பிராமண ஜென்மம் எனக்குக் கிடைத்திருக்கு. என்ருல் இயன்ற மாத்திரம் நியமநிஷ்டைகளை சரியாகச்செய்து வருகிறேன். இந்தப் பிராமண ஜென்மத்திலிருந்து இதுக்குமேற்பட்ட தேவ ஜென்மத்துக்காகப் பிரயாசைப்படவேண்டும். படிப்படியாய்த்தான் போகவேண்டியிருக்கு. பந்தபாசங்களையறுத்து ஞானவழியில் நின்று முக்தியடைய நமக்குப் பிராப்தமில்லை. கிரியா வழியாய்த்தான் மெதுவாகப்போகவேண்டும். எங்க தொகப்பருக்கும். ஒங்க அப்பாவுக்கும் கண்ணுக்குக் கண்ணுன இஷ்டம். அவர் சிங்கப்பூரிலிருந்து ஊருக்குவரும் பொழுதெல்லாம் எங்க தொகப்பனை அழைத்தனுப்பி க்ஷேமம் விசாரித்து எங்க தொகப்பனர், வீட்டுக்குத் திரும்பும்போது நூறோ ஐம்பதோ நோட்டுகளாக அல்லது பவுன்களாக கடிதாசியில் மடித்துக்கொடுத்து அவரை அனுப்புவது வழக்கம். இப்போ நீங்களெல்லாம் தலையெடுத்து நல்ல அந்தஸ்தில் இருக்கிறீர்கள். என்னவோ நானும் இந்தப் பிராமண ஜென்மத்திலே பிறந்து அவஸ்

தைப் பட்டுக்கொண்டிருக்கிறேன். பந்தம் விடுறேன் என்கிறதா? இல்லை. இரண்டு மூன்று வருடமாய் ஒரு வீடு கட்டும்படி முயற்சித்து இப்போதான் நடந்துவருகிறது. செலவுக்குத்தான் தொகை குறையறது. ஏதும் உதவி செய்யவேண்டும்.''

செட்டியார்.—(தனக்குள்) "ஓகோ, இந்தப்பிராமணன் சினேகத்தையும் தானத்தையும் பற்றிப்பேசின தெல்லாம் நம்ம ரூபாய்க்கு உலைவைக்கத் தானே? இவ்வளவுநேரம் போட்டுக்கொண்டிருந்த ஞானப் போர்வையை எடுத்துவிட்டு இப்பொழுதுதான் ஆசாமி தன் சுயநல ரூபத்தை வெளிப்படுத்துகிறான்,'' என்று எண்ணி சிரித்துக்கொண்டே "சரி, சரி'' என்று சொல்லி தலையை அசைத்தார்.

பிராமணன்.—"புராணங்களிலே சாகரப்பட்சி என்றொரு பறவையைப்பற்றிக் கூறப்பட்டிருக்கிறது. அது தாகத்துக்கு ஜெலம் சாப்பிட்டால் தொண்டையிலிருக்கிற துவாரத்தின் வழியாக எல்லாம் கீழே ஒழுகிவிடும். ஏனென்றால் அதன் கழுத்திலே துவாரமுண்டு. ஆகையால் அது தலையைத்தூக்கி வாயைத்திறந்துகொண்டு மழைபெய்து அந்த ஜெலம் தன் வயிற்றில்போய்ச் சேரும்படி ஆகாசத்தைப் பார்த்தவண்ணமாகவே நின்றுகொண்டிருக்குமாம். அதைப்போல பிராமணனாகிய நானும் எனது குறையைத் தீர்க்க உங்களை எதிர்நோக்கிக் கொண்டிருக்கிறேன்.

செட்டியார்.—"என்னபட்சி அது சாகப்பட்சியா?''

பிராமணன்.—"சாகரப்பட்சி, சாகரப்பட்சி.''

செட்டியார் அங்கிருந்த இன்னொருவரைப் பார்த்து அப்படி ஒருபட்சி உண்டா என்று வினவ, அவர்,'' "நான் கேள்விப்பட்டதில்லை. ஆனால் அது நாட்டிலே உள்ள பட்சி

தானோ அல்லது மனோராஜ்யத்திலே உருவெளித் தோற்ற மாய்க் காணப்படும் பட்சியோ தெரிந்துகொள்ளவேண்டும்'' என்றார்.

பிராமணன்.—"என்னமோ சாகரப்பட்சி என்று புரா ணங்களிலே சொல்லியிருக்கு. அதுதான் தெரியும் எனக்கு. அதிருக்கட்டும். செட்டியாரே நான் சொல்வதைக்கேட்க வேணும். என்னவானாலும் நான் பிராமண ஜென்மம் ஓங்க ஜாதியைவிடக் கொஞ்சம் உயர்ந்த வருணத்திலே பிறந்திரு க்கேன். அதற்காகவாவது எனக்குப் பெருமை கொடுக்க வேண்டும். பிராமணருக்குத் தானம் செய்வது விசேஷ மென்று சாஸ்திரம் சொல்லுது. நானும் பிராமணன் கேட் டிட்டேன். பதினைந்தோ, இருபதோ, நூறோ உங்களிஷ்டம் போல கொடுக்கலாம். உங்களைப்போல பிரபுக்களுக்கு அது ஒரு லக்ஷியமில்லை.''

செட்டியார்.—(தனக்குள்) "என்ன இந்தப் பிராம ணன் பிக்ஷைகேட்க வந்தால் மரியாதையாய்ப் பேசியாவது பிக்ஷை கேட்காமல் என் முகத்துக்கு முன்னால் தானே என்னைக் கீழ்ஜாதி யென்றும், தன்னை மேல் வருணமென் றும் சொல்லித்தானா கேட்கவேண்டும்? ஜாதி என்ற வார்த் தையைக்கூட மாற்றி, தன் குலத்தைப்பற்றிப் பேசும்பொ ழுது "வருணம்,'' என்று சொல்லவேண்டுமா? என்ன ஒரு மமதை! தலையிறங்க நம்மைக் கேவலமாய் பேசியல்லவா நமது பணத்தையும் பிடுங்குகிறார்கள். இப்படியெல்லாம் நடக்கிறதே நம் நாட்டில்; இதெல்லாம் ஈசனுக்கே வெளிச் சம், என்று எண்ணியவராக மேலுக்குப் புன்னகைசெய்து "பார்ப்பானுக்கு வாய்ப்போக்காதே'' என்பதை எண்ணாது "சரி, எல்லாம் பார்த்துக் கொள்ளலாம், இப்பயென்ன அவ

சரம், போய்வாருங்கள்" என்றுகூற, பிராமணன் "தயவிருக்கணும்" என்று சொல்லிப் போனார்.

அவர் போனபின் சிவநேசன் செட்டியார் அங்கிருந்த ஒருவரைப் பார்த்து "பாருங்கள், பிராமணர்கள் ஏதும் தொழில் செய்து பிழைக்கவழி தெரியாமல் இப்படி இரந்து திரிகிறார்கள். "ஏற்பதிகழ்ச்சி," "தோழனோடும் ஏழைமை பேசேல்" என்ற ஔவை மொழிகளுக்கு முற்றும் விரோதமாக இவர்கள் எல்லாரிடத்திலும் தங்கள் ஏழ்மைத்தனத்தைப்பற்றிச் சொல்லி இரந்துண்டு ஜீவிப்பது எவ்வளவு பரிதாபம். அவர்களில் படித்தவர்கள் மிகுந்திருந்தும் இப்படிப்பட்டவர்களுக்கு சுயமரியாதையையும் ஒழுக்கத்தையும் போதிக்க ஒருவரும் முயற்சி செய்யவில்லையே. இது விசனமானகாரியம். நம்மைப் போன்றவர்கள் கொடுக்கும் பூரிமுதலான தானங்களை நம்பி இந்தப் பிராமணர்கள் தர்மநெறி மறந்து சோம்பித்திரிவது நமது நாட்டுக்குப் பெருமையல்ல" வென்று சொல்லிக்கொண் டிருந்தார்.

இந்தச் சமயத்தில் கலகலவென்ற சப்தத்துடன் ஒரு குதிரைவண்டி வந்து அந்த வீட்டுவாயிலில் நின்றது. உள்ளிருந்து ஸ்தூல தேகியான ஒருவர் இறங்கினார். அவர் யாரென்று விசாரித்ததில் புதுவை ஞானசீல பாகவதர் என்றும் இரவு கலியாணவீட்டில் கதாகாலக்ஷேபம் நடத்தும்படி தருவிக்கப்பட் டிருக்கிறாரென்றும் வெளிப்பட்டது. அவர் தென் ஜில்லாக்களில் விசேஷ பிரபலம் பெற்றவரென்று அங்கிருந்த ஒருவர் கூறினார். அவருக்கு 400 ரூபா தொகை பேசி வழிச்செலவுக்குப் பணமும் தந்தி மணியார்டர் செய்தார்களென்று பின்னால் தெரியவந்தது.

கலியாணம், சாந்திமுதலிய விசேஷகாலங்களிலே கதா

காலட்சேபம், சங்கீத கச்சேரி, நடத்துவது வைசியமண்டலத்திலே வழக்கம். அந்த விசேஷங்களுக்கு வந்திருக்கும் விருந்தினரைச் சந்தோஷப் படுத்தவும், அவ்விசேஷங்களைச் சிறப்பிக்கவுமே இவ்விதக் காலட்சேபங்கள் நடத்தப் படுகின்றன.

கதாகாலட்சேபமானல் சந்தோஷத்தை யுண்டாக்குவதுமன்றி மனோகரமான வழியிலே சன்மார்க்க போதனைகளைப் பரப்பவும் இடமுண்டாகிறது. கதாகாலட்சேபம் எல்லாருக்கும் பிரியமானது. ஆனல் செட்டி நாட்டிலே கதை நடத்தும் அநேக பாகவதர்களும், பண்டிதர்களும் அந்தச் சிறந்த தொழிலுக்கு ஒரு சிறிதும் அருகரல்லர்.

முதலாவது, பெரும்பான்மையான பாகவதர்களுக்கு சரியாய் கதாப்பிரசங்கம் செய்யத்தக்க கல்வியிருப்பதில்லை. இரண்டாவது கதையின்மூலமாய் மதநெறிகளையும் சன்மார்க்கபோதனைகளையும் ஜனங்களுக்கு புகட்ட வேண்டுமென்று அவர்கள் பிரசங்கம் செய்வதில்லை. வருவாயை உத்தேசித்தே கதை நடத்த முன்வருகிறார்கள். அதனல் ஜனங்களுக்கு பிரீதியான வேடிக்கைப் பேச்சுகளையும் விநோதக்குறிப்புக்களையுமே விஸ்தரித்து கிடைக்கிற பணத்தை வாங்கிக்கொண்டு "நானும் கதாப்பிரசங்கம் செய்தேன்" என்று சொல்லி பாகவதர் பட்டத்தை சூடிக்கொள்ளுகிறார்கள்.

"சொன்னதை சொல்லும் கிளிப்பிள்ளை" என்பது இத்தகைய பாகவதர்களுக்கும் பண்டிதர்களுக்குமே பொருந்தும். படித்த பாடல்களையும் கதைகளையும் திருப்பிச்சொல்ல மாத்திரம் அவர்களுக்குத் தெரியும். சிலருக்கு அதுவும் தெரியாமல் திண்டாடுவது முண்டு.

ஒருநாள் ஒரு தமிழ் வித்துவான் உட்கார்ந்து ஒரு

தேவதையின்மேல் கவிசெய்துகொண்டிருந்தார். அங்கே வந்த இன்னொருவரிடம் அவர் தமது கவிகளைக் காண்பிக்க அவர் அதைப் பார்வையிட்டு "பண்டிதரவர்களே கவியின் அமைப்பு நன்றாய்தானிருக்கிறது. ஆனால் கருத்துகள் ஒன்றும் புதிதாய் இல்லையே. புதிய கருத்துகளை புகுத்தியிருந்தால் இன்னும் சிறப்பாக இருக்குமே." என்க, புலவர் "புதியகருத்து என்ன இருக்கிறது? எல்லாவற்றையும் தான் முன்னோர்கள் சொல்லிவிட்டுப் போயிருக்கிறார்களே. அவர்களுக்குத் தெரியாத புதியகருத்து என்னவுண்டு?" என்றார்.

மற்றவர் "ஐயா, நீங்கள் சொல்லுகிறபடியே வைத்துக் கொள்ளுவோம். முன்னோர் சொன்ன விஷயங்களை எல்லோரும் எளிதில் உணரத்தக்க திருஷ்டாந்தங்களுடன் புதிய நடையிலே எழுதலாமே," என்றார்.

புலவர்.—"முன்காலத்துப் புலவர்கள் வரம்பெற்று பாடினார்கள் அதனால் அவ்வளவு சிறப்பாய்ப் பாடமுடிந்தது. நம்மால் அப்படி பாடமுடியுமா ?

மற்றவர்.—மற்ற தேசத்துப் புலவர்கள் இன்றைக்கும் சிறப்பான கவிகளும், காவியங்களும் செய்கிறார்களே. அவர்களுக்கு வரங்கொடுக்கிற கடவுள் தமிழ்நாட்டு பண்டிதர்களுக்குக் கொடுக்கமாட்டாரா ? தமிழ் நாட்டிலும் பல புலவர்கள் நவநவமாய்க் கவிகள் செய்யவில்லையா ?"

புலவர்.—" ஆம் ஐயா, நீங்கள் இப்படித்தான் பேசுவீர்கள் " என்றுசொல்லி மௌனம் சாதித்தார். மௌனஞ் சாதிக்காமல் வேறென்ன செய்கிறது ?

ஒரு தடவை ஒரு சங்கத்தின் ஆறுதுவருட பூர்த்திக் கொண்டாட்டம் நடைபெற்றது. சங்க அங்கத்தினரும்

நண்பர்களும் வந்திருந்தனர். ஆறுவருட காலமாய் அந்தச் சங்கம் செய்திருக்கும் வேலைகளையும் அதனால் ஏற்பட்ட நன்மையையும் பற்றிச் சிலர் பேசினார்கள். அந்தச் சபையில் உருவத்தில் பெரிய ஒரு புலவரும் வந்திருந்தார். அவரையும் சங்கவிஷயமாய் ஒரு சிறு பிரசங்கம் செய்யும்படி கேட்டுக்கொண்டார்கள். புலவர் எழுந்து நின்றார் பிரசங்கிக்க. ஆனால் சங்கத்தையும் அதன் வேலையையும் பற்றி ஒருவார்த்தையும் பேசவில்லை. உடனே சிபி சக்கிரவர்த்தி கதையை எடுத்துக்கொண்டு பிரசங்கிக்க ஆரம்பித்தார். இப்படி ஆரம்பித்து பிறகு பேசவேண்டிய விஷயத்துக்கு வந்துவிடுவார்; புலவரல்லவா அவ்வளவு சாமர்த்தியம் இல்லாமலிருக்குமா என்று எண்ணி எல்லாரும் கேட்டுக்கொண்டிருந்தார்கள். ஒருமணி நேரமாகிவிட்டது. புலவர் இன்னும் சிபிசக்கிரவர்த்தி கதையிலேதான் இருக்கிறார். "இது புலவர் அல்ல; கற்றதைச் சொல்லும் கிளிப்பிள்ளை" என்று எல்லாருக்கும் தெரிந்தது. உடனே அந்த சங்கத்தின் காரியதரிசி எழுந்து புலவரை அணுகி, சிபி சக்கிரவர்த்தி கதையைக் கட்டிவைத்துவிட்டு சங்கவிஷயமாய் சிலவார்த்தைகளைச்சொல்லி உட்காரும்படி அவர் காதிலே ஓதினார். புலவரோ அதையும் கவனியாமல் தாம்படித்த பாடல்களை யெல்லாம் சொல்லி அவற்றுக்குப் பதவுரையும் பொழிப்புரையும் கூற ஆரம்பித்துக்கொண்டார். கடைசியில் சபாநாயகர், புலவர் பேச்சை நிறுத்தி அவரை உட்காரும்படி செய்யவேண்டியதாயிற்று. சங்கத்தின் ஆறுவது வருடாந்தக் கொண்டாட்டமாகையினால், அந்தச் சங்கம் கடந்த ஆறுவருடங்களில் செய்திருக்கும் வேலைகளையும், வருங்காலத்தில் செய்ய எதிர்பார்ப்ப

தென்னவென்றும், அதனுலேற்பட்டுள்ள நன்மைகள் என்னென்ன வென்றும் விவரித்து சிலநேரம் பேசி உட்கார்ந்துவிடவேண்டியதுதான் புலவருடைய வேலை. ஆனுல் அந்தச் சந்தர்ப்பத்தில் என்னவிதமாய் பேசுகிறதென்று புலவருக்குப் புலப்படவில்லை. ஆகையினுல் தமக்குத் தெரிந்த கதையைக் கூறி பாடல்களையும் சரமாரியாகப் பொழியலானுர். இத்தகையோரை புலவர் என்னலாமா?

ஒரு ஊரிலே தானபரிபாலன சங்கம் ஒன்று இருந்தது. தன்னை தமிழ்வித்துவான் என்று சொல்லிக்கொண்ட ஒருவர் அதன் காரியதரிசியாயிருந்தார். ஒரு நாள் அச்சங்க அக்கிராசனுதிபதிக்கும் காரியதரிசிக்கும் பின்வரும் சம்பாஷணை நடந்தது. அக்கிராசனுதிபதி "வண்டிக்காரனுக்கு வாடகை $2\frac{1}{2}$ ரூபா கொடுத்துவிட்டீர்களல்லவா?"

காரியதரிசி.—"இரண்டு ரூபாதான் கொடுத்தேன், நீங்கள் கூட எட்டணு கொடுக்கிறதாகச் சொன்னீர்களென்று கேட்டான். நான் எனக்குச் சொல்லவில்லை என்று விட்டேன்."

அக்கிராசனுதிபதி.—"நான் உங்களிடம்தான் அவனுக்கு $2\frac{1}{2}$ ரூபா கொடுக்கும்படி சொல்லியிருந்தேனே. திட்டமாகச் சொன்னேனே."

காரியதரிசி.—(மேலும் கீழும்பார்த்து பல்லையிளித்துக் கொண்டு).—"ஆமாம் நீங்கள் சொன்னதுதான். ஆனுல் நான் அவனிடம் அப்படி ஒரு மிரட்டு மிரட்டினேன். அவன் 2 ரூபாயையும் பேசாது வாங்கிக் கொண்டுபோய் விட்டான்." என்று ஏதோ ஓர் சாமர்த்தியமான காரியத்தைச் செய்து முடித்தவர்போல சொன்னுர். பாருங்கள் இந்த தமிழ் வித்துவானுடைய யோக்கியதையை! ஏழை

வண்டிக்காரனிடம் மனமாரப் பொய்சொல்லி அவனுக்கு கொடுக்கவேண்டிய எட்டணுவைக் கொடாமல் அவனை ஏமாற்றிவிட்டு, பிறகு அந்த இழிசெயலைப்பற்றி பெருமையாகப் பேசிக்கொள்வது ஒரு தமிழ் பண்டிதருக்கு அடுக்குமா? இத்தகைய மனிதருடைய பரிபாலனத்தில் தமிழ் பாஷையும், பொதுநல ஸ்தாபனங்களும்விடப்பட்டிருந்தால் அவற்றின் கதி என்னுகுமென்பதை வாசகர்களே ஊகித்துக் கொள்ளட்டும். இந்த வித்துவான் ஒருதடவை சிலகவிகள் செய்து ஒருதுண்டுப் புத்தகமாக அச்சிட்டார். அதின் முதல் பக்கத்தில் இஃது, முத்தமிழ் வித்துவான் ஸ்ரீமான். அரசேந்திரர் அவர்களால் இயற்றப்பட்டது'' என்று அச்சிட்டிருந்தது. அதைப்பார்த்த சிலர் இந்த வித்துவான் தன்னைத்தானே முத்தமிழ் வித்துவான், ஸ்ரீமான், முதலிய வார்த்தைகளால் கௌரவித்துக் கொள்ளுவது தகுமோ வென்று பேசிக்கொண் டிருந்தார்கள். அதைக் கேட்டுக் கொண்டிருந்த ஒருவர் சொன்னுர்:—

''அவருடைய ஆசைதீர அப்படிச் செய்திருக்கிறுர் போலிருக்கிறது. வேறே யார் அவரை முத்தமிழ் வித்துவான் என்று கௌரவிக்கப் போகிறுர்கள்? இதைப்பற்றிப் பேசுகையில் எனக்கு ஒரு விஷயம் ஞாபகம் வருகிறது. என்னவெனில் நான் சிறுவனுயிருக்கும்பொழுது ஒரு சிற்றூரிலுள்ள பாடசாலையில் படித்துக்கொண் டிருந்தேன். அந்தவூரில் புதிதாக தபாலாபீஸ் ஸ்தாபித்தார்கள். வெளியூரிலிருந்து வந்து அந்தப் பள்ளிக்கூடத்தில் படிக்கும் பையன்களுக்கு தபாலில் கடிதங்கள் வந்தன. அதைப்பார்த்த உள்ளூர்ப் பையன்களுக்கு, தங்களுக்கும் அவ்விதமாக தபாலில் கடிதம் வரவேண்டுமென்று ஆசையுண்டாயிற்று.

ஆசையுண்டானாலும் யார் அவர்களுக்கு கடிதம் எழுதப் போகிறது? ஆகையால் அவர்கள் ஒரு உபாயம் செய்தார்கள். போஸ்ட்கார்டுகளை வாங்கி தங்கள் பெயருக்கு தாங்களே கடிதமெழுதி தபால் கொண்டுவருகிறவனிடம் கொடுத்து அவற்றை அடுத்தவூரில் தபாலில் போடும்படி கேட்டுக் கொண்டனர். அவனுக்கு வெற்றிலைசெலவுக்கும் துட்டு கொடுத்தார்கள். இரண்டு நாட்களுக்குள் அந்தக் கடிதங்கள் தபாலில் வந்து தபாற்காரனால் இவர்களுக்குக் கொடுக்கப்பட்டன. உண்மையான கடிதம் வரப்பெற்றவர்கள் போலவே அவர்களும் அந்தக் கார்டுகளை படித்து மகிழ்ந்து தங்கள் ஆசையைத் தீர்த்துக்கொண்டார்கள். அதைப்போல இந்த வித்துவானும் தமது ஆசைதீர "ஸ்ரீமான்" என்றும், "முத்தமிழ் வித்துவான்" என்றும் எழுதியிருக்கிறார். அவர் ஆசையை நாமேன் கெடுக்கவேண்டும்" (என்றார்).

எல்லாரும் புன்னகை செய்தனர்.

இன்னொரு வித்துவானையும் நாம் சந்திக்க நேர்ந்தது. அவர் ஒரு தனவான்மீது சில கவிகளைப் பாடிக்கொண்டு வந்து அந்த தனவானை நத்தித்திரிந்தார். அவர் தம்மை ஒரு வித்துவான் என்று சொல்லிக்கொண்டதனால் மாத்திரம் அவரை வித்துவானென்று இங்கே கூறுகிறோமே தவிர ஒரு வித்துவானுக் கிருக்கவேண்டிய கல்வி அவரிடமில்லை. அவர் எழுதிக்கொண்டு வந்திருந்த கவிகளில், ழகாரத்துக்கு ளகாரமும், மெல்லினத்துக்கு, வல்லினமும் மாற்றி மாற்றி உபயோகிக்கப்பட் டிருந்தன. அப்படி எழுத்துப் பிழைகள் ஏராளமாயிருந்தாலும் பாட்டுகள் பாட்டுகள்தானே. அந்தப் பாட்டுகளைத் தனவந்தரிடம் காட்டி பரிசுபெறலாமென்று பலவருடங்கள் (!) அவர் காத்திருந்தும் அந்தத்

தனவான் அவருக்கு முகங்கொடுத்துப் பேசாததால் தமது பாடலை அரங்கேற்ற முடியாமல் அந்த வித்துவான் வெகு கஷ்டப்பட்டார். அப்படியிருக்க, ஒருநாள் இராமயாண காலட்சேபம் நடந்தது. அநேக கனவான்கள் வந்திருந்தனர். மேற்குறிப்பிட்ட தனவானும் வந்திருந்தார். நமது 'வித்துவான்' இதுதான் தருணமென்று சபைத்தலைவருடைய உத்தரவு இல்லாமலே திடீரென்று எழுந்து தாம் பாடிவந்த பாடலை ராகமிழுத்து படிக்கத்துவங்கினார். எல்லாருக்கும் வேடிக்கையா யிருந்தது. அந்தத் தனவானுக்கு லஜ்ஜையாயிருந்தது. இராமகதை நடக்கும்பொழுது நாஸ்துதியாவென்று சிலர் வருத்தப்பட்டனர். சபாநாயகர் வித்துவான்மேல் சீறி, அந்தச் சபையில் எழுந்து பாடும்படி யார் அனுமதி தந்ததென்று கேட்க வித்துவான் பதில் சொல்ல மாட்டாமல் விழித்தார். அவருடைய பாண்டித்யம் அன்று வெளிப்பட்டது. இப்படிப்பட்ட புலவர்களும், பாகவதர்களும் மலிந்துகிடக்கிறார்கள். 15 ரூபா முதல் 50 ரூபா வரையில் பணம் வாங்கிக்கொண்டு கதை நடத்துவது இவர்களின் தொழில், வைசிய மண்டலத்துக்கு இவர்கள் வருகிறதாயிருந்தால் நூற்றுக்கணக்காகக் கொடுக்கவேண்டியிருக்கும். பட்டணங்களில் ஒரு கதைக்கு 40 ரூபா சம்பாதிக்கும் பாகவதவர்களும், அதற்கே லாட்டரி போடுபவர்களும் செட்டிநாட்டுக்குவருகிறதானால் 400 ரூபாயும் செலவும் கேட்பார்கள். தனவைசியர்களோ வந்துள்ள வருந்தினரை சந்தோஷப் படுத்துவதற்காக காலட்சேபம் நடத்துவதில்லை. அடுத்தவீட்டு அண்ணாமலை செட்டியார் 500 ரூபா கொடுத்து அருப்புக் கோட்டை அநந்தநாராயண பாகவதரை அழைப்பித்தால்,

எதிர்வீட்டு ஏகப்ப செட்டியார் 800 ரூபா கொடுத்து எதிராஜபுரம் ஏகாம்பர பாகவதரை தருவிக்க வேண்டு மென்று எண்ணுவார். கதை நன்ருயிருந்தாலும் சரி, இல் லாவிட்டாலும் சரியே, மற்றவர்கள் காலட்சேபத்துக்கு செலவழித்ததைவிட தான் அதிகம் செலவுசெய்ய வேண்டு மென்பதே ஒவ்வொரு தனவைசிய சீமானின் நோக்கமா கும். "இன்னுர் கலியாணத்துக்கு எண்ணூறு ரூபாவரை செலவுசெய்து சென்னை பட்டணத்திலிருந்து இன்ன பாக வதரை தருவித்திருந்தார்கள்" என்று சிலர் தங்களைக் குறிப் பிட்டு பேசி விடுவார்களானுல் போதும். அதுவே கிடைத் தற்கரிய பெரும்பேறு என்று அவர்கள் எண்ணுகிருர்கள் போலும்.

இவ்விஷயங்களை நன்ருய் உணர்ந்த பாகவதர்கள் கதை நடத்துகிறேம் என்று சொல்லிவந்து ஏதாவது ஒரு குறிப் பிட்ட கதையைத் தொடங்கி, தாங்கள் கற்றுள்ள பாடல் களை யெல்லாம் சொல்லி நேரத்தைக்கழித்து பணத்தைச் சுற்றிக்கொண்டு போகின்றனர். பெண்பாகவதர்கள் என் ருல் இன்னும் விசேஷ அபிமானங்காட்டப் படுகிறது. இதையறிந்து நாடகக்காரிகளும், விலைமாதரும் காலட் சேபம் செய்யக் கற்றுக்கொண்டு வைசிய மண்டலத்துக்கு வந்து பெருந்தனம் திரட்டிச் செல்வதுண்டு. பெண்பாக வதர் காலட்சேபம் என்ருல் காலட்சேபத்துக்கு வரும்படி ஒருவரையும் வருந்தியழைக்க வேண்டாம். குறிப்பிட்ட நேரத்துக்கு ஒரு நிமிஷங்கூடத் தாமதியாமல் கதையை ஆரம்பிக்க எல்லாரும்வந்து உதவிசெய்வார்கள். கதை எக் கேடு கெட்டாலும், அதைப் பிரசங்கிக்கும் அம்மாளின் அலுக்கு குலுக்குகளும், அகசிய வசனங்களும், இளமுறுவ

வின் நேர்மையும் கேட்போர் மனதிலிருந்து ஒருபொழு தும் நீங்கா.

இனி கலியாணவீட்டில் என்ன நடக்கிறதென்று பார்ப்போம். காஸ் விளக்குகள் போட்டு வீடுமுழுவதும் ஜோதிமயமா யிருக்கிறது. முன்னூறுபேர் வரையில் உட் காரக்கூடிய ஒரு நீண்ட அறையில் ஜமுக்காளங்கள் விரிக் கப்பட்டு காலட்சேபத்துக்கென்று தயாராக்கப்பட்டிருந் தது. நூறு ரூபாவுக்குமேல் செலவு செய்து பலவித பலகா ரங்கள் செய்யப்பட்டிருந்தன. அதற்கென்று பலகாரம் செய்வதில் பாண்டித்யம் பெற்ற இருசமயற்காரர்கள் புதி தாக நியமிக்கப்பட் டிருந்தனர். முத்துக்கருப்பன் செட்டி யார் வீட்டில் சிறுபிராயமுதலே பணியாளனாக இருந்து வரும் சுப்பய்யா இவ்விஷயத்தில் அதிகச்சிரத்தை யெடுத் துக்கொண்டான்.

இரவு பத்துமணி ஆயிற்று. காலட்சேபம் துவங்கக் குறிப்பிட்டநேரம் அதுதான். ஞானசீல பாகவதர் காலட் சேபத்துக்கென்று தயாராக்கப்பட்டிருந்த அறையில் சந் தோஷத்தால் மலர்ந்த முகத்துடன், சற்றே பருத்த தொந் தியைத் தடவிக்கொண்டு உட்கார்ந்திருந்தனர். காலட் சேபத்துக்குப் போகும்படி எல்லோருக்கும் சொல்லப்பட் டது. சிலர் போனார்கள். மற்றவர்கள் காலட்சேபம் ஆரம் பிக்கட்டும் நாங்கள் வருகிறோம் என்று சொல்லிவிட்டு, வெற் றிலையை மென்றுகொண்டும் வெறும்பேச்சுப் பேசிக்கொ ண்டு மிருந்தார்கள்.

பத்தரை மணிக்குப் பாகவதர் கதையை ஆரம்பித்தார். சீதா கல்யாணத்தைப் பிரசங்கிக்க ஆரம்பித்து அதற்கு முன்னுரை கூறுவதிலேயே ஒருமணி நேரத்தைக் கழித்

தார். அதன்பின் கதையை ஆரம்பித்து முன்பின் சம்பந்தமில்லாமல் இடையில் வந்த விஷயங்களைப்பற்றி வருணித்துக்கொண்டும் தமக்குத் தோன்றிய டிராமாப் பாட்டுகளையும் விருத்தங்களையும் பாடிக் காலத்தைக் கடத்திக்கொண்டுமிருந்தார். கேட்டுக்கொண் டிருந்தவர்களில் ஒருவராவது இதைக் கவனிக்கவில்லை. அதிகப்பணம் கொடுத்து கதை நடத்தப்பட்டதென்ற ஒரு விஷயந்தானே அவர்கள் கவனிக்க வேண்டுவது!

பாகவதர் செய்யும் பிரசங்கத்துக்குப் போட்டியாக சபையோர் அங்கங்கே தங்களுக்குள் பல விஷயங்களையும் பற்றி சிறுசிறு பிரசங்கங்களும் தர்க்கங்களும் செய்துகொண்டிருந்தார்கள். சிறுவர் சிறுமிய ரெல்லாரும் தின்பண்டங்கள் எப்பொழுது பரிமாறப்படும் என்று பலகார தியானம் செய்துகொண்டிருந்தார்கள். 'இவர்களுக்கு சீக்கிரத்தில் தூக்கம் வராதா; காலட்சேபத்தை நிறுத்தும்படி நம்மைக் கேட்கமாட்டார்களா?'' என்று எண்ணிக்கொண்டே ஞானசீல பாகவதர் பிரசங்கித்துக்கொண்டு போகிறார்.

இதற்குள் பலகாரங்கள் தயாராகி வந்துவிட்டன. பிரசங்கம் கேட்டு இளைத்துப்போன விருந்தினருக்கு பலகாரம் பரிமாறுவதில் முத்துக்கருப்பன் செட்டியார் வீட்டுவேலைக்காரன் சுப்பய்யா வெகு சுறுசுறுப்புடன் மேல்விசாரணை நடத்திக்கொண் டிருந்தான்.

ஞானசீல பாகவதரின் பிரசங்கத்தையும் பாட்டுகளையும் கடைசிவரையில் தூங்காமல் விழித்திருந்து கேட்டவர்கள் வெகு சிலரே. மற்றவர்களெல்லாரும் உட்கார்ந்தபடியேயும் சாய்ந்துகொண்டும் தூங்கிவிழலானார்கள்.

நடுராத்திரி ஆகிவிட்டது. கதையை நிறுத்தும்படி

சொன்னார்கள். ஞானசில பாகவதரும், கோரியவரம் கிடைத்ததுபோல, சந்தோஷத்துடன் தமது பிரசங்கத்தை நிறுத்திவிட்டு, மேல்வேஷ்டியைக்கொண்டு வியர்வைதோன்றும் முகத்தைத் துடைத்துக்கொண் டிருந்தார்.

குறித்த ஒரு சரித்திரத்தை சொற்பொலிவு, பொருள் நயம் முதலிய லட்சணங்களுடன், கேட்போர் செவிக்கின்பம் தரும் பேரின்ப கீதங்களையும் இடையிடையே வருவித்து, வாக்குவல்லமையுடன் பிரசங்கம் செய்து அந்தச் சரித்திரத்திலிருந்து தெரிந்துகொள்ளக்கூடிய சன்மார்க்க போதனைகளை விவரிக்கவே அறிஞர்களான நம்முன்னோர்கள் கதாகாலட்சேபத்தை ஏற்படுத்தினார்கள். இப்பொழுதோ அது, கேவலம், சிற்றின்ப பொழுதுபோக்காக மாறிவிட்டிருக்கின்றது. அதுவும் நமது ஞானசில பாகவதர் போன்ற பாகவதர்களைக்கொண்டு நடத்தப்பட்டதானால் அவர்கள் எடுத்த கதையை தொடுத்து முடிக்க வகையறியாமல் கண்ட கண்ட விஷயங்களை யெல்லாம் தொடர்ந்து போய் டிராமா மெட்டுகளைப் பாடிக் காலத்தைக் கழித்து காலட்சேபத்தைப் பாழ்படுத்துகிறார்கள். ஆனால் இதை வைசிய மண்டபத்திலே ஒருவரும் கவனிப்பதில்லை. கதை முடிந்ததும் எல்லாரும் படுத்துக்கொண்டார்கள். கதை கேட்ட இளைப்பும், இடையில் பலகாரங்களைச் சாப்பிட்ட சிரமமும் சேர்ந்து எல்லாரையும் சீக்கிரமே நித்திரையிலாழ்த்திவிட்டது.

* * * *

இரவு 2-மணி இருக்கும். கலியாண வீட்டில் எல்லாரும் அயர்ந்து தூங்குகின்றார்கள். எங்கணும் நிஸ்ஸப்தமாயிருக்கிறது. ஒரு மனிதன் கையில் பிடித்த ஒரு சிறு தடி

யுடன் வீதிவழியாகவந்து நாற்புரமும் சுற்றிப்பார்த்துவிட்டு வெகு எச்சரிக்கையுடன் அந்த வீட்டின் தாழ்வாரத்தில் பிரவேசித்தான். அவன் மாறுவேஷம் பூண்டிருப்பதாகத் தெரிந்தது. திடநம்பிக்கையுடன் முன்வாயிலைத் திறந்து உட்பிரவேசித்தான். அங்கு மினுக்கு மினுக்கென்று ஓர் விளக்கு எரிந்துகொண் டிருந்தது. அந்தக் கட்டைக்கடந்து உள்க்கட்டுக்குச் சென்றான். வாசல்கள் ஒன்றும் தாள் போடாம லிருந்ததால், அவனது போக்குக்குத்தடை உண் டாகவில்லை. உள்க்கட்டில் படுத்துக்கொண் டிருந்தவர்களை அவ்விடத்திலுள்ள விளக்கின் உதவியால் உற்றுநோக்கி ஞன். அவன் யாரையோ குறிப்பிட்டு தேடுவதுபோலிருந் தது. கடைசியில் வாசல் திறந்திருந்த ஓர் அறையில் முத் துக்கருப்பன் செட்டியார் மனைவியும் சிறு குழந்தையும் படு த்திருப்பதைக்கண்டு உள்ளே சென்றான். அந்த அம்மாள் விலைபெற்ற நகைகளை அணிந்திருப்பது விளக்கொளியால் தெரிந்தது. பக்கத்தில் படுத்திருந்த குழந்தையின் கழுத் தில் போட்டிருந்த ஒரு வைரப்பதக்கம் ஒளிவிட்டுப் பிரகா சித்துக்கொண் டிருந்தது. அதைக்கண்டதும் அந்த மனி தன் சில விஞடி நேரம் அதைக்கூர்ந்து நோக்கிஞன். உட னே முழந்தாட்படியிட்டு அதைக்கழற்றிஞன். குழந்தை விழித்துக் கொண்டது. யாரோ வேற்று மனிதன் நிற்ப தைக்கண்டு பயந்து கோவென்று அலறிற்று. யாரோ ஒரு ஆள் தூக்கமயக்கத்தோடு "யார், என்ன?" வென்று ஒரு இருண்ட மூலையிலிருந்து கேட்டார். வந்த மனிதன் திடுக் கிட்டுப் போஞன். அவன் முகத்தில் பயக்குறிகள் தோன் றின. விரைவாக வெளியில் நடந்தான். வெளித்திண்ணை யில் படுத்திருந்த ஒருவர் தலையைத் தூக்கிப் பார்த்ததாக

அவனுக்குத் தோன்றிற்று. பலத்த காற்றினால் தள்ளுண்ட பாய்க்கப்பலைப்போல, அவன் பயத்தால் தள்ளுண்டு அம்பைப்போல் வேகமாய்ச்சென்று மறைந்து விட்டான்.

குழந்தையின் அலறுதல் நிற்கவில்லை. தூங்கினவர்களில் பலர் விழித்துக் கொண்டனர். பெண்களில் சிலர் தீபமேற்றிக் கொண்டு குழந்தை சத்தமிடும் இடத்துக்குச் சென்றனர். தாய் மாத்திரம் இன்னும் அசையாமல் தூங்குகிறாள். போன பெண்டுகள் தட்டி யெழுப்பின பிறகுதான் அவளுக்கு உணர்ச்சியுண்டாகி எழுந்தாள். குழந்தையை எடுத்துத்தேற்றினாள். குழந்தை அழுதுகொண்டே தன் கழுத்தைக் காட்டிற்று. முதலில் ஒருவரும் அதைக் கவனிக்கவில்லை. ஆனால் குழந்தை மீண்டும், மீண்டும் கழுத்தைக்காண்பிப்பதைக் கண்டு, அதன் கழுத்தைப் பார்க்க, முன்னிரவில் அதின் கழுத்தில் கிடந்த வைரப்பதக்கம் இல்லையென்பதுதெரிந்தது. எங்கும் தேடினார்கள். அகப்படவில்லை. குழந்தையின் சைகைகளினால் அதன் கழுத்தில் ஒரு ஈச்சிறகளவு காய மேற்பட்டிருப்பதைக் கண்டார்கள். இரவில் திருடன் வந்து பதக்கத்தை கழற்றிசென்றிருக்க வேண்டுமென்று ஊகிக்கப்பட்டது. பெரிய கோஷ்டம் ஏற்பட்டது. முத்துக்கருப்பன் செட்டியாரும் விருந்தினர்களும் எழுந்துவிட்டார்கள். ஊர்க்காவல்காரருக்கு ஆள் அனுப்பப்பட்டது. சிறிது நேரத்துக்குப்பின் அவ்வூர் தலைமைக் காவல்காரன் தன் ஆட்கள் சிலருடன் வந்து சேர்ந்தான். அவன் கூடவந்த ஆட்கள் "எங்கே திருடனைக் காட்டுங்கள் ஒரே அறையாய் அறைந்து விடுகிறோம்" என்று சொல்லுபவர்கள் போல தங்கள் கைகளிலிருந்த தடிகளை பூமியில் 'தட் தட்' என்று ஓசைபடக் குத்திக்கொண்டு வந்தார்கள்.

## மூன்ருவது அத்தியாயம்



### துப்பறி நிபுணர் பத்மநாதன்



காலை ஐந்துமணி. கூதிர் அதிகம். செவல் பட்டி முத்துகருப்பன் செட்டியார் வீட்டில் பெரும் சந்தடியா யிருக்கிறது. வந்திருந்த விருந்தாளிகளெல்லாரும் கம்பளிகளாலும், போர்வைகளாலும் உடம்பைப் போர்த்துக்கொண்டு உட்கார்ந்து பேசிக்கொண்டிருக்கிருர்கள். கம்பளிகளிலும் போர்வைகளிலும் எத்தனை தினுசுகள் உண்டோ அத்தனையும் அங்குகாணலாம். முன்னிரவில் நடந்த திருட்டைப் பற்றியே எல்லாரும் ஆத்திரமாகப் பேசிக்கொண்டிருக்கிருர்கள். முத்துகருப்பன் செட்டியார் ஓர் சாய்வு நாற்காலியில் அயர்ந்து கிடக்கிருர். அவரைச் சுற்றி ஆப்த நண்பர்களான சிலர் உட்கார்ந்திக்கிருர்கள். முத்துக்கருப்பன் செட்டியார் "ஈஸ்வரா, பண்டைக் காலத்துப்பொருள் போச்சுதே ஜெகதீசா" என்று சொல்லி பெருமூச்சு விட்டார். "ஆம், விலேயேறப் பெற்ற நகை தான், என்ன செய்கிறது. எல்லாம் ஈசன்செயல்" என்று பக்கத்திலிருந்த ஒரு செட்டியார் கூறினர். முத்துக்கருப்பன்செட்டியார் "அதன் விலேயைப்பற்றி நான் வருத்தப் படவில்லே. அதைச் சம்பந்தித்த புராதன விருத்தாந்தம் விசேஷமானது. அதன் சரித்திரம் இதுவரை எங்கள் குடும்பத்தில் ரகசியமாகக்காக்கப்பட்டு வந்துள்ளது. அதனுல் தான் மனம் கேட்குதில்லே," என்ருர். பக்கத்திலிருந்தவர்கள் அதன் வாலாற்றைக் கூறும்படி வேண்டினர்கள். முத்துக்கருப்பன் செட்டியார் பின்வருமாறு கூறலானர்.—

நமது முன்னோர் சோழதேசத்தில் குடியிருக்கும் பொழுது கலியுகம் 3775-ல் பூவந்திச் சோழன் நங்குல மாதர் பலரைப் பிடித்துச் சிறையில் அடைத்தான். அந்த அவமானம் பொறுக்கமாட்டமல் வைசியர்கள் எண்ணாயிரம் குடும்பத்தவரும் பிராணத்தியாகம் செய்து கொண்டார்கள். 1502ஆண்குழந்தைகள் மாத்திரம் அவர்களின் குருவாயிருந்த ஆத்மநாதாச்சாரியார் என்பவரது அடைக்கலத்தில் விடப்பட்டிருந்தார்கள். பூவந்தி சோழன் மரணத்தறுவாயிலிருக்கும்பொழுது அந்தவைசியப் பையன்களை அழைத்து தனது குமாரன் இராஜபூஷணச் சோழனுக்கு மகுடாபிஷேகம் செய்துவைக்கக் கேட்ட தாகவும், அவர்கள் தங்களுக்கு கல்யாணஞ் செய்ய பெண்களில்லாமல் பிரமசாரிகளாயிருப்பதால் தாங்கள் மகுடாபிஷேகக் சடங்கை நடத்துவதுதர்மமல்ல வென்று கூற, பூவந்திசோழன் அந்தப் பையன்களுக்கு வெள்ளாளப் பெண்களை மணஞ்செய்வித் தாகவும் ஐதீக சரித்திரம். இப்படி அந்தவைசிய வாலிபர்களுக்கெல்லாம் கலியாணம் ஆயிற்று. பூவந்திச் சோழனும் இறந்து போனான். இராஜபூஷணக் சோழனின் மகுடாபிஷேகம் நம் வைசியர்களால் நடத்தப்பட்டது. அவர்களில் நாலு வழி, ஆறுவழி, எழுவழி,என்று மூன்று உட்பிரிவுகள் இருந்தன. பிரிவுக்கு ஒருவராக மூன்றுபேர் பிரதானிகளாக நின்று கிரீடதாரணச்சடங்கை நிறைவேற்றினார்கள். இராஜபூஷணன் அம்மூவருக்கும் தனது பொக்கிஷத்திலிருந்து மூன்று விலையேறப் பெற்ற இரத்தினங்களையும் வேறு பரிசுகளையும் கொடுத்தான். அந்த மூன்று இரத்தினங்களில் களவு போனபதக்கத்திலுள்ள வைரமும் ஒன்று. இது எங்கள் குடும்பத்திலேயே பாரம்பரியமாக இருந்து வந்தது.

எங்கள் பாட்டனர் காலம்வரையில் அது எவராலும் உபயோகிக்கப்பட்டதாகத் தெரியவில்லை. சும்மாவைத்திருப்பதை விட ஒரு நகையாகச் செய்தால் அதிக விசேஷமென்று எங்கள் பாட்டனர் எண்ணி அந்த வைரத்தைக் கொண்டு ஓர் பதக்கம் செய்தார். எங்கள் தாயார் அந்தப் பதக்கத்தை இரண்டொரு தடவைகளில் போட்டிருந்தார்கள். இன்று அது தொலைந்தது.'' இப்படிச் சொல்லி முடிந்ததும் முத்துக்கருப்பன் செட்டியார் ஆயாசத்துடன் நாற்காலியில் சாய்ந்து கொண்டார். இந்த விபாங்களைக் கேட்டுக் கொண்டிருந்தவர்கள் ஆச்சரியமடைந்து ஒன்றும் பேசாதிருந்தனர். முத்துக்கருப்பன் செட்டியாருக்கு மூன்று குமாரர்களுண்டென்று ஏற்கனவே குறிப்பிட்டுள்ளோம். அவர்களில் மூத்தவர், நாகப்பன் என்பவர், வியாபாரம் நடத்திக்கொண்டு குடும்ப சகிதமாய் மதுரையில் வசித்துவருகிருர். மற்ற இருவரும் செவல்பட்டியில் இருக்கிருர்கள். நாகப்பனுக்கு நேர் இளையவன்பேர் சோமசுந்திரம்; ஏறக்குறைய இருபத்தைந்து வயதும், நல்ல தேகக்கட்டும் பெயருக்கேற்ற சுந்தாமு முள்ளவனுயிருந்தார். அவருக்கு ஆங்கிலத்திலும் தமிழிலும் நல்ல பயிற்சி உண்டு. தற்காலப்போக்குக்குத் தகுந்த மனே பக்குவமும் இருந்தது. இப்பொழுது சோமசுந்திரம் ஒரு அறையிலிருந்து யோசித்துக்கொண்டிருக்கிருர். அவர் யோசிப்பது திருட்டுப்போன வைரப்பதக்கத்தைப் பற்றித்தான். வெகுநேரம் யோசித்தபின் ஒருவிதத்தீர்மானத்துக்கு வந்து விட்டவர்போல அவ்விடம் விட்டெழுந்து தம் தகப்பனர் இருக்குமிடத்துக்குச் சென்றூர்.

சாய்வு நாற்காலியில் தன் தகப்பனர் சோர்ந்து கிடப்ப

தைக் கண்ட சோமசுந்தரம் துக்கமனதுடன் அவரைச் சமீபித்து.—

"அப்பச்சி, என்ன ஆயாசமாய் படுத்திருக்கிறீர்கள். நடந்தது நடந்து விட்டது. இனிமேல் நடத்தவேண்டிய காரியங்களை பார்க்கவேண்டும். வெறுமே ஆயாசப்பட்டுக் கொண்டிருக்கிறீர்களே. திருட்டு விஷயமாய் என்ன செய்ய யோசனை?" என்றார்.

**மூத்துக் கருப்பன் செட்டியார்.**—"என்ன செய்கிறது? நம்மூர் காவல் காரர்களிடம் சொல்லியாச்சுது. திருடரைத் தேடிப்பிடிக்கும்படி அவர்கள் போய்விட்டார்கள். இனி திருமயத்தில் ஒரு கோடங்கிக்காரன் இருக்கிறானும். அவனிடம் போய் விசாரிக்கலா மென்று நினைக்கிறேன். நீ யென்ன சொல்லுகிறாய்?"

**சோமசுந்தரம்.**—நம்மூர் காவல்காரர்கள் சங்கதி தெரிந்ததுதானே. அங்கே தேடினேம், இங்கே விசாரித்தோம் என்று சொல்லிக்கொண்டு ஊரைச் சுற்றிவந்து செலவுக்குப் பணம்வாங்கி சாப்பிட்டுக் கொண்டிருப்பார்கள். துப்புத்துலங்கினுலும் திருடனுடன் பங்கு போட்டுக்கொண்டு, அவனைத் தேடித்திரிந்ததாக நம்மிடமும் பணம் வாங்கி விடுவார்கள். ஆகையால் அது பிரயோஜனமில்லை. இனி கோடங்கி, திருட்டை வெளிப்படுத்திவிடுவான் என்று நான் நம்பமாட்டேன். அவனுக்கு அவ்வளவு அறிவும் தீர்க்கதிருஷ்டியு மிருந்தால் அவன் நம்மைப் போன்றவர்கள் கொடுக்கும் நாலணு, எட்டணுவைக் கொண்டு, கஷ்ட ஜீவனஞ் செய்யும் அஷ்டதரித்திரனுய் ஏன் இருக்கவேண்டும்? இவ்வுலகெல்லாம் புகழ் பெற்ற ஓர் பெரிய மனிதனுக ஆய்விட்டிருக்கலாமே. குறத்தி,

கோடங்கிகளெல்லாம் அனேகமாய் ஒரேவிதமான அறிவும் ஆற்றலு முள்ளவர்கள்தான். ஆகையால் கோடங்கியிடம் விசாரிப்பதால் எவ்விதப் பிரயோஜனமும் உண்டாகுமென்று நான் நினைக்கவில்லை. இந்தக் களவைப்பற்றி சென்னையி லுள்ள துப்பறியும் போலீஸ்தலைவருக்கு எழுதி, தக்க துப் பறியும் நிபுணர்களைத் தருவிக்க வேண்டும். அப்படிச் செய் தால் ஏதாவது பிரயோஜன முண்டாகும்.''

முத்து.—''போலீஸ்காரரைத் தருவித்தால் குடிமுழு கிப்போகுமே. போன பணத்துக்கு மேல் இரண்டத்தனை செலவு இழுத்து வைத்து விடுவார்களே. ஆகையால் அவர் களை வரவழைக்கக் கூடாது''.

சோம சுந்தரம்.—''இல்லை அப்பச்சி, இங்குள்ள போ லிசார் நடத்தை அப்படியிருக்கலாம். அதுவும் நம்மவர் கள் குற்றந்தான். போலீசார் பொதுஜன பாதுகாவலுக் காக நியமிக்கப்பட்டிருக்கும் பொது ஊழியர்கள் என்பதை நாம் உணருகிறதில்லை. அவர்களையெல்லாம் நமக்கு மேற் பட்டவர்களென்று தப்பாய் எண்ணிக் கொள்ளுகிறோம். அதையறிந்து அவர்களும் அற்பத்தனமாய் நம்மிடம் நட ந்து கொள்ளுகிறார்கள். அவர்களுடைய நடத்தையைக் கண்டிக்கத்தக்க அவ்வளவு விவகாரஞானம் நம்மவர்களிடத் தில் இல்லை. ஆனால் நாம் நேரே சென்னைத் தலைமை போலீ ஸ்தானத்துக்கு எழுதி ஒரு துப்பறி நிபுணனைத் தருவித் தால் அவன் நாட்டுப்புறத்துப் போலீஸ்காரனைப்போல் அற்பனுயிராமல், படித்தவனும் யோக்கியனுமா யிருப்பா னாகையால் விஷயங்களை கிரமமாய் விசாரித்து திருட்டை வெளிப்படுத்த முயற்சிப்பான். அப்படி அவன் திருப்தி

காமாயில்லை என்றால் உடனே அவனை நீக்கி விடலாமே. அதைப் பற்றிப் பயப்படவேண்டிய தில்லை.''

முத்து.—'நீ என்னென்னவோ சொல்லுகிறாய்; எனக்கு ஒன்றும் புரியவில்லை, கோடங்கிக்காரனிடம் விசாரணை செய்துவிட்டு, முடியாமற் போனால் அதன் பிறகு பார்த்துக் கொள்ளுவோமே, என்ன?''

சோமசுந்திரம்.—அதில் பிரயோஜனமே இல்லை. கோடங்கிக்காரனால் ஒன்றும் செய்யமுடியாது. வீணாக காலதாமதமாகும். ஆகையால் இன்றே இதைக்குறித்துப் போலீசுக்கு எழுதித் தெரிவிக்கவேண்டும்.

சோமசுந்தரம் நன்றாய் வாசித்தவராயும் விவேகியாயுமிருந்த படியால் அவர் தகப்பனாருக்கு அவரைப்பற்றி அதிக மதிப்புண்டு. அவர் சொல்லும் யோசனைகளை அவர் தகப்பனார் ஒரு பொழுதும் அலட்சியம் செய்வதில்லை. போலீசார் விஷயமாய்ப் அவருக்கு நல்லபிப்பிராயம் இல்லையென்றாலும் சோமசுந்தரத்தின் விருப்பத்தைத் தடை செய்ய அவருக்கு இஷ்டமில்லை. ஆகையால் அவர் சரி உன்நோக்கம் போல செய் என்று கூறினார். அந்த அநுமதி தான் வேண்டியது சோமசுந்தரத்துக்கு. அவர் துப்பறியும் போலீஸ் தலைவருக்கு கடிதமெழுத உடனே போய்விட்டார்.

"கோணஎழுத்து தெரிந்திருக்கிறது. இம்மாதிரி விஷயங்களுக்கெல்லாம் ரெம்ப நல்லது" என்றார் அங்கிருந்தவர்களில் ஒருவர்.

இன்னொருவர்.—"யாருக்குத் தெரியும்?"

முதல்வர்.—'ஏன், நம்ம சோமசுந்தரத்துக்கு இங்கி

வீஷ் நன்றாய்த் தெரியும். நல்லா வாசித்திருக்கிறான். இந்தக் காலத்தில் கோண எழுத்துத்தான் வேண்டியிருக்கு"

* * * *

மேற் கூறிய சம்பாஷணை நடந்து நாலுதினங்கள் கழிந்தன. ஒருநாள் மாலை நாலுமணி இருக்கலாம். சென்னையில் துப் பறியும் போலீசாரின் தலைமை உத்தியோகஸ்தர் மிஸ்டர் ராபர்ட்சன் தமது ஆபீசில் உட்கார்ந்திருந்தார். அவர் சிறிது நேரம் எதையோ யோசித்துக் கொண்டிருந்து விட்டு, திடீ ரென்று மேஜையில் இருந்த ஒரு மணியைக் கிலுக்கினார். உடனே ஒரு சேவகன் வந்து எஜமானனின் ஆக்ஞைக்கு எதிர்பார்த்துகொண்டு நின்றான்.

மிஸ்டர். ராபர்ட்சன்.—ஏறிட்டுப் பார்த்து "மிஸ்டர். பத்மநாதன் இருக்கிறாரா?" என்று கேட்டார்.

சேவகன்.—"இப்போதுதான் வந்தார், ஐயா."

மிஸ்டர். ராபர்ட்சன்.—"சரி, நான் அவரைப் பார்க்க வேண்டும் என்று சொல்?"

"நல்லது ஐயா" என்று சொல்லிவிட்டுச் சேவகன் வெளிப்பட்டான்.

சில நிமிஷங்களுக்குப் பின் சேவகன் வாயிலைத்திறந்து கொண்டு மீண்டும் உள்ளே வந்தான் அவனை பின்தொடர் ந்து கூறிய கண்களும், பிரகாசமான வதனமுமுள்ள ஓர் வாலிபன் வந்தார். அவர் அலங்காரமாக உடுத்துக் கொண் டிருந்தார். தலைமை உத்தியோகஸ்தரும், அவரும் "மாலை வந்தனம்" என்று ஏககாலத்தில் சொல்லிக்கொண்டார்கள்.

"உட்காரும், மிஸ்டர். பத்மநாதன்" என்று தலைமை உத்தியோகஸ்தன் கூற, பத்மநாதன் என்று அழைக்கப்

பட்ட அந்தவாலிபர் அவ்விடம் கிடந்த நாற்காலிகள் ஒன்றில் அமர்ந்தார்.

தலைமை உத்தியோகஸ்தன்.— செட்டிநாடு, அதாவது நகரவைசியர் என்னும் நாட்டுக்கோட்டைச் செட்டிப் பிள்ளைகள் இருக்கிற பிரதேசம் உமக்குத் தெரியுமா ?

பத்மநாதன்.— தெரியும், நன்றாகத்தெரியும். உண்மையில் எனது தந்தையும் ஒரு நாட்டுக் கோட்டைக்செட்டிதான்.

தலைமை உத்தியோகஸ்தன்.—அது எனக்குத் தெரியும் பத்மநாதரே, அதனால் தான் உம்மை இவ்விஷயத்துக்காக தெரிந்துகொண்டேன்.

பத்மநாதன்.—"தாங்கள் கூறும் விஷயத்தைத் தெரிந்துகொள்ளத் தயாராயிருக்கிறேன்".

தலைமை உத்தியோகஸ்தன்.—இதோ இந்தக் கடிதத்தைப்பாரும். இது செட்டி நாடு செவல்பட்டியிலிருந்து வந்தது. அதைப் படித்து பார்த்து உமது அபிப்பிராயத்தைத் தெரிவியும். செட்டி நாட்டில் போலீஸ்காரர் தங்கள் கடமைகளைச் சரியாய் நிறைவேற்றுவதில்லை யென்று பலர் பத்திரிகைகளிலே கடிதமெழுதியிருப்பதைப் பார்த்திருக்கிறேன்".

பத்மநாதன் அந்தக் கடிதத்தை வாங்கிவாசித்துப் பார்த்தான பின், அதை உறையிலிட்டு,

"ஏதோ ஓர் வைரப் பதக்கம் களவுபோய் விட்டதென்றும் அதைக் கண்டுபிடிக்க ஓர் சாமார்த்தியவானான துப்பறி நிபுணன் வேண்டுமென்றும் எழுதப்பட்டிருக்கிறதே தவிர வேறு விபரங்கள் ஒன்றுமில்லை. ஆனால் எவ்விஷயமாய் என் அபிப்பிராயம் கேட்கிறீர்கள் ?" என்று கேட்டார்.

தலைமை உத்தியோகஸ்தன்.—"மொத்தமாய்ச் செட்டி நாட்டையும், அங்கு நடக்கும் களவுகளையும் பற்றிய அபிப் பிராயம், செட்டி நாட்டையும் அவ்விடத்திய ஜனங்களை யும் பற்றி சுருக்கமாகச் சொன்னாலும் நல்லதே."

பத்மநாதன்.—"மதுரை, இராமநாதபுரம், திருச்சினுப் பள்ளியாகிய மூன்று ஜில்லாக்களிலும், புதுக்கோட்டை சமஸ்தானத்திலும் பரந்துகிடக்கும் வளமில்லாத ஒரு மத்யப் பிரதேசத்தை செட்டிநாடு என்று சொல்லுகிறார் கள். அதில் ஏறக்குறைய தொண்ணூறு நாட்டுக்கோட்டை யார் கிராமங்களும் ஊர்களும் இருப்பதாகச் சொல்லப்படு கிறது. ஆகமொத்தம் நாட்டுக் கோட்டையாரின் குடும்பங் கள் பதினாலாயிரத்துக்கு உள்படத்தானிருக்கும். பெரும் பான்மையாய் லேவாதேவித் தொழிலும், வியாபாரம் சொற்பமாயும் செய்கிறார்கள். தூபிகளும், மாடிகளுமுள்ள பெரிய வீடுகளைக் கட்டிக்கொள்வதில் அவர்களுக்கு அதி கப் பிரீதி. ஆனால் வீடுகளுக்கு முன்னுள்ள வீதிகளையும், போக்கு வரவுக்கு ஆதாரமான ரஸ்தாக்களையும் பற்றிக் கவனிக்கிறது கிடையாது. அவை மற்றெந்தப் பிரதேச த்தையும் விட அதிகக் கேவல நிலைமையிலேயேஇருக்கும். கலியாணங்களிலும், தேர்த்திருவிழாக்களிலும் தங்களுக் குள் போட்டி போட்டுக்கொண்டு வீண்செலவு செய்வதில் அவர்களைப்போல கெட்டிக்காரர் இந்தத் தென்னிந்தியா வில் வேறெவருமில்லை. லேவாதேவித் தொழிலில் அவர் களுக்கு நல்ல அநுபவமும் ஞானமும் உண்டு. அதுதவிர மற்றெல்லா விஷயங்களிலும் அவர்கள் சாமர்த்தியரல்லர். செட்டி நாட்டில் பிராமணருக்கு நல்ல வருமானமுண்டு. பிராமணருக்கு பணந்தேடிக் கொடுக்கத்தான் இவர்கள்

சிருஷ்டிக்கப்பட்டனரோ என்றுகூட நான் சில வேளைகளில் சந்தேகித்திருக்கிறேன். தேகதிடத்திலும், மனோதைரியத்தி லும் மிகக் குறைந்தவர்கள். இதை யறிந்த துஷ்டரும் போக்கிரிகளும் அவர்களை மிரட்டிப் பலதடவைகளிலும் கொள்ளை செய்து சென்றிருக்கிறார்கள். அங்கு நடக்கிற திருட்டுகளுக்கும் கொள்ளைகளுக்கும் அநேகமாய் நகர வைசியரின் சாதுத்தன்மையே காரணமாயிருக்கிறதென்று கூடச் சொல்லலாம்."

தலைமை உத்தியோகஸ்தன்.—'சரி அப்படியா? அவர் களின் சாதுகுணத்தைக் கண்டு தான் போலீசார்கூட அவர்களை மிரட்டி விடுகிறார்களென்று நினைக்கிறேன்.

பத்மநாதன்.— "ஆமாம், ஆக்ஷேபனை யில்லாமல் அப்படித்தான்."

தலைமை உத்தியோகஸ்தன்.—"சரி. பத்மநாதரே இந் தப் பதக்க களவு விஷயமாய் நீரே சென்று விசாரித்து களவைத் துலக்கவேண்டும். அதற்காக இரண்டொருமாதம் நீர் செட்டிநாட்டிலேயே இருந்து வேலைசெய்யும். உமக்கு வேண்டிய உதவிக்காரரையும் தெரிந்து கொள்ளலாம்."

பத்மநாதன்.—"நல்லது, அப்படியே செய்கிறேன். ஆனால் ஒன்று. எனக்குப் பூர்ண அதிகாரம் கொடுக்கவேண் டும். கயிற்றினால் இழுப்புண்டு ஆடுகிற பொம்மையைப் போலிருந்து வேலை செய்வதானால் கஷ்டம். ஆகையால் என்னிஷ்டப்படியே விசாரணை நடத்த எனக்குச் சுவா தீனம் கொடுக்கப்படவேண்டும்."

தலைமை உத்தியோகஸ்தன்.—" அப்படியே ஆகுக. உமது இஷ்டம்போல வேலை நடத்தலாம். சரி அவ்வளவு தானே. க்ஷேமமாய் போய்வருக."

பத்ம நாதன்.—"அப்படியே" என்று வந்தனஞ் சொல்லிப் பிரிந்தனர்.

பத்மநாதன், நேரே இராயப்பேட்டையிலுள்ள தமது வீட்டுக்குச் சென்று பிரயாணத்துக்கு ஆயத்தம் செய்யலானார். இவர் போலீஸ் தலைவரிடம் சம்பாஷித்துக்கொண்டிருக்கும் பொழுது "என் தந்தையும் ஒரு நாட்டுக்கோட்டைச் செட்டியார் தான்" என்று சொன்னது வாசகர்களுக்கு ஞாபகமிருக்கலாம். ஆனால் அவருடைய நடை உடை, பாவனைகள், நகரவைசியர்களிலிருந்து அவரை வேறுபடுத்திக் காட்டின. உண்மையில் அவர் முழு நகர வைசியனல்ல; அரை வைசியன் அல்லது அரை நாட்டுக் கோட்டைச் செட்டியார் என்றே சொல்ல வேண்டும். அவருடைய விருத்தாந்தம் பின்வருமாறு. தேவகோட்டையிலிருந்து ஏறக்குறைய 30 வருடங்களுக்கு முன்னர் சுப்பிரமணியம் செட்டியார் என்பவர் இலங்கைக்குக் கொண்டு விற்கப்போயிருந்தார். அப்பொழுது அவருக்கு வயது இருபத்தைந்துதான் இருக்கும். பதினெட்டு வயதில் அவருக்கு கலியாணம் ஆயிற்று. கலியாணத்தின் பின் ஏற்கனவே இரண்டு கணக்குகளுக்கு அயல் தேசம் சென்று திரும்பிவிட்டார். ஆகையால் அவர் தமது மங்கைப் பருவமுள்ள மனையாளுடன் வாழ்ந்திருந்த காலமெல்லாம் ஏறக்குறைய இரண்டு வருஷங்கள்தான் இருக்கும். மனைவியின் மேல் அவருக்கு அத்யந்த பிரீதியுண்டு. மணஞ்செய்த மங்கை நல்லாளைப்பிரிந்து மறுதேசம் செல்ல அவருக்கு மனமே இல்லை. ஆனால் வருவாயில்லாமல் எப்படிவாழுவது? ஆகையால் மூன்று வருடக் கணக்குக்கு மறுபடியும் அயல் தேசம் செல்ல வேண்டியதாயிற்று. மனைவியிடம் பிரியா

விடைபெற்று புறப்பட்டார் சுப்பிரமணியம் செட்டியார்.

இலங்கைக்கு சென்ற சுப்பிரமணியம் செட்டியார் மூன்று வருடக் கணக்கின் முதல் வருடத்தை, தம்மைப் பிரிந்து ஏகாங்கியாய் வசிக்க நேரிட்டிருக்கும் மனைவியைச் சிந்தித்துக் கொண்டே கழித்து விட்டார். வாலிபப் பருவத்திலே மனைவியைப் பிரிந்திருக்க நேரிட்டிருப்பதைப் பற்றி அவர் மனம் வருந்தின நாட்கள் பல. இரண்டாவது வருடம் ஆரம்பமாயிற்று. மாரன் தனது கரும்பு வில்லை வளைத்துக் குணத்தொனி செய்வானுயினன். கல்லால மாநிழலில் சமாதி நிஷ்டையிலிருந்த சாட்சாத் சிவபெருமானிடமே தன் கைவரிசையைக் காட்ட முயன்ற மாரன் சுப்பிரமணியம் செட்டியாரை லேசிலே விடுவானு? சமயம் பார்த்துக் கொண்டேயிருந்தான். ஒருநாள் மாலை சுப்பிரமணியம்செட்டியார் வீதிவழியாக நடந்து போகையில் எதிரே ஒரு சிங்களக் கன்னிகை வந்தாள். வயது பதினேழு அல்லது பதினெட்டு இருக்கலாம். கண்டோர் மனதைக் கவருங் கட்டழகி. இதுதான் தருணமென்று மாரனும் மலர் வாளிகளைத் தொடுத்தான். சுப்பிரமணியனின் நெஞ்சிலே மாரனது பாணங்கள் வந்து தைத்தன. இனி கதையை வளர்த்து வானேன். சில நாட்களுக்குள் சுப்பிரமணியன் செட்டியார் முயற்சியால் அவருக்கும் அந்தச் சிங்களக்கன்னிகைக்கும் காந்தர்வ விவாகம் நடந்தேறிற்று. கணக்கு முடிகிறதற்குள் அழகிய ஆண்குழந்தை ஒன்றும் பிறந்தது. அதற்கு பத்மநாதன் என்று பெயரிட்டார்கள். நிற்க; தேவகோட்டையிலே சுப்பிரமணியன் செட்டியாரின் மனைவி அரிய நாயகி கணக்கு முடிந்து புருஷன் வருங் காலத்தை ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள். நாயகன் வர

வேண்டுமென்று விநாயகருக்கு அவள் உடைத்த தேங்காய் கள் பலநூறு. விட்ட பெருமூச்சுகள் அனந்தம். அந்தப் பெருமூச்சுகளை யெல்லாம் ஒன்று சேரத் திரட்ட முடியு மானல் வங்காளக் குடாக்கடலைக் கொந்தளிக்கச் செய்யத் தக்க ஓர் பிரசண்டமாருதம் ஆகும். ஆனால் அந்தக்கால மெல்லாம் சுப்பிரமணியன் செட்டியாருக்கு மனைவியைப் பற்றிய எண்ணமே கிடையாது. பரஸ்திரி கமனத்திலே, விபசாரத்திலே அவர் அமிழ்ந்து கிடக்கிறார். இது யாரு டைய குற்றம்? நகரவைசியர்களின் பழக்க வழக்கங்களே இதற்கு காரணம். கேவலம், அருத்த மில்லாத பழக்க வழ கங்களுக்காக யோக்கியரான புருஷர்கள் விபசாரம் செய்ய வும், குற்றமற்ற பெண்கள் விதவைகள்போல புருஷ வாழ் கையின்றிப் புலம்பவும் வேண்டுமோ? வாசகர்களே நன்கு யோசித்து பாருங்கள். இது பெரும் பாதகமில்லையா? மற்ற சமூகத்தார்களைப்போல, ஸ்திரீகளை புருஷர் கூடவே அழை த்துச் செல்லும் வழக்கமிருந்தால் இவ்வித துயர சம்பவங் கள் நேரிடாதல்லவா?

சுப்பிரமணியன் செட்டியார் தமது காந்தர்வ விவா கத்தை மறைத்துவைக்க பிரயாசைப்பட்டார். ஆனால் ஊர் வாயை மூட உலைமுடியுண்டா? இலங்கையிலே பலருக்கு அது தெரிந்திருந்ததால், தேவகோட்டையிலும் சங்கதி பர விற்று. அதைக்கேட்ட அரிய நாயகியின் மனம் உடைந்து வேறுபட்டது. அதன்பின் சுப்பிரமணியன் செட்டியா ரின் குடும்ப வாழ்க்கை இன்பமுள்ளதா யிருக்கவில்லை. சில வருடங்களில் அரியநாயகி இறந்தனள். முப்பதினாயிரம் ரூபா வீணாயிற்றே என்று மாமி நாத்திமார் பிரலாபித்தார் கள்.

சுப்பிரமணியன் செட்டியாருக்கு சிங்களஸ்திரியால் இன்னும் ஓர் ஆண்குழந்தை பிறந்தது. இரண்டு குழந்தைகளையும் படிக்கவைத்தார். அவ்விரு பையன்களும் அகோரதிட காத்திரமும், அதிதீக்ஷ்ண்ய புத்தியுமுடையவர்களாயிருந்தனர். பத்மநாதனுக்கு பாலியத்திலே மறைபொருளான விஷயங்களை கண்டுபிடிப்பதிலும், குற்றங்களை வெளிப்படுத்துவதிலும் கவனம் சென்றது. அம்மனோநிலையே கடைசியில் அவனை சென்னை துப்பறியும் போலீஸில் ஓர் சாமர்த்தியமுள்ள உத்தியோகஸ்தன் ஆகச் செய்தது. நிற்க, செட்டிநாட்டில் சிலகாலம் சஞ்சரிப்பதற்கு வேண்டிய ஆயத்தங்களுடன், பத்மநாதன் சென்னையிலிருந்து புறப்பட்டார்.



## நான்காவது அத்தியாயம்



### சோமசுந்தரமும் சொக்கநாதனும்



செவல்பட்டியில் முத்துக் கருப்பன் செட்டியார் வீட்டின் மேன்மாடியில் இருவர் உட்கார்ந்து பேசிக்கொண்டிருக்கிறார்கள். ஒருவர் முத்துக் கருப்பன் செட்டியார் மகன் சோமசுந்தரம். வாசகர்கள் அவரை ஏற்கனவே அறிவர். மற்றவர் காரைக்குடி சாமிநாதன் செட்டியார் மகன் சொக்கநாதன். சோமசுந்தரமும் சொக்கநாதனும், ஒரே பள்ளிக்கூடத்தில் படித்தவர்கள். இருவரும் ஒத்த அபிப்பிராயமுள்ளவர்களாயிருந்ததால் அவர்களுக்குள் உத்தம நட்பு உண்டாயிருந்தது. சோம சுந்தரம் சொக்கநாதனைச் சினேகபான்மையாய் "சொக்கன்" என்றே அழைப்பது வழக்கம்.

பள்ளிக்கூடத்தை விட்டவுடனே "அப்பா சனியன் ஒழிந்தது" என்று படிப்பதை நிறுத்தி, பள்ளிக்கூடத்தில் கற்ற விஷயங்களையும் மறந்துவிடுபவர்களைப்போலல்லாமல் சொக்கநாதன் "நூல் பலகல்" என்ற ஒளவைமொழியை மனதில்கொண்டு தமிழிலுள்ள பல நூல்களைக் கற்றும் பத்திரிகைகளை வாசித்தும் வந்தான். இதனால் அவனுக்கு நூலாராச்சியும், காலதேசவர்த்தமான அறிவும் பொலிந்தன. தற்காலத்துக்கேற்ற புதிய எண்ணங்களும், புது உணர்ச்சியும் அவனை ஆட்கொண்டன. தனது சமூகத்தை தேசத்தின் முன்னணிகளில் காணவேண்டுமென்று அவனுக்கு ஆசை அதிகரித்தது. தன்னாலியன்ற அளவு சமூக நலத்துக்காக உழைக்கவேண்டுமென்பது அவன் தீர்மானம். இந்தத் தீர்மானத்தைச் செய்கையில்காண சொக்கநாதனுக்குப் போதிய தனமும் வேண்டிய கால அவகாசமும் இருந்தன. ஆகையால் சென்றவிடங்களிலெல்லாம் சமூக உணர்ச்சியை எழுப்பத்தக்க புதிய எண்ணங்களைச் சமய உசிதமாய்ப் பரப்பிவந்தான். இப்பொழுது இவ்விருவரும் என்ன பேசுகிறார்களென்று கவனிப்போம்.

சொக்கநாதன்.— "சோமசுந்தரம், நீ "தனவைசிய ஊழியன்" பத்திரிகை தருவிக்கிறாயா?"

சோமசுந்தரம்.— "ஆம், ஆம். ஆரம்பித்த் மூன்றும் மாதத்திலிருந்தே அது எனக்கு வருகிறது."

சொக்கநாதன்.—"அதைப்பற்றி உன் அபிப்பிராயமென்ன?"

சோமசுந்தரம்.—"எழுத்துக்களெல்லாம் புது எழுத்துக்கள். அச்சு நன்றாயிருக்கிறது. எல்லாம் நம்மவர்களாலேயே எழுதப்படுகிறது. வாசகங்கள் ரசம் பொலிய

அமைக்கப்பட்டு விஷயங்கள் படிக்கத்தக்க ருசியுள்ளதாயிருக்கின்றன."

சொக்கநாதன்.—"அதெல்லாம் எனக்குத் தெரியும். மண்டு! நான் கேட்ட விஷயம் வேறு. அந்தப் பத்திரிகை முற்படுத்தி வரும் சமூக இயக்கத்தைப் பற்றியே கேட்டேன்"

சோமசுந்தரம்.—"கேள்வி திட்ட வட்டமாயில்லாவிட்டால் பதில் சொல்லுபவன் குற்றவாளியாக வேண்டுமா? முந்தியே இப்படிக் கேட்டிருந்தால் நான் அதற்கேற்ற பதில் சொல்லியிருப்பேனே. ஆனல் ஒன்று. 'மண்டு' என்கிற பட்டம் எனக்குக் கிடைத்திருக்காது அப்போ."

சொக்கநாதன்.— (சிரித்துக்கொண்டு) "இப்பொழுது தான் என்ன கெட்டுப்போச்சு. வேண்டாமென்று அந்த பட்டத்தைத் திருப்பிக் கொடுத்திடுவேன்."

சோமசுந்தரம்.—(புன்னகையுடன்) "இந்தப்பட்டத்தை வேண்டாமென்றல் என்ன பிரயோஜனம்? யாரும் என்னைப் புகழப்போகிறதில்லையே."

சொக்கநாதன்.—"சரி அதிருக்கட்டும். நமது சமூக முன்னேற்றத்துக்காக ஆரம்பித்திருக்கும் இயக்கத்தைப் பற்றி என்ன நினைக்கிருய்?"

சோமசுந்தரம்.—"நமது சமூகத்தில் காணப்படும் குற்றங்களை நீக்கி ஒற்றுமையைக் காணவேண்டுமென்று முயற்சி செய்யப்படுவதாகத் தெரிகிறது. இவ்வித இயக்கம் தற்காலம் அத்தியாவசியம் என்பது எனது அபிப்பிராயம். இதோடு பெண்கல்வி விஷயமாய் பெரிய கிளர்ச்சி செய்ய வேண்டுமென்றும் நான் நினைக்கிறேன். நம்மவர்கள் வீட்டில் நடக்கும் சாந்தி, புதுமை, கல்யாணம், வருஷா

ப்திகம், முதலிய விசேஷங்களிலெல்லாம் அருத்தமில்லாத சடங்குகளையும், வீண் செலவுகளையும் இழுத்து வைக்கிறது பெண்கள் தான். மொத்தமாய்ச் சொன்னால் திருத்தப் படவேண்டிய ஒவ்வொரு காரியமும் தற்சமயம் ஸ்திரிக ளின் பாதுகாவலில்தானே இருக்கிறது.''

சொக்கநாதன்.—''அது உண்மைதான். ஆனால் படிப் படியாய்த் தானே முன்போகவேண்டும். இப்பொழுது நடக்கிற பிரசாரத்தினால் நம்மவர்களுக்குள் ஒருவித உணர் ச்சி தோன்றின வுடனே, திருத்த வேலைகளை யெல்லாம் ஆரம்பிக்கலாம்.''

இப்படிச் சொல்லி வருகையில் சொக்கநாதன் திடீ ரென்று பேச்சை நிறுத்தி, நெற்றியைச் சுளித்துக்கொண்டு எழுந்து சோமசுந்தரத்தை சத்தம் செய்யாதிருக்கும்படி சைகை செய்துவிட்டு திடீரென்று போய் சாத்தியிருந்த கத வைத்திறந்து வெளியே பார்த்தான். வெளியே தாழ்வாரத் தில் நின்றிருந்த ஒரு கிழவன் இப்படித் திடீரெனக் கதவு திறந்ததால் திடுக்கிட்டு இரண்டடி பின்னுக்கு எடுத்து வைத்து நின்றான். அவனைப்பார்த்து "நீ யார்'' என்று கேட்க அவன் அஞ்சினவன்போல் "நான் இவ்விடத்து வேலையாள்'' என்றான். இதற்குள் சோமசுந்தரம் வந்து "ஓ, சுப்பய்யாவா, என்னவேண்டும்? என்று கேட்டான்.

சுப்பய்யா.—''இல்லை, நான் சும்மா வந்தேன்.

சொக்கநாதன்.—''நீ இங்கு வந்து எவ்வளவு நேர மாச்சு?''

சுப்பய்யா.—''இப்பத் தான் சத்தே முந்தி. நீங்க பேசிக் கொண்டிருந்திய, அதான் நான் இப்படிச் சத்தே நிண்ணே ன். ஐயா ஒரு வேஷ்டி துவைக்கணு மிண்ணு சொன்னாக.''

சோமசுந்தரம்.—"வேஷ்டியா? ஆமாம். அதைப்பற்றி உன்னிடம் நேற்றே சொன்னனே. சரி, அதோ அந்தக் கொடியில் கிடக்குது சரிகைகம்பிமேல் வேஷ்டி. அதுதான் நல்லா, வெள்ளையாய்த்துவைக்க வேணும்."

சொக்கநாதன்.— "அவன் முதலிலே சும்மா வந்த தாகச் சொன்னனே."

சோமசுந்தரம் சொக்க நாதனை எறிட்டுப் பார்த் தான். இதனிடையில் சுப்பய்யா என்னப்பட்டவன், உள்ளே புகுந்து வேஷ்டியை எடுத்துக் கொண்டுபோனன். அவன் போய் இரண்டொரு நிமிஷங்கள் ஆனவுடன் சொக்கநாதன் அவன் போன வழியே சென்று படிக்கட்டி லும் இறங்கிபார்த்து விட்டுத் திரும்பிவந்தான்.

சோம சுந்தரம் (ஆச்சரியத்துடன்).—என்ன சொக்கா, என்ன விசேஷம்?"

சொக்கநாதன்.—" இப்ப வந்து போனனே அவன் யார்? அவனது பார்வை எனக்குப் பிடிக்கவில்லை.

சோமசுந்தரம்.—நீ ஓர் பெரிய அசடு. அவன் எங்கள் வீட்டில் சிறுவயதிலிருந்தே வேலை செய்து வருகிறான். அவன் பெயர் சுப்பய்யா. நல்ல உண்மையான மனிதன்"

சொக்கநாதன்.—"எனக்கென்னவோ அவனைப் பார்த் தால் பிடிக்கவில்லை. நாம் பேசிக்கொண்டிருக்கும் பொழுதே எனக்கு ஒருவித உணர்ச்சி யுண்டாயிற்று. அவ்வுணர்ச்சி இவ்வகைப்பட்ட தென்று விவரிக்க முடியாது. ஆனல் ஒரு வன் மீது வேற்றாள் ஒருவனுடைய கவன்ம் செலுத்தப் படுமாயின் அவனுக்கு அப்படிப்பட்ட உணர்ச்சியுண்டாகக் கூடுமென்று நினைக்கிறேன். இதை என் அனுபவத்தில் இதற்கு முன் இரண்டு மூன்று தடவைகளில் பார்த்திருக்

கிறேன். உனது "உண்மையான ஆள்" இருக்கிறனே அவன் நமது பேச்சைக் கவனிக்க வந்திருக்கவேண்டும் வேஷ்டிக்காக வந்தவனல்ல. அது அவனுக்கு வந்த பின் நினைவு. வேஷ்டிக்காக வந்தால் முதலில் "சும்மா வந்தேன்" என்று அவன் சொல்லுவானேன்?"

சோமசுந்தரம்.—"நீ பேசுவது விநோதமாயிருக்கிறது. இவன் என்ன காரணத்துக்காக நமது பேச்சைக் கவனிக்க வேண்டும்?"

சொக்கநாதன்.—"உன்னைப்பற்றி என்ன நினைக்கிற தென்று எனக்குத் தெரியவில்லை. சோமசுந்தரம். வைரப் பதக்கம் திருட்டுப்போனது யார் வீட்டில்?

சோமசுந்தரம்.—"ஓகோ, நீ அதை நினைத்துக்கொண்டு பேசுகிறயோ? சரி, அப்படியிருந்தாலும் இவன் ஏன் நமது சம்பாஷணையைக் கவனிக்கவேண்டும்?"

சொக்கநாதன்.—"உள் உளவு இல்லாமல் மூன்றுங் கட்டு அறைக்குள் திருடன் வந்து. குறிப்பாகப் பிள்ளையின் கழுத்திலிருந்த நகையைக் களவாடிப்போவான் என்று நினைக்கிறயா?"

சோமசுந்தரம்.— "அது சந்தேகத்துக் கிடமாய்த் தான் இருக்கிறது."

சொக்கநாதன்.—"அதுவுமன்றி மற்றவர்களெல்லாம் கோடங்கி கேட்பதென்றும், காவல்காரரை விட்டுத் தேடுவ தென்றும் சொல்லிக்கொண்டிருக்கையில் அவற்றுல் பிரயோ ஜன முண்டாகாதென்று துப்பறி நிபுணர் உதவியை நாடி னது நீதான். களவை வெளிப்படுத்தவேண்டுமென்று விவே கமாய் முயற்சி செய்வதும் நீதான். ஆகையால் உனது சம் பாஷணைகளைக் கவனிக்க காரணமிருக்கிற தல்லவா?"

சோமசுந்தரம்.—(சற்றுநிதானித்து).—"ஆம் நீ சொல்வது சரிதான். நேற்றுக்காலை நானும் சிவநேசனும் இங்கே பேசிக்கொண்டிருக்கிற பொழுது கூட அவன் வந்து வெளியில் நின்று கேட்டுக்கொண்டிருந்தான் போலிருக்கிறது. நாங்கள் கதவைத் திறந்துகொண்டு வெளியில் வரும் பொழுது அவன் வெளியில் நின்று கொண்டிருக்கக் கண்டேன். அப்பொழுது நான் அதைக் கவனிக்கவில்லை. நீ சொன்னதைக் கேட்ட பிறகு இப்பொழுது தான் அந்த ஞாபகம் வந்தது. எல்லாவற்றையும் கவனிக்கும் பொழுது சுப்பய்யாவின்மேல் ஓர்வித சந்தேகத்துக்கு இடமிருக்கிறதாகச் சொல்லலாம். இவன் களவுக்கு உளவாயிருந்திருப்பான் என்று நீ நினைக்கிறாயோ?"

சொக்கநாதன்.—"அப்படி நினைக்க காரணமிருக்கிறது. நாம் பேசுகிற பேர்வழி களவுபோன வீட்டில் வேலைக்காரன். வீட்டின் கதவுகள் கோட்டைவாயிற் கதவுகள்போல மிகப் பலத்தவை. வீடு நிறைய விருந்தாளிகள் படுத்திருந்தனர். வீட்டின் மூன்றாவது கட்டில், அதிலும் உள்ளறையில் படுத்திருந்த குழந்தையின் கழுத்திலிருந்த பதக்கம் திருட்டுப் போய் விட்டது. வீட்டுக்குள் உதவியாள் இல்லாமல் இப்படித் திருட்டு நடக்க முடியுமா? இவனாவது, வேறு யாராவது உட்கையாக இருந்திருக்க வேண்டும். எனக்கு இவனுடைய பார்வை பிடிக்கவில்லை."

சோமசுந்தரம்.—"சரி, நான் இந்த உளவைக் கண்டு பிடிக்கிறேன். வீட்டுக்குள்ளே சதிகாரன் இருப்பதானால் பிராண ஆபத்தல்லவா?"

சொக்கநாதன்.—"நீ போலீசுக்கு எழுதினாயே அது என்னவாயிற்று?"

அப்பொழுது யாரோ கடகட வென்று படிக்கட்டுக ளின் வழியாக வருகிற சப்தம் கேட்டது. சிலநேரத்துக் கெல்லாம் சோமசுந்தரத்தின் இளைய தங்கை வந்து "அண்ணே உங்களுக்கு தபால்" என்று சொல்லி சில கடி தங்களையும் ஒரு பத்திரிகையையும் கொடுத்தாள். கடிதங் களில் ஒன்று சென்னை முத்திரையைக் கொண்ட உத்தி யோக முறையான கடிதமாயிருந்தது.

சோமசுந்தரம்.—(அதைக் கண்டதும்)"இதோ என் கடி தத்துக்கும், உன் கேள்விக்கும் பதில்" என்று சொக்க நாத னிடம் கூறிக்கொண்டு அதைப் பிரித்துபார்த்தார். அது துப்பறியும் போலீஸ் தலைமைஸ்தானத்திலிருந்து வந்த கடி தம். சோம சுந்தரம் கடிதத்தின்படி சாமர்த்திய சாலியான ஓர் துப்பறி நிபுணரை அனுப்பியிருப்பதாக அதில் எழுதி யிருந்தது. இன்னொரு கடிதம் பத்மநாதனிடமிருந்து வந் தது. அவர் தாம் புறப்பட்டு வருகிறதாக எழுதி யிருந்தார். சோம சுந்தரம் அவ்விரண்டு கடிதங்களையும் சொக்க நாத னிடம் வாசிக்கக் கொடுத்தார்.

சொக்கநாதன்.—" கடிதங்கள் தடபுடலா யிருக்கின் றன. காரியத்தில் எப்படியோ ?"

சோமசுந்தரம்.—"எப்படியாயினும், இன்னம் இரண் டொரு நாட்களில் ஆளை நேரே பார்க்கலாமே"



## ஐந்தாவது அத்தியாயம்





### கோடங்கிக்காரன் தீர்க்கதரிசனம்

மறுநாள், முத்துக்கருப்பன் செட்டியார் யோசனையில் மூழ்கினவராய் உட்கார்ந்துகொண்டிருந்தார். பக்கத்தில் இரண்டொரு நண்பர்கள் உட்கார்ந்திருந்தார்கள். அதில் ஒருவர் "என், அந்தக் களவு விஷயமாய் கோடங்கியைக் கேட்கிறது தானே" என்றார்.

முத்துக்கருப்பன் செட்டியார்.—"ஆமாம் திருமயத்தில் ஒரு கோடங்கியிருக்கிறானும். நல்ல கெட்டிக்காரனும். அவனைப்போய் பார்க்கலாமென்றிருக்கிறேன்."

முதலில் பேசினவர், 'சரி அப்படியானால் சாப்பாட்டுக்கு மேலே புறப்படுவோமா?' என்று கேட்க முத்துக்கருப்பன் செட்டியார் அப்படியே செய்வதென்று தீர்மானித்தார்.

இந்த ஆலோசனையைக் கேட்டுக்கொண்டிருந்த சுப்பய்யா பின்கட்டில்போய் முத்துக்கருப்பன் செட்டியாருடைய மனைவியிடம் இதைச் சொன்னதுமன்றி, அந்தக்கோடங்கி வெகு சமர்த்தன் என்றும் மெச்சிக் கூறினான். அந்த ஆச்சி உடனே தன் நாயகனை அழைத்து கோடங்கி பார்க்கவேண்டியது அவசியம் தானென்று வற்புறுத்தினாள். இவ்விதம் ஆப்த நண்பர்களாலும், அருமை மனைவியாலும் முத்துக்கருப்பன் செட்டியாரின் உள்ளக்கருத்து நிறுத்தப்பட முடியாத ஓர் பலத்த தீர்மானமாக ஆக்கப்பட்டது. செட்டியார் உடனே கோடங்கியைப் பார்க்கவேணுமென்று

அளவற்ற பரபரப்புக் காட்டினர். சாப்பிட்டானதும் அவரும் சிநேகிதர் இருவருமாக வண்டி கட்டிக்கொண்டு திருமயம் போனார்கள்.

கோடங்கியைக்கண்டு வெற்றிலையில் கால் ரூபாய் தக்ஷிணைவைத்துக் கேட்டார்கள். அவன் உடுக்கு அடித்து தன் குலதேவதையை அழைப்பதாகக்கூறி தலையாட்டிக் கொண்டும், ஏதேதோ வார்த்தைகளை ராகமிழுத்து பாடிக் கொண்டுமிருந்தபின்,

"ஐயா நீங்கள் ஒரு பொருளைப்பற்றிக் கேட்கிறீர்கள்" என்றான்.

"என்ன பொருள்?" என்று கேட்டார் செட்டியார்.

கோடங்கி.—"பண்ணப்பட்ட பணிதி"

செட்டியார்.—"அதற்கென்ன நடந்தது?"

கோடங்கி.— (உடுக்கையடித்து முன்னும் பின்னும் வளைந்தாடிக்கொண்டு) "தவறிப்போச்சு"

செட்டியார்.—எவ்விடத்திலே தவறிப்போயிற்று?"

கோடங்கி.—"இருப்பிடத்திலே போனது"

செட்டியார்.—"எத்தனை நாளாச்சு"

கோடங்கி.—"சொற்பநாளாச்சு"

செட்டியார்.—"பண்ணப்பட்டபணிதி என்றால் என்ன பொருள்? விபரமாய்ச் சொல்லவேண்டும்."

கோடங்கி.—"நகை என்று சொல்லணும்."

செட்டியார்.—"என்ன நகை?"

கோடங்கி.— (சிலநேரம் உடுக்கடித்துப் பாடியபின்) "அரசர் போடுகிற நகை"

செட்டியார்.—"எவ்விடத்திலே அணிகிறது?"

கோடங்கி.—செட்டியாரை உற்றுப்பார்த்து, "கழுத்தி

லேயா, கையிலா, காதிலா, எங்கே போடுகிற நகை யெண்ணு கேட்கிறீர்கள்''

சேட்டியார்.—''ஆம்.''

கோடங்கி.—''கழுத்திலே போடுகிற நகை''

சேட்டியார்.—''எப்படி தவறிப்போச்சு''

கோடங்கி.—''மனிதர் எடுத்திருக்கிருக.''

சேட்டியார்.— ''அந்த மனிதரைக் குறிப்பிட முடியுமா?''

கோடங்கி.—(வெகு முடுக்காக உடுக்கை அடித்து உடல் வளைந்தாடி பாடிக்கொண்டிருந்த பின்) "எடுத்த மனிதன் யாரெண்ணு கேட்கிறீய, யாரெண்ணு கேட்கிறீய, எ! உப்பிலி மாகாளி, உரமான சாமுண்டி உள்ளதைச் சொல்ல வேணும் ஒளியாமல் சொல்லவேணும், தென்கோடி மூலே யிலே ஓங்கி வளர்ந்தவீடு, ஓங்கி வளர்ந்தவீடு, உயரமான கல்வீடு. கல்வீட்டுக் கொம்பனேயா, கடல்தாண்டி வந்த கொம்பன். அண்ணன் தம்பிமார், மூணுபேர் கொம்பருண்டு. ஆத்தாள் கிழவியுண்டு. அப்பனில்லே, தங்கையில்லே, ஆன பெண்பிறவியில்லே. எல்லாருக்கும் மூத்தவன் தான் எடுத்த தெண்டு சொல்லுருளே, எடுத்த தெண்டு சொல்லுருளே எரிகாளி சாமுண்டி. சொன்ன வாக்குப் பொய்யாது சொல்லுப் பிழைவாராது" என்று சொல்லி உடுக்கை நிறுத்திவிட்டு மூச்சு வாங்கினுன்.

சேட்டியார்.—''போன நகை கிடைக்குமா''

கோடங்கி.—''முயற்சித்தால் கிடைக்கும்''

சேட்டியார்.—''எப்படி முயற்சிக்க வேண்டும்?''

கோடங்கி.—''தெய்வம் மூலியமாய்''

இவ்வளவோடு முடிந்தது கோடங்கியின் தீர்க்க தரி

சனம். உடனே அவர்கள் வண்டி கட்டிக்கொண்டு ஊருக்குத் திரும்பலானார்கள்.

திரும்பி வருகிறவழியில் ஒவ்வொருவரும் கோடங்கிக்காரன் சொன்னதைப் பற்றி தங்கள் தங்கள் அபிப்பிராயங்களை வெளியிட்டனர். அதில் வீரப்ப செட்டியார் என்பவர் பேச்சுத்தான் பலமாக இருந்தது. முத்துக் கருப்பன் செட்டியார் பேச்சற்று அமர்ந்திருந்தார்.

வீரப்பன்.—(மற்ற இருவரையும் நோக்கி) "கோடங்கி சொன்ன அடையாளம் சோ. ம. அளகப்பனைக் குறிப்பதாக எனக்குத் தோன்றுகிறது.

மற்றவர்.—"ஏன், அவன் அப்படிப்பட்டவனா?"

வீரப்பன்.—"இலங்கையில் தேவகோட்டை. அரு. ராம. கடையில் மேலாளாகப் போயிருக்கையில் முதலாளி பணத்தை எடுத்து சொந்தத் தொழில் நடத்தினதாகவும், அனேக பணங்களை கணக்கிலே காட்டாமல் சுற்றிக்கொண்டதாகவும் கேள்வி. அதனால் பெரிய புகார் ஏற்பட்டது. ஆள் ஒருமாதிரிதான். அதுவுமன்றி பதக்கம் காணமற் போன மறுநாளே அவன் மதுரைக்குப் போயிருக்கிறான். இப்ப கோடங்கி சொல்வதும் சரியாய்ப் பொருந்தியிருக்கிறது. எதற்கும் சாக்கிரதையாய் விசாரணை செய்யவேண்டும்."

மற்றவர்.—"அவன் சேதி அப்படியா? எனக்கு இவ்வளவு நாளாக ஒன்றும் தெரியாதே."

முத்துகருப்பன் செட்டியார்.—"அவனைப் பற்றிப் பல வதந்திகள் வந்ததுண்டு. ஆனால் திட்டமாய் நாம் சொல்ல முடியுமா கோடங்கிக்காரன் சொல்கிறதுதான் ஒருமாதிரியாயிருக்கிறது"

வீரப்பன்.—"கோடங்கிக்காரன் சொல்லுகிறதோடே,

அவன் மறுநாள் மதுரைக்குச் சென்றதையும் சேர்த்துப் பார்த்தால் சந்தேகத்துக்கு இடமாயிருக்கிறது.''

இப்படி பேசிக்கொண்டே செவல்பட்டி வந்து சேர்ந்தனர். கோடங்கி பேச்சை வீரப்பசெட்டியார் உற்சாகமாய் வியாக்கியானம் செய்வதற்கு தகுந்த காரணமிருந்தது. இரண்டு வருடங்களுக்கு முன்னே ஒரு தோட்டச் சுவரின் விஷயமாக இருவரும் மனஸ்தாபம் நேரிட்டது. சிலர் மத்தியஸ்தம் பேசிப்பார்த்தும் வீரப்ப செட்டியார் விடாப் பிடியாய் தாம் சொன்னதே சரியென்று சாதித்தார். வழக்கு கோர்ட்டுக்குச் சென்றது. அங்கு அளகப்பனுக்கு அநுகூலமாய் தீர்ப்புச் சொல்லப்பட்டது. அது முதல் வீரப்பன் செட்டியாருக்கும், அளகப்பன் செட்டியாருக்கு மிடையில் பகை வளர்ந்து கொண்டிருந்தது. அளகப்பன் செட்டியார் இந்த பகைவளர்ச்சிக்கு எவ்வித அநுகூலமும் செய்யவில்லை. ஆனால் வீரப்பன் செட்டியார் மாத்திரம் தருணம் வாய்த்த பொழுதெல்லாம் அளகப்பனுக்கு தீங்கிழைக்க கங்கணம் கட்டிக்கொண்டிருந்தார். அப்படி அவர் சில சமயங்களில் முயன்ற பொழுது அது அவருக்கே அதிக நஷ்டத்தை விளைத்தது. குரோதம் பகை, பொறாமை என்னும் பேய்கள் ஒரு உள்ளத்தில் குடி கொண்டு விட்டால் பின்னர் லேசில் அதைவிட்டு வெளி கிளம்புமா ? ஆனால் இந்தப் பேய்கள் நாட்டுக் கோட்டை சமூகத்தில் வந்து நுழைந்ததுதான் ஆச்சரியம். முன்னர் இப்படிப்பட்ட குணங்கள் இந்த சமூகதாரிடம் எள்ளளவேனும் காணப்படவில்லை. இப்பொழுதுதான் அவை பேய்போல தலைவிரித்தாடுகின்றன. மோசம் செய்தல், அயல்நாட்டிலிருப்பவர்கள்மீது பொய் வழக்குச் சோடித்துத் துன்புறுத்துதல் முதலான சம்பவங்

களையெல்லாம் நாம் இப்பொழுதுதான் காண்கிறோம். இவ்விதப்பேயர்களில் இந்த வீரப்ப செட்டியாரும் ஒருவர். வழியிலே அளகப்பனைப்பற்றிச் சொல்லிவந்ததுடன் நில்லாமல், முத்துக்கருப்பன் செட்டியார் வீட்டுக்கு வந்தபிறகும் அவ்விஷயத்தைப்பற்றி வீரப்பசெட்டியார் பல விதங்களில் தூண்டினர். முத்துக்கருப்பன் செட்டியார் திடசித்தமில்லாதவராயும், பிறர்பேச்சுக் கேட்பவராயுமிருந்ததால், வீரப்பனுடைய பேச்சுக்குச் செவி கொடுத்தார். கடைசியில் வீரப்பன் சொல்வது சரியென்று அவர்மனதில் பட்டுப்போயிற்று. "எறும்பூரக் கல்லுந் தேயும்" என்ற பழமொழிக்கிணங்க மீண்டும் மீண்டும் குறிப்பாகவும் வெளிப்படையாகவும் வீரப்பன் செட்டியார் அளகப்பனுக்கு விரோதமான குரோதப் பேச்சுக்களை முத்துக்கருப்பன் செட்டியார் செவியில் விழும்படி செய்துகொண்டிருந்தமையால், அவருக்கும் அளகப்பன்மீது சந்தேகம் பலப்பட்டுவிட்டது.

"இதற்கு என்னசெய்யலாம்" என்று முத்துக் கருப்பன் செட்டியார் கேட்டார்.

வீரப்பசெட்டியார்.—"அவன் மதுரைக்குச் சென்றிருக்கிறான். யாராவதுபோய் அவனது நடவடிக்கையை கவனித்தால் ஏதாவது துப்புஅகப்படுமென்று நினைக்கிறேன்."

முத்துக்கருப்பன்.-"அப்படி செய்யத்தக்கவர் யார்? ஏன், நீரே போகக்கூடுமா ?"

வீரப்பன் செட்டியார் இவ்விதத் தருணத்தைத்தான் எதிர் பார்த்திருந்தாராகையால், "நீங்கள் அப்படி விரும்புவதாயிருந்தால்நான்போகத்தடையில்லை"யென்று கூறினர்.

கடைசியில் வீரப்பன் செட்டியார் அளகப்பனைப் பின்தொடர்ந்து மதுரைக்குப் போவதென்று தீர்மானிக்கப்பட்

டது. வீரப்பன் செட்டியாரும் மதுரைக்குப் புறப்பட்டு விட்டார். "தீமையகற்று" என்னும் நீதி வாக்கியத்தை சிறிவேனும் கவனியாமல் தீமை செய்ய துரிதமாய்ப் போகிறார். உலகத்திலே மற்றவர்களுக்கு தீங்கிழைப்பதற்காக மனிதர் எவ்வளவு பிரயாசை எடுத்துக்கொள்ளுகிறார்களென்று சிந்தியுங்கள். தீமைக்காகக்காண்பிக்கப்படும் சிரத்தையை நூறு பங்கு வைத்து, அதில் ஒரு பங்களவாவது நன்மைக்காகவும், பரோபகாரமாயும் முயற்சி செய்யப்படுமாயின் இந்த உலகம் தேவநாடாக மாறி விடாதோ?



## ஆறாவது அத்தியாயம்



### சேவல்பட்டியில் பத்மநாதன்.



திருமயத்துக்குச் செல்லும் சாலை வழியாக சோமசுந்தரமும் சொக்கநாதனும் பேசிக்கொண்டு வருகிறார்கள். பையன்கள் புத்தகங்களுடன் அவசரம் அவசரமாய் பாடசாலை நோக்கிப் போய்க்கொண்டிருக்கிறார்கள். போவோரும் வருவோருமான ஜனங்கள் தெருக்களிலே நடமாடுகிறார்கள். மரங்களின் அடியில் கட்டப்பட்டிருக்கும் மேடைகளில் பலர் உட்கார்ந்து பேசிக்கொண்டிருக்கின்றனர். ஜனங்கள் அதிகமாய் நடமாடுகிற பாகத்திலே சிறுமிகளும், பெண்களும் கூடைகளிலே பலகாரம், பழம் முதலியனவைத்து விற்றுக்கொண்டிருக்கிறார்கள்.

சொக்கநாதன்.—"சுந்தரம், அதோ பார். அங்கே நின்று பழங்களும், பலகாரங்களும் விற்பனை செய்கிறார்களே அவர்களெல்லாம் யார் வீட்டுப் பெண்கள்?"

சோமசுந்தரம்.—"அவர்கள் நமது நாட்டுக்கோட்டையார்ரின் பெண்கள் தான்."

சோக்கநாதன்.—"இப்படி இந்தப் பெண்டுகள் வந்து தெருச்சந்திகளிலும், மாத்தடிகளிலும் நின்று வியாபாரம் செய்வது சரியா? உனக்கெப்படி தோன்றுகிறது!"

சோமசுந்தரம்.—"இந்த வழக்கம் நமது ஜாதிக்குப் பெருமையாகத் தோன்றவில்லை."

இப்படிப் பேசிக்கொண்டு தெருவழியே வருகையில் சோமசுந்தரம் வீட்டுக்கு எதிர்வீட்டின் தலை வாயிலில் நின்றிருந்த ஒரு வயது முதிர்ந்த ஸ்திரி சொக்கநாதனை விளித்து க்ஷேமம் விசாரித்து, வீட்டுக்குள் வரும்படி அழைக்க, சொக்கநாதனும் சோமசுந்தரமும் உள்ளேபோய் திண்ணையில் உட்கார்ந்தார்கள். சொக்கநாதன் சிலநேரம் அந்த ஆச்சியுடன் குடும்ப யோகக்ஷேம விஷயமாய்ப் பேசியிருந்தபின், "என் சிவகாமிஆச்சி, தெருச் சந்திகளிலே, ஊருணிக்கரையோரம் ஆள் நடமாடுகிற பாகத்திலே நாட்டுக்கோட்டைப் பெண்கள், அதுவும் வாலிபப்பெண்கள் பெட்டிகளில் பழங்களும், பலகாரங்களும் வைத்துக் கொண்டு வருவோரையும் போவோரையும் பார்த்த வண்ணமாய் நின்று கொண்டிருக்கிறார்களே அது என்னத்துக்காக?" என்று கேட்டான்.

சிவகாமி ஆச்சி.—"ஏதும் பழம், பலகாரம் விற்கத்தான். வேறே என்னத்துக்கு?"

சோக்கநாதன்.—"பழமும், பலகாரமும் விற்கவா? சரிதான். ஏன் பழமும் பலகாரமும் விற்கவேண்டும்?"

சிவகாமி ஆச்சி.—"ஆத்தே, நல்ல கேள்வி, பலகாரம்

பழம் என்னத்துக்கு விற்பாக காசுக்குத்தான். வேறெதுக்கு? எல்லாம் காசுக்குத்தான்.''

சொக்கநாதன்.—''அந்தப்பழங்களும், பலகாரங்களும் அவர்களுக்கு எங்கிருந்து கிடைக்கிறது?''

சிவகாமி ஆச்சி.—''பலகாரம் பழங்களெல்லாம் கலியாணம், புதுமை வீடுகளிலிருந்து கிடைக்கிறதுதான். வீட்டிலே செய்த பலகாரத்தில் மிஞ்சுறதும் உண்டு.''

சொக்கநாதன்.—''இப்படிக் கிடைக்கிற பலகாரங்களையெல்லாம் அவர்கள் சாப்பிடுகிறதில்லையா?''

சிவகாமி ஆச்சி.—''பொசிப்பு இருந்தால்தானே அவர்கள் சாப்பிடுகிறது. தின்னுறதுதான் ஒண்ணுரெண்டு. மயித்ததெல்லாம் விற்கத்தான் கொண்டுபோகிறது.''

சொக்கநாதன்.—''அப்படி விற்கக்கொண்டுபோகிறவர்கள் ஏன் குறைசொல்லவேண்டும்? அந்தப்பழம் தரவில்லை; இந்தப்பலகாரம் குறைந்துபோச்சு என்று குறைபேசுகிறார்களே ஏன்?''

சிவகாமி ஆச்சி.—''கிடைக்கிறது குறைஞ்சா விலையிலும் குறையத்தானே செய்யும் அதுக்குத்தான்.''

சொக்கநாதன்.—''அப்படிதெருச்சந்திகளில் பலகாரம் விற்கிறபெண்களுக்கு தகப்பன் அல்லது புருஷன் கிடையாதோ?''

சிவகாமி ஆச்சி.—''ஏன் இல்லாமே? இருக்கத்தான் செய்கிறாக. என்னைப்போல இல்லாமலிருக்கிறதும் சிலது இருக்கிறதுதான்.''

சொக்கநாதன்.—''புருஷன் அல்லது தகப்பன் இருந்தால் அவர்கள் இந்தப் பெண்களின் சம்ரக்ஷணைக்காகப் பணம்கொடுக்கமாட்டார்களா?''

சிவகாமி ஆச்சி.—"பணங் கொடுக்கிறது தான்."

சொக்கநாதன்.—"அந்தப் பணம் போதாமலா இவர்கள் இப்படி வியாபாரம் செய்து பணந்தேடுகிறது?"

சிவகாமி ஆச்சி.—"இல்லை. இரண்டு காசு கிடைச்சா மிச்சந்தானே. பணமிண்ணு யார் வேண்டாமிண்ணு சொல்லுவா? பணமிண்ணு பொணமும் வாயைத்திறக்குமே"

சொக்கநாதன்.—"சரி, பணம் என்றால் ஒருவரும் வேண்டாமென்று சொல்லமாட்டார்கள் தான். ஆனால் அதற்காக குளக்கரைகளிலும் தெருச்சந்திகளிலும் வாலிபமான பெண்கள் போய் நின்று உபயோகமற்ற காலாடிப் பயல்களோடு வம்பு செய்து கொண்டு ஊசின பலகாரமும், அழுகின பழங்களும் விற்கலாமா?"

சிவகாமி ஆச்சி.—"அதுதான் நம்மஜாதியிலே வழக்கமாய்ப் போயிருக்கே. அதை நிறுத்த முடியுமா?"

சொக்கநாதன்.—"வழக்கமாய்ப் போயிருக்கு என்றால், தகப்பனார் கள்ளுக்குடிக்கிறது வழக்கமென்று மகனும் கள்ளுக்குடிக்கலாமா?"

சிவகாமி ஆச்சி.—"அது குடிக்கப்படாது தான்."

சொக்கநாதன்.—"சரி. அப்படியானால் வழக்கம்,வழக்கமென்று வாலிபப் பெண்கள் முச்சந்திக்குப் போய் நிற்கலாமா? அது அவர்களுக்கு வெட்கமாயில்லையா?"

சிவகாமி ஆச்சி.—"வெட்கமாயில்லைதான். அதுதான் வழக்கமாய்ப்போச்சே பிறகு என்ன வெட்கம்? அதை நிறுத்தறது எப்படி? நீங்க எல்லாரும் கூடி அதை நிறுத்திப்போடுங்க பார்ப்போம்."

சொக்கநாதன்.—"அப்படிச் சொல்லாதேயுங்கள். நீங்கள் சொல்லுகிறதுபோல அந்தவழக்கத்தை நிறுத்தமுடி

யாதென்று தோன்றுவதற்குக் காரணமென்ன ?"

சிவகாமி ஆச்சி.—"காரணமென்ன ? வழக்கந்தான் காரணம்"

சோக்கநாதன்.—"சரி, கடைசியில் எல்லாக் குற்றத்தையும் வழக்கத்தின் தலையில் போடுகிறீர்கள். பெண்களுக்கு படிப்பு இல்லாததாலும் அறிவில்லாததாலும்தானே அவர்கள் இப்படி தங்கள் மரியாதையைக் கவனிக்காமல் நடந்துகொள்ளுகிறார்கள்?"

சிவகாமி ஆச்சி.—"அப்படித்தான், அறிவில்லாமல் தான்."

சோக்கநாதன்.—"அதிருக்கட்டும் ஆச்சி, கலியாண காலத்திலே பெண்டுகள் ஒரு வேலையும் செய்யாமல், குத்தகைச் சமயல்காரர்களே விருந்து நடத்தும்படி விட்டுவிட்டு வீணே யிருக்கிறார்களே அதேன் ?"

சிவகாமி ஆச்சி.—"ஏன் என்றால் எனக்கு எப்படித் தெரியும்? குத்தகைச் சமையல்காரன் ஆக்கிப் போடுகிறான் அவர்கள் சாப்பிட்டிட்டு கொலுவுக்கு இருக்காக."

சோக்கநாதன்.—"கலியாணச் சமயத்தில் அப்படிக் கொலுவுக்கு இருக்கிற பெண்டுகள் எப்பொழுதும் அப்படி யிருந்தால் கௌரவமாயிருக்குமே. அப்படி யில்லாமல் தெருச் சந்திகளிலும் ஊருணிக்கரைகளிலும் போய் நிற்பது கேவலமாயில்லையா ?

சிவகாமி ஆச்சி.—"அவர்களுக்கு அந்த அறிவில்லையே என்ன செய்யறது ?"

இந்தச் சமயத்தில் ஒரு குதிரைவண்டி வந்து சோமசுந்தரம் வீட்டுவாயிலின் முன்நின்றது. அதனுள்ளிருந்து ஒரு யௌவன பருவமுள்ள செட்டியார் இறங்கினர்.

இதைக்கண்டு சோமசுந்தரமும் சொக்கநாதனும் சிவகாமி ஆச்சியிடம் சொல்லிக்கொண்டு சோமசுந்தரத்தின் வீட்டுக்குப்போனார்கள்.

குதிரைவண்டியில் வந்தவர் இவர்களைக் கண்டதும் சோமசுந்தரம் செட்டியார் யாரென்று கேட்க, சொக்கநாதன் சோமசுந்தரத்தைக் காண்பித்து "இவர்தான்" என்றான். உடனே அவர் தமது பெயர் அச்சிட்டிருந்த ஒரு கடிதத் துண்டை சோமசுந்திரனிடம் கொடுக்க, அவர் அதை வாங்கிப் பார்த்தார். அதில் "அ. சு. பத்மநாதன் துப்பறி நிபுணர்" என்று அச்சிடப்பட்டிருந்ததைக் கண்டு ஆச்சரியமடைந்து, "உங்களைப் பார்த்தால் சரியாக செட்டிபிள்ளைகள்போலவே இருக்கிறது. இவ்வித உருமாற்றம் தங்கள் தொழிலுக்கு அவசியமென்று நினைக்கிறேன். தங்களுடைய கடிதம் இரண்டு தினங்களுக்கு முன்னே வந்தது. நேற்றிலிருந்தே தங்களது வரவை எதிர்பார்த்திருந்தோம்" என்று சோமசுந்தரம் சொன்னார். இவர், களவைத் துலக்குவதற்காகச் சென்னையிலிருந்துவந்த பத்மநாதன் என்ற பெயருள்ள துப்பறி உத்தியோகஸ்தரென்பதை வாசகர்கள் நாம் சொல்லாமலே தெரிந்துகொண்டிருப்பார்கள். சோமசுந்தரம் சொல்லியதைக் கேட்ட அவர் புன்னகை பொலியும் முகத்துடன், "ஐயா, எங்கள் வேலைக்கு பலவிதவேஷங்கள் போடவேண்டியதிருக்கிறது. ஆனால் முழுவதும் வேஷமல்ல. நானும் ஒருவாறு நாட்டுக்கோட்டைச் செட்டியார்தான். அவ்விஷயமாய் இன்னொருநாள் உங்களுக்குச் சொல்லுவேன். இப்பொழுது நாம் தனியே இருந்துபேசுவதற்கு சௌகரியமான ஓர் இடத்துக்குப் போகலாமா? இந்த ஐயா தங்களுடைய நண்பர் என்று எண்ணுகிறேன்" என்றார்.

சோமசுந்தரம்.—"ஆமாம் இவர் எனது நண்பர் சொக்க நாதன் செட்டியார். இவர் முன்னிலையில் தாராளமாய் பேச லாம். நமது வீட்டு மேன்மாடியில் சாவகாசமாய் இருக்கும்; வாருங்கள்" என்றுசொல்லி பத்மநாதனை அழைத்துக்கொ ண்டுபோனார். சொக்கநாதனும் சென்றார். மேன்மாடிக்கும் போனதும் பத்மநாதன் களவைப்பற்றிய விருத்தாந்தங்கள் யாவையும் விபரமாய் கூறவேண்டுமென்று கேட்க சோம சுந்தரம் ஆதியோடந்தமாய் உரைத்தார். சொல்லிமுடியு மளவும் பத்மநாதன் கவனமாய்க் கேட்டுக்கொண்டிருந்தார் முடிந்ததும் வேறு ஏதாவது விஷயங்கள் உண்டோவென்று கேட்டார். சோம சுந்தரம் இல்லையென்று பதிலிறுத்தார்.

பத்மநாதர்' சோமசுந்தரம் சொன்னவற்றை யெல்லாம் தமது குறிப்புப் புத்தகத்தில் பதிந்துகொண்டு தான் அவ் விடத்தில் சிலநாள் சஞ்சரித்து இரகஸியமாய் ஆராய்ச்சி செய்யவேண்டு மென்றும் சிலதினங்களில் மீண்டும் வந்து விபரம் தெரிவிப்பதாகவுங்கூறி அவர்கள் இருவரிடமும் விடைபெற்றுக்கொண்டு வெளிப்பட்டார்.

சோமசுந்தரம் —"சொக்கநாதனைப் பார்த்து, 'இப்பொ ழுது வந்தவரைப்பற்றி என்ன நினைக்கிறாய்?" என்றுகேட்க சொக்கநாதன்" ஒருமரம் கெட்டதோ நல்லதோ என்பதை அதன் பழத்தால் அறியலாம், அதேபோல இவருடைய திறமையை இவர் செய்து முடிக்கும் வேலையின் பலனால் தானே அறியமுடியும். இப்பொழுது பார்க்க காம்பீரமாயும், புத்திசாலியாகவும் காணப்படுகிறார். நான் இவருடைய சாமர்த்தியத்தைப் பார்ப்பதற்காகத்தான் சுப்பய்யா விஷ யத்தைக்கூட குறிப்பிட்டுச் சொல்லவில்லை. "கெட்டிக்கா ரன் புளுகு" எட்டு நாளையில் தெரியுமென்பதுபோல இவ

ருடைய சமர்த்தும் சில நாட்களில் தெரிந்துவிடும் அதிருக்கட்டும், இவ்வூர்க் காவல்காரர்கள் இது விஷயமாய் வேலை செய்கிறார்கள் என்று சொன்னாயே அவர்களது முயற்சி, எம்மட்டில் இருக்கிறது?" என்றார்."

சோமசுந்தரம்.—"காவல்காரர்களா, அவர்கள் தினம் பத்து ரூபாவுக்குக் குறையாமல் துப்பு விசாரணைசெய்து வருகிறார்கள்."

சொக்கநாதன்.—"நீ சொல்வது எனக்கு விளங்கவில்லை தெளிவாய்ச் சொல்லேன்."

சோமசுந்தரம்.—(புன்னகையுடன்) "சென்ற ஏழெட்டு தினங்களாக அவர்கள் விசாரணை செய்து வருகிறார்கள். அங்கே தேடினோம், இங்கே தேடினோம், இன்னும் வேறு இடங்களில் விசாரிக்கப் போகிறோமென்று சொல்லிக்கொண்டு செலவுக்காக இதுவரை எண்பது ரூபா பற்றிவிட்டார்கள். இன்னும் எத்தனை ரூபா வரையில் துப்புத்துலக்குவார்களோ தெரியவில்லை."

சொக்கநாதன்.—"நீ ஏன் இந்த வீண்செலவை நிறுத்தக்கூடாது?"

சோமசுந்தரம்.—"இது என் தகப்பனாருடைய ஏற்பாடு. அவரது நோக்கத்தைக் கெடுப்பானேன் என்றிருக்கிறேன். இனி இவர் வந்து வேலை ஆரம்பித்திருப்பதால், காவல்காரர்களின் விசாரணையை நிறுத்தி விடவேண்டியது தான்"

பின்பு சோமசுந்தரமும், சொக்கநாதனும் மேன்மாடையிலிருந்து கீழே இறங்கினார்கள். திண்ணையில் பக்கத்து வீட்டுக்காரர்கள் மூன்றுபேர் உட்கார்ந் திருந்தார்கள். சீட்டுக்கட்டு ஒன்று பக்கத்தில் தயாராக இருந்தது. இன்னும் ஒரு ஆள் அகப்படுமானால் நாலு பேராகச் சீட்டாட

லாம் என்று அவர்கள் எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள். அப்படிப்பட்ட தருணத்திலே சோமசுந்தரமும், சொக்கநாதனும் வந்ததும் அவர்கள் சீட்டாட ஆள் கிடைத்ததென்றும் ஆநந்த மடைந்தனர். தாகவிடாய் கொண்ட மானானது நீரோடையைக் கண்டால் எவ்வளவு சந்தோஷப்படுமோ, அவ்வளவு சந்தோஷப்பட்டார்கள். நெடுங்காலம் பிரிந்த காதலனைக் கண்ட காதலி எவ்வளவு இன்புறுவாளோ அவ்வளவு இன்ப மடைந்தார்கள். குடிகாரன் மதுவைக் கண்டால் எவ்வளவு மகிழ்ச்சி அடைவானோ அவ்வளவு மகிழ்ச்சி அடைந்தார்கள். ஆநந்தம் பொலியும் முகத்தினராய் அவர்கள் சோமசுந்தரத்தையும், சொக்கநாதனையும் விளித்து ஆட்டத்துக்கு உட்காரும்படி கேட்டார்கள். சோமசுந்தரம் வேறு வேலையிருக்கிறதென்று மறுத்துவிட்டார். சொக்கநாதனை விளையாடும்படி சொல்ல அவன் "சீட்டாட்டம் காலத்தை வீணுக்குகிற விளையாட்டு. அதனால் எவ்வித பிரயோஜனமும் இல்லை. அதிலும் காசுவைத்து விளையாடுகிறதனால் அது சூதாட்டமாகிறது. சூது பஞ்சபாதகங்களில் ஒன்றாயிருக்கிறது. ஆகையால் நான் விளையாட மாட்டேன். தயவு செய்து நீங்கள் என்னை வற்புறுத்தக்கூடாது" என்று பதில் சொன்னான்.

"அடே அப்பா சொக்கன் பெரிய ஞானியாய்ப் போய்விட்டான் போலிருக்குதே" என்று சொல்லி அந்த மூவரும் சிரித்தார்கள்.

அந்த மூவர்களில் ஒருவரான அருணாசலம்செட்டியார் "சரி, ஞானியாரே, இப்படி வந்து உட்கார்ந்து கொண்டு உமது பிரசங்கத்தைச் செய்யும்" என்று சொல்லிக்கொண்டு சொக்கநாதனைப் பிடித்து இழுத்தார்.

சொக்கநாதன்.—"சூதும் வாதும் வேதனை செய்யும்" என்பது பெரியார் ஆப்தவாக்கியம். அதற்கு விரோதமாக இந் தவிளையாட்டு விளையாட எனக்கு இஷ்ட மில்லை."

அருணசலம் செட்டியார்.—"உனக்கு இஷ்டமில்லா விட்டால் போகட்டும் எங்களுக்கு இஷ்ட மிருக்கிறது; எங் கள் பேச்சுக்காகவாவது வநது உட்காருவேன். இரண்டு மூன் று பெரிய மனுஷாள் வந்து உட்கார்ந்து கூப்பிட் டால் வரமாட்டேன் என் று சொல்லலாமா?"

சொக்கநாதன்.—"தீமை என் று அறிந்த ஒரு காரி யத்தை யாரோ பெரிய மனுஷாள் சொல்லுவதற்காகச் செய் யலாமா?"

அருணசலம் செட்டியார்.—"ஆட்டத்துக்கு ஒரு ஆள் குறைகிறதே என் று கூப்பிட்டோம். நீ அதற்கு அசட விகடமாய் என்னென்னமோ போதனை செய்கிருய். அட, நம்மைக் கூப்பிட்டு விட்டார்களே என் று கூப்பிட்டவர்க ளுக்கு மதிப்பு கொடுக்க வேண்டாமா? சொக்கா நீ அறி யாத பிள்ளை. சரி இருக்கட்டும் சிறிது நேரமாவாவது வந்து உட்காரு."

சொக்கநாதன்.—"ஐயா நீங்கள் கோபித்துக்கொண் டாலும் கோபித்துக் கொள்ளுங்கள் நான் சீட்டாட வர மாட்டேன்."

அருணசலம் செட்டியார்.—"இதற்குப்பதில் சொல்லு முன், மற்ற இருவரில் ஒருவர் அவரைப்பார்த்து "என் அவனை மாறி மாறிக் கூப்பிடுகிறீர்கள் "மிஞ்சமிஞ்சக் கெஞ் சுகிறவனும்மடையன் ; கெஞ்சக் கெஞ்சக் மிஞ்சுகிறவனும் மடையன்" என்பதுபோல எப்ப நாம் கூப்பிட்டதைக் கவ னிக்கவில்லையோ உடனே பேச்சை நிறுத்திவிடவேண்டும்.

அதற்குப்பின்னும் பேசுவது உசிதமல்ல,'' என்று எரிச்சலாகச் சொன்னார்.

சொக்கநாதன் பணிவாக,'' ஐயா உங்கள் பேச்சைத் தட்டி நடக்க எனக்கு இஷ்டமில்லை. ஆனால் இந்தச் சீட்டாட்டம் காலத்தை வீணாக்குகிற ஒரு தீய விளையாட்டு என்று நான் நினைக்கிற படியால் இந்த ஆட்டத்தில் சேர எனக்கு இஷ்டமில்லை. ஆகையால் இவ்விஷயத்தில் உங்கள் சொல்லைத் தட்டவேண்டி யிருப்பதற்காக என்னை மன்னிக்கவேண்டும்'' என்று சொன்னான். ஆனால் அவர்கள் ஒன்றும் பேசாமல், நல்ல ஆட்டத்தைக் கெடுத்த நாசகாலன் முகத்தில் விழிக்கக் கூடாதென்று என்று எண்ணினவர்கள் போல மறுபக்கமாய்த் திரும்பிக்கொண்டனர்.

வைசிய மண்டலத்திலே நாட்டுக் கோட்டையாருக்குள்காணப்படும் மனோகரச் செயல்களில் சீட்டாட்டமும் ஒன்றாயிருக்கிறது. பந்தயம் வைத்தும், பந்தயம் வைக்காமலும் சீட்டாடுகிறார்கள். மனோகரமாய்ப் பொழுதுபோக்க ஏற்ற சாதனமாயிருப்பதால் அதில் தீங்கிருக்கிறதென்பதை முழுதும் மறந்து விடுகின்றனர். சூதாடல் ஐந்து மகாபாதகங்களில் ஒன்றென்பதை யாவரும் ஒப்புக் கொள்ளுவர். பந்தயமில்லாத சீட்டாட்டத்தை மகாபாதகம் என்று சொல்லாமல் "பொழுதுபோக்கு" என்ற பெயரால் அழைத்தும், அதற்கு யோக்யதை உண்டாய்விட மாட்டாது "காலமே கனகம்" அதாவது காலம் தங்கத்துக்குச்சரி யென்று காலத்தின் அருமை தெரிந்த நாடுகளில் ஒரு பழமொழி வழங்குகின்றது. நமது நாட்டிலோ காலத்தின் அருமை ஒரு சிறிதும் உணரப் படவில்லை யென்றே சொல்லவேண்டியிருக்கிறது. அதனாலே வானபரியந்தம் உயர்ந்து விளங்

இன நமதுதேசம் கெட்டு இதர நாடுகளின் காலடிகளுக்குக் கீழே தாழ்ந்துவிட்டது. நம நாட்டாரின் வாணுள் சராசரி இருபத்தைந்து வருடமென்று ஒரு சாஸ்திரி கணித்திருக்கிறூர். இதைதப்பித மென்று கூறியேனும், சராசரி ஐம்பது வருடங்களாக வைத்துக் கொள்ளுவோம். இதில் தன்செயலற்றுப் பையலாகக் கழித்து விட்டது பதினைந்து வருடங்கள். எஞ்சி நின்ற முப்பத்தைந்து வருடங்களில், நித்திரா தேவிக்கு அர்ப்பணம் செய்கது அரைவாசி, மீந்தது பதினேழரை அல்லது பதினெட்டு வருடங்கள். இதில் உண்ணல, உடுத்தல், குளித்தல், களித்தல், வெற்றிலைமெல்லுதல் புகைக்குடித்தல், மூக்குத்தூள் உறிஞ்சுதல் சோம்பிக் கிடத்தலாகிய பலவகைச் செயல்களுக்கும், அவற்றுக்கு ஆதாரமாகும் வேலை, வியாபாரமாகிய தொழில்கள் செய்வதற்கும் பாகித்துக்கொடுத்து மீதமாவதைக் கணித்துப் பார்த்தால் அப்பொழுது காலத்தின் அருமை தெற்றெனப் புலப்படும். இப்படிப்பட்ட பொன்னுன காலத்தைப் போக்கடிக்கும், ஒரு பொழுதுபோக்கை ஆட்டத்தை என்னென்று சொல்லலாம்? நமக்கு அருமையாகக் கிடைத்திருக்கும் காலத்தை வீணில் கழிக்கலாமா? ஒவ்வொரு நாளும் காலத்தைவழிமுறையோடு செலவிடுபவர்களுக்கு அதிக வருமானம் வருகிறது. அதற்குமாருக ஒழுங்கில்லாமல், இஷ்டமான நேரம் மாத்திரம் வருந்திவருந்திவேலை செய்தாலும், தலைக்கீழாகக் குட்டிக்கரணம்போட்டாலும் தக்க லாபம் கிடைப்பதில்லை என்? காலத்தைச் சரியான வழியில் உபயோகப்படுத்த அறியாமையால்தான். நம்மவர்கள் காலத்தின் அருமையையும், ஆயுளின் சுருக்கத்தையும் உணர்ந்து இன்னின்ன வேலைகள் இன்னின்ன நேரத்தில் செய்வதென்று ஒரு திட்

டம் ஏற்படுத்திக்கொண்டு அவ்விதமே செய்து வருவார்களா ஞல் அனேக நன்மைகளுண்டாகும். "நின்றநாளைக்கு நெடுஞ் சுவர் விழுந்த பொழுது குட்டிச்சுவர்" என்ற எண்ணத்தை ஒழித்து விடவேண்டும்.

இவ்விஷயமாய் ஒருகால் இரண்டு நகரவைசியர் பேசிக் கொண்டிருக்கையில், ஒருவர் "சீட்டாட்டம் அவ்வளவு கெடுதி யென்று நான் நினைக்கிறதில்லை. ஒரு விஷயமாய்ப் பார்த்தால் அதை ஓர் புண்ணிய சாதகம் என்றுகூடச் சொல்லலாம்" என்று கூறினாராம் மற்றவர் "அதெப்படி" என்று கேட்க, முதல்வர்" நாம் சிவராத்திரி விரதகாலங்க ளில் கண்விழித்திருப்பதற்காக சீட்டாடுகிறோமல்லவா? சீட்டாட்டம் இல்லாமலிருந்தால் தூக்கம் வந்து விரதத் துக்கு பங்கம் நேரிடக்கூடும். அப்படி விழித்திருக்க அனு கூலமாயிருப்பது சீட்டாட்டம் தானே? ஆகையால் அதை ஓர் புண்ணிய சாதகம் என்று தடையின்றிக் கூறலாம்" என்று வியாக்கியானம் செய்து தம் நியாயதோரணையின் சாமர்த்தியத்தை வெளிப்படுத்தினாராம்!

விரதத்தின்போது அநுஷ்டிக்க வேண்டிய நியம நிஷ் டைகளை புறக்கணித்துத் தள்ளிவிட்டு சீட்டாட உட்கார் ந்து, விரதத்தை மானபங்கம் செய்தது மன்றி, விரதத் தின்போது சீட்டாடியதால், சீட்டாட்டம் புனிதமாகி விட் டதென்று நியாயம் பேசும்மானிடரை என்ன சொல்வது?



## ஏழாவது அத்தியாயம்.



### தலைச்சேரி தாமோதர சுவாமிகள்.



அன்று மாலை நாலு மணியிருக்கும். காவிவஸ்திர மணிந்து சடைமுடியுடன் விளங்கும் ஒரு பரதேசி, முத்துக்கருப்பன் செட்டியார் வீட்டுக்கு வந்தார். அவர் கையில் ஒரு வளைந்த கருந்தடி இருந்தது. வயது சுமார் நாற்பது இருக்கலாம். நல்ல தேகக்கட்டும், ஆரோக்கியமு முள்ளவராகக் காணப்பட்டார். வெளித் திண்ணையில் முத்துக்கருப்பன் செட்டியாரும் வேறு சிலரும் இருந்தனர். பரதேசி, "ஐயா நான் ஓர் பரதேசி. பசியாயிருக்கிறது. சாப்பாடு தர வேண்டும்" என்று தாழ்மையான குரலிலே கேட்டார். அங்கிருந்த ஒருவர் "இப்போ நாலுமணியாகிறது. சாப்பாடு எங்கேயிருக்கும் அகாலவேளையாயிற்றே" என்க பரதேசி "ஐயா, ஏதோ இப்போகிடைக்கக்கூடியது. வெறும்பருக்கையும் தண்ணீருமானாலும் போதும். பசி அகோரமாயிருக்கிறது" என்று கேட்டோர் மனமிளகவேண்டினார். முத்துக் கருப்பன் செட்டியாருக்குபரிதாபம் உண்டாயிற்று. உடனே வேலைக்காரன் சுப்பய்யாவை அழைத்து பரதேசிக்கு ஏதாவது அன்னமிருந்தால் போடும்படி சொல்ல, சுப்பய்யா பரதேசியைப் பின் பக்கமாய் வரச்சொல்லித் தான் உள் சட்டுக்குள் நுழைந்தான்.

பரதேசியும் பின்பக்கமாகச் சென்று வீட்டின் பின் வாயிலைக் கிட்டினார். அதற்குள் சுப்பய்யா அங்குதோன்றி அவரை அழைத்து அங்கு ஓர் இடத்தில் இருக்கச்சொல்லி

இலை போட்டு,ஒரு செம்பில் தண்ணீரெடுத்துக் கொடுத்தான். அவர் கைகால்களைச் சுத்தஞ்செய்து, கையை வஸ்திரத்தில் துவட்டிவிட்டு வலதுகைப் பெருவிரலினாலும், ஆள்க்காட்டி விரலினாலும் நெற்றியிலிருந்து எதையோ வழித்தெடுப்பதுபோல எடுத்து அவ்விரண்டு விரல்களையும் சேர்த்து பிசைந்தார். வெண்மையான விபூதி வெளிப்பட்டது. பிசைந்த விரல்களினிடையிலிருந்து வெளிப்பட்ட விபூதியை இடது உள்ளங்கையில் தாங்கி அதையள்ளி நெற்றியிலும் கழுத்திலும் பூசிக்கொண்டார். சுப்பய்யா இதைப்பார்த்து ஆச்சரியப்படுவதைக்கண்டு "இந்தாப்பா" என்று அவனுக்கு மீதமிருந்த விபூதியைக்கொடுக்க அவன் பயபக்தியுடன் அதை வாங்கித் தரித்துக்கொண்டான். விபூதிமகிமையால் பரதேசிக்கு நல்ல சாப்பாடுகிடைத்தது. சுப்பய்யா மடைப்பள்ளியை ஆராய்ச்சிசெய்து அந்தநேரத்தில் கிடைத்த பதார்த்தங்களுடன் அன்னத்தைப் படைத்தான். பரதேசி சாப்பிடும்பொழுது இடையிடையே, "சம்போ, சங்கரா, மகாதேவ, ஆபத்பாந்தவ அநாதரக்ஷக," என்று சொல்லிக்கொண்டே சாப்பிட்டுக்கொண் டிருந்தார். சுப்பய்யா வைத்தகண் வாங்காமல் அவரையே பார்த்துக்கொண்டிருந்தான். என்னென்ன மகத்துவங்கள் இவரிடம் இருக்குமோ வென்று எண்ணலானான். இதற்குள் பரதேசி சாப்பிட்டு எழுந்தார். சுப்பய்யா அவசரம் அவசரமாக செம்பில் ஜலங்கொணர்ந்து கொடுத்தான். சாப்பாட்டுவேலை முடிந்ததும் பரதேசி தன் கண்களை ஏறெடுத்து "பகவான் கடாட்சிக்கணும்" என்று வாய்விட்டுக்கூறி பின்னும் ஏதேதோ மொணமொணத்த பின்னர், சுப்பய்யாவின்மீது தன் பார்வையை கணநேரம் செலுத்திவிட்டுத் திரும்பலானார்.

சுப்பய்யா பின்னுலோடி "சுவாமிகள் இருக்கிறதெங்கே" என்று கேட்டான் பரதேசி திரும்பி அவனை உற்றுநோக்கிச் சற்று நிதானித்து "நான் பிறந்தது, தலைச்சேரி, மலையாளம். இப்பொழுது பன்னிரண்டு வருஷமாச்சு ஊர்விட்டு இமயகிரி முதல் கன்னியாகுமரி வரையில் தீர்த்தஸ்தலங்களைத் தரிசித்து வருகிறேன். இப்போ இங்கே ஓர் மடத்தில் இருக்கிறேன். நீ அதையெல்லாம் ஏன் கேட்கிறை? நல்லாயிரு" என்று சொல்லி சரேலென்று போய்விட்டார். அவர் மலையாளம் என்று சொன்னதே சுப்பய்யா மனதில் என்னென்னமோ எண்ணங்கள் உதித்தன. மலையாளம் மாந்திரீகத்துக்கு உறைவிடம் என்பது ஜனங்களின் நம்பிக்கை. ஆகையால் இவருக்கு மாந்திரீகம் தெரியுமென்றும், இரும்பு, பித்தளை முதலான கீழ்தர உலோகங்களைப் பசும் பொன்னுக்கும் ரசவாதவித்தை தெரியுமென்றும் சுப்பய்யா, தானே தீர்மானித்துக் கொண்டான். "அறியாமைக்கு ஆயிரம் குதிரைப்பலம்" என்று சொல்லலாம், இத்துணை பலங்கொண்ட அறியாமையின் மேல் கட்டப்படும், நம்பிக்கை சுலபத்தில் மாறுமா? சுப்பய்யாவின் நம்பிக்கை கணமொரு வண்ணமாக வளர்ந்துகொண் டிருந்தது. இந்த ஞானியிட மிருந்து ஏதும் அனுக்கிரகம்பெற வேண்டுமென்று தீர்மானித்துக் கொண்டான்.

உடனே சுப்பய்யா முன்கட்டுக்கு ஓடோடியும் சென்று அங்கிருந்த முத்துக்கருப்பன் செட்டியாரிடத்தில், சாப்பாடு கேட்ட பெரியவரின் பிரதாபங்களைப்பற்றிச் சொன்னுன். இன்னும் நன்ருய் விவரித்துக்கூற தனக்கு வாக்குவல்லமை இல்லையே என்று அவனுக்குண்டான ஆற்ருமை சொல்லுந் தரமல்ல. அதைக் கேட்டவர்கள் உள்ளத்திலும் அவரைப்

பற்றி மதிப்பான எண்ணங்கள் உதித்தன மந்திர, தந்திரம் தெரிந்த சுவாமி, சன்னியாசிகளென்றால் பொதுவாக நமது நாட்டிலே, சிறப்பாக வைசியமண்டலத்திலே, அவர்களுக்கு விசேஷ மதிப்பு,பயம், பக்தி-இவைகளெல்லாம் காட்டபடும். இது எல்லோருக்கும் தெரிந்தவிஷயமே. இதற்குகாரணம் என்னவென்று தெரியுமா? சுவாமியை நயந்து இரண்டொரு மந்திரங்கள்கற்றுக்கொண்டால் மற்றவர்கள் கண்டஞ்சும்படியான ஓர் நிலைக்கு வந்துவிடலாம். இல்லையேல் மண்ணைப் பொன்னாக்கும் வித்தை தெரிந்துகொண்டு வீட்டுக்கருகில் கிடக்கும் தரிசுமணையை மகாமேருபோல் பொன்னாக்கி மட்டில்லா சம்பத்தை அடையலாம், என்னும் பேராசைதான். வேறு காரணமில்லை. சுவாமியாரிடம் ஞானோபதேசம் பெற்று முக்திவழி நிற்க வேண்டுமென்கிற எண்ணமோ? அது சொப்பனத்திலும் கிடையாது.

யோக்கியமான வேலைசெய்து ஜீவனஞ்செய்ய ஆண்மையில்லாத வீணர்கள் பலர் இதைத் தெரிந்துகொண்டு பரதேசிகளாகவும், சன்னியாசிகளாகவும் வேஷம்பூண்டு வெளிவருகின்றனர். ஏமாந்த வள்ளல்கள் எவரும் அகப்படமாட்டார்களாவென்பது அவர்களின் ஏக்கம். செட்டிநாட்டிலும் பர்மா மலாய் நாடுகளிலும் காலாகாலங்களில் இப்படிப்பட்ட சுவாமிகள் பலர் தோன்றுவது வழக்கம். அதிர்ஷ்டசாலிகளான சிலர் அகப்பட்டவரையில் சுற்றிக்கொண்டு அந்தர்த்தனமாகி விடுவார்கள். சிலருக்கு சில வாரங்கள் அல்லது மாதங்கள் வரையில் சுக்கிரதிசை அடித்துப் பிறகு வக்கிரதிசையாக மாறி சனி பிடிக்கிறதுமுண்டு. அப்பொழுது சுவாமிகளின் குட்டு வெளிப்பட்டு கும்மா குத்துகளும் 'நடையன்' பூசையும் கிடைத்

தாலும் கிடைக்கும். இரண்டொரு திருட்டு சாமிகள் வந்திருந்தபொழுது லட்சாதிபதிகளான சிலர் செம்பிலே ஜலம் எடுத்துக்கொண்டு சுவாமிகளின் பின் சென்றதாகக் கூடப் பிரஸ்தாபம். சாமிவேடம் பூண்ட வேறு சிலர் ஒரு குறிப்பிட்ட ஸ்தலத்தில் கோவில் அல்லது மடம் கட்டப் போகிறதாகவும், அதற்குப் பணம் சேகரிக்க வந்ததாகவும் சொல்லிக்கொண்டு நகரவைசிய கனவான்களுக்கு தாங்களே தயாரித்த சிபாரிசுக் கடிதங்களுடன் வருவார்கள். சிபாரிசுக் கடிதங்கள் உண்மையானவையல்ல வென்பதைத் தெரிந்து கொள்ளாமலே நாட்டுக் கோட்டையார் பணவுதவி செய்ய, அதை வாங்கிக்கொண்டு அவர்கள் தங்களூர்போய் சுகமாக வாழ்ந்திருப்பார்கள். சிலவேளைகளில் சிபாரிசுக் கடிதங்கள் தப்புக் கையெழுத்துள்ளவையென்று வெளிப்பட்டு, கொண்டு வந்த சுவாமிகளின் மோசம் பகிரங்கமாகும். என்றாலும் சுவாமி வேடம் பூண்டவர்களுக்கு, கண்ணியத்துக்குக் குறைவில்லை. அதிலும் நாட்டுக்கோட்டையார் அன்னாரிடம் காட்டும் பக்திக்கு ஒரு எல்லையே கிடையாது.

பல தடவைகளில் ஏமாற்றப் பட்டும், அதன் பின்னராவது பாத்திரமறிந்து பணவுதவி செய்யவேண்டுமென்ற ஞானம் பொலிவதாகக் காணப்படவில்லை. கோவில் கட்டுதல், குளம் வெட்டுதல், அந்த சாலை ஸ்தாபித்தல் முதலிய பொது நன்மைக்கான கைங்கரியங்களில் ஒன்றுக்காக பணஞ் சேரிக்க ஒரு சாமியார் வந்திருப்பதாக வைத்துக்கொள்ளுவோம். சுவாமியின் வெளிக்கோலம் சொல்லுந்தரமல்ல. சடை முடி துலங்குகிறது. விபூதி வெண்மையாய் ஒளிர்கின்றது. காஷாய வஸ்திரம் கண்ணைக் கவரு

கின்றது. கழுத்திலே ருத்திராட்ச தாவடம். கையிலே வளைந்த ஒரு தடி. அவர் உட்காரும் பொழுதெல்லாம் "சிவ சிவா" என்கிறார். எழுந்திருக்கும்பொழுது "ஹர ஹர" என்று உச்சரிக்கிறார். நடக்கும் பொழுதெல்லாம் இடையிடையே "ஆ ஆபத்பாந்தவா, அநாத ரட்சகா, சம்போ, சங்கரா" என்று தமக்குத் தாமே சொல்லிக் கொள்ளுகிறார் என்றும் வைத்துக்கொள்ளுவோம். இதெல்லாம் வெகு நன்றாய்த்தானிருக்கிறது. என்றாலும் அவர் குறிப்பிடும் முயற்சி பணவுதவி செய்வதற்குப் பாத்திரமுள்ளதா? அப்படி பாத்திர முள்ளதாயினும், "ஹர ஹர" வென்று பணம் வாங்கும் சுவாமியார் அந்தப் பணத்தை யெல்லாம், குறிப்பிட் பணிக்குச் செலவிடுவாரா? அல்லது 'சிவசிவா' என்று அவர் தம்சொந்த செலவுக்குத்தான் வைத்துக் கொள்ளுவாரா? அந்தப்பணியை நடத்துகிறவர் யார்? அந்த ஊர்க்காரர் அதற்கு வேண்டிய உதவி செய்யமாட்டார்களா? அவர்கள் இந்தச் சுவாமியார் பணம் சேர்க்க வந்திருப்பதை அறிவார்களா என்று தீர விசாரணை செய்து அதற்கு பணவுதவி செய்வது தான் விவேகமாகும். வேஷத்தை நம்பி கண்டவர்களுக் கெல்லாம் பொருளை யள்ளிக்கொடுப்பது அப்படிப்பட்ட மோசக்காரர்களை பரிபாலிப்பதுபோலாகும். அதனால் பாதகம் விருத்தியாவதல்லாமல் வேறு பலன் ஒன்றுமில்லை. குளிக்கப்போய் சேறுபூசிக்கொண்டதைப்போல, புண்ணியத்தைநாடிப் பணத்தைக் கொடுத்து பாவத்தைக் கட்டிக்கொள்ளலாமா?

பரதேசியைப்பற்றி சுப்பய்யா வந்து சொன்னதின் மேல், முத்துக்கருப்பன் செட்டியாருக்கும் மற்றவர்களுக்கும் அவரைப்பற்றி நல்ல மதிப்புண்டானதென்று மேலே

கூறினேம். அவர்கள் யோகிகளையும், சன்னியாசிகளை யும், அவர்களின் மகத்துவங்களையும் பற்றிப்பேச ஆரம்பித் தார்கள். "மலையாளம் பக்கத்திலிருந்து யோகசித்திபெற்ற பெரியோர் இவ்விதமாக சில தடவைகளில் வருவதுண்டு" என்று ஒருவர் கூறினர். இன்னொருவர் "ஆம் அது உண் மையே. நான் ஒருவரைப்பற்றிக் கேள்விப்பட் டிருக்கி றேன். அவர் பெயர் இராமநாதசுவாமி. அவருக்கு பல சித்து வித்தைகள் தெரியுமாம். சின்ன விசுப்பலகையொன் றில் பதுமாசன மிட்டிருந்துகொண்டு கைகளை முன்பின் னுக ஆட்டி அந்த விசுப்பலகையை முன்னும் பின்னும் நகர்ந்து போகச்செய்ய வல்லவராம். ஒரு தடவை அவர் பத்மாசன மிட்டிருந்துகொண்டு ஒரு தடியைத் தரையில் ஊன்றி அதனுச்சியில் தனது வலது உள்ளங்கையை மாத் திரம் வைத்தழுத்தி, அந்த ஆதாரத்தினலேயே தரைக்கு மேல் சிலதூரம் ஆகாயத்தி லெழும்பி ஊசலாடிக்கொண் டிருந்தாராம். இதை அனேகர் கண்ணாரக்கண் டிருக்கிறார் கள். இன்னும் இதுபோன்ற பல அபூர்வ வேலைகளையும் அவர் செய்ததாகக் கேள்வி" என்றார்.

இந்தப் பேச்சுகளை யெல்லாம் கேட்டுக்கொண்டு அது வரையில் மௌனமாயிருந்த ஒரு செட்டியார் அப்பொழுது சொல்லுவார், "இதற்கெல்லாம் மனவுறுதிவேண்டும். மனம் உறுதியாவதற்கு தேகம் பலமாயும் ஆரோக்கியமாகவும் இருக்கவேண்டும். வைராக்கிய சித்தம் வேண்டும். இதை ஏகாக்கிர சித்தம் என்று சொல்லுவார்கள். இப்படிப்பட்ட ஒரே முகப்பட்ட உறுதியான மனதால்—ஏகாக்கிர சித்தத் தினல் - பேதை மனங்களை அடக்கத்தக்க மனோ வலிமை உண்டாகலாம். ஆனல் இந்த மனோசக்தி சன்மார்க்க ஜீவி

யத்தையே ஆதாரமாகக் கொண்டது. ஆதலின் தீமை செய்ய இந்த சக்தியை உபயோகிக்கப்படுத்த முடியாது. அப்படி உபயோகப்படுத்தினால் அந்தச் சக்திகுன்றி மனோ வலி குறைந்துவிடும். இப்பொழுது சில பெரிய ஆஸ்பத்திரி களிலே நோயாளிகளுக்கு ரணவைத்தியம் செய்யும்பொ ழுது குளோரபாம் என்ற மயக்க மருந்துக்குப் பதிலாக இந்த மனோசக்தியால் பிணியாளிகளைமயக்கி சத்திரம் செய்கி றார்கள். இதை மெஸ்மெரிஸம்என்றும் ஹிப்னாடிசம் என்று மேனாட்டார் சொல்லுவதுண்டு. முற்காலத்தில் இந்த வித்தை நமது நாட்டிலே சன்னியாசிகளுக்கும், முனிவர்க ளுக்கும் மிக்க எளிதாயிருந்தது. அதனால் அவர்கள் பொது ஜனங்களுக்கு பெரிதும் நன்மைபுரிந்தனர். ஜனங்களுக்கு அதனால் தான் மாந்திரீகம், மந்திரம் சன்னியாசி என்றால் அத்யந்த பக்தியுண்டாகிறது. இப்பொழுது அத்தகைப் பெரியோரைக் காண்பதரிது. வீணர்களும், வேஷக்கார ரும் ஜனங்களை ஏமாற்றச் சுற்றித்திரிகின்றனர். "ரசவாதம் தெரியும், இரும்பு, பித்தளைகளைப் பொன்னாக்குவோ"மெ ன்று அவர்கள் சொல்லுவார்கள். அதெல்லாம் சுத்தப்புர ட்டு. தங்கம் செய்யத் தெரிந்தால் அவர்கள் நம்மிடம் ஏன் வந்து பணங்கேட்கவேண்டும்? வழியில் கிடக்கும் இரும் புத்துண்டுகளைப் பொன்னாக்கிக்கொண்டு சுகமாய் வாழலா மே" என்று கூறினார்.

இனி நமது பரதேசியைப் பின்தொடர்ந்து அவரு டைய நடபடிகளைக் கவனிப்போம். சாப்பிட்டுவிட்டு முத் துக்கருப்பன் செட்டியார் வீட்டைவிட்டு நீங்கிய பரதேசி சாதுக்கள், சன்னியாசிகள் தாமதிக்கும் ஓர் மடத்துக்குச் சென்று, அங்கோரிடத்தில் தமது வஸ்திரத்தை விரித்துப்

படுத்துக்கொண்டார். இப்பொழுது அவர் "சம்போ சங்கரா" என்றாவது "மஹாதேவ, கோவிந்தா" என்றாவது தேவநாம உச்சாரணம் செய்யவில்லை. ஏதோ பெருத்த ஆலோசனையில் மூழ்கினவரைப்போல காணப்படுகிறார். என்னயோசனை செய்கிறார்? தேகமுழுவதிலும், தமது நினைவைச் செலுத்தித் தேகதியானத்தில் அமர்ந்திருக்கிறாரா? அல்லது, வானை ஒரு வில்லாக்கி தமது சிந்தனையை அம்பாக்கி அண்டபுவனங்களைக் கடந்து செல்லும்படி அதனை எய்து மானத வில்வித்தைை பழகுகின்றாரா? இல்லையேல், எத்தனை செட்டிபிள்ளைகளை ஏமாற்றலாம், எந்தெந்த வழிகளில் பணம் தட்டிக்கொண்டு போகலாமென்று எண்ண மிடுகிறாரா? எல்லாம் அவருடைய மேல்நடபடிகளிலிருந்துதான் வெளிப்பட வேண்டும்.

இப்படியிருக்கையில் இவரைப்போலவே காவி உடையும் சடைமுடியுங் கொண்ட ஓர் கிழச் சன்னியாசி அங்கு வந்து உட்கார்ந்தார். படுத்திருப்பவரைக் கணநேரம் உற்றுப்பார்த்துவிட்டு "சுவாமிகளுக்கு இருப்பிடம் எது வென்று நான் தெரிந்து கொள்ளலாமோ?" என்று கேட்டார்.

படுத்திருந்தவர், அவரை பார்த்து "தெரிந்துகொள்ளலாம்" என்றார். முதலில் பேசினவர் சில நேரங்காத்திருந்தும், படுத்திருந்தவர் பேசாததால், அவர் தமக்குத்தாமே பேசிக்கொள்பவர் போல "சுவாமிகளுக்குச் சொல்ல இஷ்டமில்லை போலிருக்கிறது" என்று சொன்னார்.

படுத்திருந்தவர்.—"எந்த சுவாமிகளுக்கு என்ன சொல்ல இஷ்டமில்லை?"

முதலில் பேசினவர்.—தங்களைத்தான், சுவாமி, தங்களுக்கு இருப்பிடம் எது வென்று கேட்டேன்."

படுத்திருந்தவர்.—" அப்படியல்ல சுவாமிகளே, தாங்கள் என்னிருப்பிடத்தை தெரிந்துகொள்ளலாமா வென்று கேட்டீர்கள். நான் உடனே தெரிந்துகொள்ளலாம் என்று சொன்னேனே."

"முதலில் பேசினவர்.— (சிரித்துக் கொண்டு) ஆம், ஆனால் தாங்கள், இருப்பிடத்தைச் சொல்லவில்லையே."

படுத்திருந்தவர்.—"சுவாமிகளே, தாங்களும் அதைக் கேட்கவில்லையே. இருப்பிடம் எது வென்று தெரிந்துகொள்ளலாமோ, என்றல்லவா கேட்டீர்கள். தெரிந்து கொள்ளலாமோ கூடாதோ வென்று நீங்கள் சந்தேகப்படுவதாய்க் காணப்பட்டது. நான் தாங்கள் தெரிந்து கொள்ளலாம் என்று சந்தேகம் தீரப் பதில் கூறவில்லையா?"

முதலில் பேசினவர்.—(கலகலவென நகைத்து) "சரி என்மேல்தான் குற்றம் சுவாமிகளே, தங்களது ஊர் எது?"

படுத்திருந்தவர்.—"எனது ஊர் தலைச்சேரி, மலையாளம் ஜில்லா."

முதலில் பேசினவர்.—சுவாமிகளுடைய நாமதேயம் என்ன?

படுத்திருந்தவர்.—" எனது நாமம் தாமோதரன். தேயம் மலையாளம்; ஆனால் தற்காலப் போக்கின்படி இந்தியா வென்று தான் சொல்ல வேண்டும்."

முதலில் பேசினவர் பின்னும் ஏதோ கேட்கப் போவதைக் கண்டு படுத்திருந்தவர் " சுவாமிகளே ஒருமனு. நான் இப்பொழுது சாப்பிட்டுவிட்டு களையாரப் படுத்துக் கொண்டிருக்கிறேன். தங்களுக்கு இன்னும் ஏதாவது கேள்வி கேட்கவேண்டுமானால் நாலைக்காலையில் கேளுங்கள். எத்தனை நூறு கேள்விகளானாலும் அட்டியில்லாமல் பதில் கூறுகி

றேன்." என்றார். முதலில் பேசினவர்" இதேது இவர் நம்மை நெருங்க விடாமல் வெருட்டிவாங்குகிறாரே" என்று எண்ணி, வெளியாங்கமாய் "சுவாமிகளுடைய இஷ்டம், நான் கேள்விகேட்டு சிரமமுண்டாக்கினதற்காக க்ஷமிக்கவேண்டும்" என்று கூறிக்கொண்டு வேறொரு மூலைக்குச் சென்றார்.

இவர் பெயர் தலைச்சேரி தாமோதர சுவாமி என்று தெரிந்து கொண்டோம். ஆனால் இவர் உண்மையான சன்னியாசிதானா?



## எட்டாவது அத்தியாயம்.



### காவல்காரரின் அதிக்கிரமம்.



திருமயத்திலிருந்து செவல்பட்டிக்குப் போகிற ரஸ்தா மார்க்கத்திலே காட்டுவாவா பள்ளி வாசல் என்று ஓர் முகமதிய மசூதியும் அதைச் சுற்றி சில வீடுகளுமிருக்கின்றன. முகம்மதியர் இவ்விடத்தில் வருடந்தோறும் ஒரு பண்டிகை கொண்டாடுவதுண்டு. அப்பொழுது பல விடங்களிலிருந்தும் ஆயிரக் கணக்கான முகம்மதிய ஜனங்களும், இந்துக்களில் சிலரும் அங்கே வந்து கூடுவார்கள். இந்தக் கிராமத்துக்குச் சில தூரத்தில் பாறைகள் குன்றுகளும், மாஞ் செடிகளும் அடர்ந்த ஓர் காட்டுப் பிரதேசம் வண்டி பாதையின் இரு மருங்கிலும் சில மைல்தூரம் பரந்து கிடக்கின்றது. இது கள்வருக்கேற்ற கானகம். இங்கு கொள்ளைகளும் வழிப் பறிகளும் நடப்பதுண்டு. ஒரு சமயம் சில தனவைசிய

பிரபுக்கள் மதுரையிலிருந்து மோட்டார் ஏறி வருகை யில் இந்தக் காட்டினிடையில் இரவு 7½-மணி ஆகிவிட்ட தென்றும், மோட்டாரை மறிப்பதற்காக கள்ளர் கோனுப் பட்டுரோட்டுப் பிரிகிற இடத்தில் பெரிய கற்களை ரோட் டில் புரட்டி வைத்திருக்க, மோட்டார் அதன்மேல் மோதி டயரும் தீபமும் சேதப்பட்டதென்றும், ஆனால் அவர்கள் மோட்டாரை அங்கு நிறுத்தாமல் வேகமாய் செலுத்தி வந்து சமீபத்திலுள்ள துவாதசி மடத்தையடைந்து தப்பினதாக வும் கேள்வி. இருட்டின பின் இவ்வழிச் செல்லுவோர் தக்க துணையுடன் தான்செல்லவேண்டும். இதைக் "கள்ளர் காடு" என்று ஜனங்கள் சொல்லுகிறார்கள்.

இப்படிப்பட்ட காட்டிலே இப்பொழுது ஓர் அபூர்வ காட்சி காணப்படுகிறது. வண்டிப்பாதைக்குத் தூரத்திலே காட்டுக்குள் ஓர் பாறை. அந்தப் பாறையின் பின்புரத்தில் மைதானமான ஓர் வெளியிடம். அங்கு ஏறக்குறைய இரு பது மனிதர் கூடியிருக்கின்றனர். ஒரு கல்லின்மேல் உட் கார்ந்து கொண்டிருக்கும் ஓர் திடகாத்திரமுள்ள ஆடவன் அக்கூட்டத்தின் தலைவன் போலக்காணப்படுகிறான். அவன் பக்கத்தில் ஒரு குறுந்தடி கிடக்கிறது. கையில் நீண்ட, உறுதியான காட்டுச் செடிமிலாறு ஒன்று வைத்திருக்கி றான். அவனைச் சுற்றிலும் நீண்ட தடிகளுடன் சிலர் நின்று கொண்டிருக்கின்றனர். வேறு சிலர் தரையில் உட்கார்ந்து கொண்டிருக்கின்றனர். எதிரிலே ஒரு வாலிபன் தன் கை கள் பின்பக்கம் கட்டப்பட்டவனாக நின்று கொண்டிருக்கி றான். அகன்ற மார்பும், நல்ல தேகக்கட்டுமுள்ளவனாய்த் தெரிகின்றது. அரையில் கௌபீனம் தவிர வேறு ஆடை யில்லை ; அவன் மார்பிலும், புஜங்களிலும், தொடைகளிலும்

பல தடிப்புகள் காணப்படுகின்றன. இருபக்கங்களிலும் கையில் பற்றிய காட்டுச்செடி மிலாறுடன் இரண்டு பேர் எமகிங்கரர் போல நின்று கொண்டிருக்கின்றனர். அந்த வாலிபனின் மேனியில் காணும் தடிப்புகள் இந்த மிலாற்றடியால் ஏற்பட்டிருக்க வேண்டுமென்று ஊகிக்கக் கிடக்கிறது. சற்று தூரத்தில் ஒரு மண் பாண்டத்திலே ஒருவன் சாணங்கலந்த நீரைக் கொதிக்க வைக்கிறான்.

" அடேய், களவாணி......உள்ளதைச் சொல்றையா? உடம்புத்தோலைப் பிச்சிடச் சொல்லட்டுமா?" என்று கல்லின்மேல் உட்கார்ந்திருப்பவன், கைகள் கட்டுண்டு நிற்கும் வாலிபனைப் பார்த்து அதட்டினான்.

வாலிபன் குனிந்த தலை நிமிரவில்லை.

" அடேய், வாயைத் திறக்கமாட்ட நீ. பதில் சொல்ல மாட்ட. நான் கேட்கிறேன் பேசாமல் நிற்கிறையா...... இப்போ பார் உன்னை என்ன பண்றேனென்று" என்று கூவி பற்களை நெற நெறனக் கடித்து எழுந்தான் கல்லின் மேலிருந்தவன். இதற்குள் அந்த வாலிபனின் பக்கத்தில் நின்று கொண்டிருந்தவர்கள் கையிலிருந்த மிலாற்றினால் அவன் தொடைகளில் "பளீர், 'பளீர்,' என்று பலங்கொண்டறைந்தனர். வாலிபன் அந்த அடிகளைப் பொறுக்க முடியாமல் வாய் விட்டலறினான்.

" இப்போ வாய்திறந்துதா? இப்போ உள்ளதைச் சொல்" என்று கல்மேலிருந்தவன் ஆர்ப்பரித்தான்.

வாலிபனோ ஒன்றும் பேசாமல் தன் கண்களை எடுத்து ஆகாயத்தை நோக்கினான். அகதிக்கு ஆகாயமே துணை யல்லவா. இந்தஆபத்தான வேளையில் தனக்கு துணை வரும்படி அவன் ஆகாயத்தை நோக்கினான் போலும். பால

சூரியனது ஒளி வீசப்பெற்ற நீல நிறமான ஆகாயம் அப்பொழுது ஆங்காங்கு தவழ்ந்துலாவும் மேக படலங்களினுல் சிங்காரிக்கப்பட்டு கண்களுக்கு ரமணீயமாக விருந்தது.

அந்தக் காட்சியைப் பார்த்த வண்ணமே அவன் தன்னையும், தன்னிலைமையையும் மறந்து விட்டான். எமகிங்கரர்களைப்போல இருபக்கத்திலும் நின்று அடிப்பவர்களையும், எதிரிலிருந்து வசைமொழி கூறி அதட்டுகிறவனையும், மற்றவர்களையும் அவன் இப்பொழுது எண்ணவில்லை. நீலநிற வானிலே நிலவுகின்றது அவன் நினைவு.

அப்பொழுது தலையில் அடிப்பட்டதாக உணர்ச்சியுண்டாகி, ஆகாய வனப்பைப் பார்த்துக்கொண்டிருந்த கண்களை கீழே திருப்பினுன். எதிரிலே கையில் பிடித்த கொம்புடன் அந்தக் கூட்டத்தாரின் தலைவன் நிற்பதைக் கண்டு, தன் நிலைமையை உணர்ந்தான்.

"நான் திருடவில்லை." என்று தாழ்ந்த குரலிலே. அவன் சொல்ல, "அடேய், அப்படி நீ சத்தியம் செய்வையா? திருடாதது உண்மையானுல் இதோ கொதிக்கிற சாணிப்பாவில் கைபோட்டு சத்தியம் பண்ணு" என்று அந்தக் கூட்டத் தலைவன் உக்கிரமாகக் கூறினுன்.

பின்பு அவன் சாணநீர் கொதிக்க வைக்கிறவனைப் பார்த்து "அடே, சாணிப்பால் கொதித்து விட்டதா?" என்று கேட்க, அவன் "நல்லாக் கொதிச்சுப்போச்சு" என்றுன். அதன் மேல் அந்தக் கூட்டத்தலைவனின் கட்டளையால் அந்த வாலிபனை சாணநீர் பானையண்டை கொண்டு போய் நிறுத்தினுர்கள். பானையில் சாணநீர் கொள கொளவென்று கொதித்தாடிக் கொண்டிருக்கிறது. தொட்ட கை வெந்து விடும்போலிருக்கிறது. இப்பொழுது அந்த வாலி

பனின் கைக்கட்டுகளை அவிழ்த்துவிட்டு, கொதிக்கிற சாண நீர்ப் பானையில் ஒரு காசைப்போட்டு,சத்தியஞ் செய்து அந் தக்காசை வெளியில் எடுக்கும்படி அவனை வற்புறுத்துகிறார் கள். அந்த ஏழை வாலிபன் மீண்டும் ஆகாயத்தையே நோக் குகிறான். ஆளுக்கொரு மிலாறு அறுத்துக்கொண்டு நாலைந்து பேர் அவனைக் சூழ்ந்து கொண்டனர். இனி அவன் தாமதித்தால் அவர்கள் அவனை அடித்து இம்சிப்பார்கள் என் பது நிச்சயம்.

அந்தச் சமயத்தில் கற்பாறையின் பக்கமிருந்து யாரோ வருகிற அரவங் கேட்டது. அந்தப் பக்கமாய் எல்லாரும் திரும்பிப் பார்த்தார்கள். காவி உடையணிந்து, கையில் பிடித்த வளைந்த தடியுடன் ஒரு சன்னியாசி சர சரவென்று அந்தக் கூட்டத்தை நோக்கி நடந்து வந்தார். அவருடைய பார்வை அம்புபோல கூரியதாக இருந்தது.

"மலையாள சுவாமி" "மலையாள சுவாமி" என்ற அந்தக் கூட்டத்தார் மெல்லென ஒருவரோ டொருவர் சொல்லிக் கொண்டனர். இதற்குள் சன்னியாசி அவர்களை யணுகி ஒரு வாலிபன் தேகமெல்லாம் அடிபட்ட தடிப்புகளுடன் ஆகாயத்தை நோக்கிய வண்ணமாக நிற்பதையும், பக்கத்தில் ஒரு பானையில் சாணநீர் கொதிப்பதையும் கண்டு, அவர்க ளில் தலைவன்போல் தோன்றினவனை நோக்கி "இது என்ன !" என்று வினவினார்.

சன்னியாசியின் திருக்கோலமும், அதிகாரத் தொனி யும், அசுவதாட்டியான வசனமும் அந்தக் கூட்டத்தாரைக் கலங்கச் செய்தன. அவர்கள் மறுமொழி சொல்லத் திகை த்தார்கள்.

"இந்த வாலிபனை ஏன் அடித்தீர்கள், அங்கு கொதித்

துக் கொண்டிருப்பதென்ன?'' என்று மீண்டும் கேட்டார் சன்னியாசி. அப்பொழுது ஊடுருவநோக்கும் தன்மையுள்ள அவருடைய கண்கள் சிவந்தன. புன்னகைபொலியும் அவரது முகவதனத்தில் நீதியின் கோபம் நிலவிற்று.

"இவன் ஒரு களவு செய்ததாகத் தெரிகிறது. இப்பொழுது இல்லையென்று சாதிக்கிறான். அதுக்காக இவனைச் சத்தியம் செய்யச் சொல்லுகிறோம்,'' என்று அந்தக் கூட்டத் தலைவன் கூறினான்.

சன்னியாசி.—"நீயார், உன்னோடிருப்பவர்கள் யார்?''

கூட்டத்தலைவன்:—"நாங்கள் செவல்பட்டி ஊர்க் காவல்காரர்.''

சன்னியாசி.—"என்ன களவு.''

கூட்டத் தலைவன்.—"முத்துக் கருப்பன் செட்டியார் வீட்டிலிருந்து கொஞ்சநாளைக்கு முன் ஒருவைரப்பதக்கம் களவு போயிற்று. அதை இவன் திருடினதாக அந்த ஆளிடத்தில் (அங்கு நின்றவர்களில் ஒருவனைச் சுட்டிக்காண்பித்து) ஒப்புக்கொண்டிருக்கிறான். இப்போது இல்லையென்று மறுக்கிறான். இவன் மேல் பலத்த சந்தேகமிருக்கிறது. இவன் தான் செய்யவில்லை யென்று சொல்வதால் கொதிக்கிற சாணிப்பாலில் கைபோட்டுச் சத்தியம் செய்யச் சொல்லுகிறோம்''

சன்னியாசி குற்றஞ்சாட்டப்பட்ட வாலிபனைப்பார்த்து "நீ இதற்கு என்ன சொல்லுகிறாய்? "என்று கேட்டார்.

வாலிபன்.—"நான் ஒன்றும் செய்யவுமில்லை, சொல்லவுமில்லை. இந்தக்காவல்காரர்கள் விரோதத்தினால் என்னைப் பிடித்துவந்து இப்படி அடித்து இம்சிக்கிறார்கள்'' என்று கூறினான்.

சன்னியாசி.—"சரி, இவன் மேல் குற்றஞ் சாட்டு கிறது யார்?"

ஒருவரும் பேசவில்லை. சன்னியாசி மீண்டும் உறுத்திக் கேட்டார்.

"இவன்தான்" என்று ஏற்கனவே குறிப்பிட்ட மனிதனை அந்தக்கூட்டத்தலைவன் சுட்டிக் காட்டினான். சன்னியாசி அவனை விளித்து "நீ இவன் திருடினதாகச் சொல்லுகிறாயா?" என்று கேட்க, அவன் திகைப்புடன், "ஆம், அவன்தான் திருடினதாக என்னிடம் சொன்னான்," என்றான்.

சன்னியாசி.—"நீ சொல்வது உண்மையா?

"ஆம்"

சன்னியாசி.—"அப்படி நீ இந்தச் சாணிநீரில் கை போட்டு சத்தியம் செய்யக்கூடுமா?"

அந்த மனிதன் ஒன்றும் பேசாமல் மேலும் கீழும்பார்த்துக் கொண்டும், காற்பெருவிரலால் தரையைக் கிளரிக் கொண்டும் நின்றான்.

சன்னியாசி.—"அப்படி சத்தியம்பண்ண உனக்குப் பயமா யிருக்கிறதோ?" என்று எரிச்சலான குரலிலே கேட்டார்.

"அப்படி வழக்கமில்லை" என்று கூட்டத்தலைவன் சொன்னான்."

சன்னியாசி.—"எப்படி வழக்கமில்லை?"

கூட்டத்தலைவன்.—"வாதி சத்தியம் செய்வது, வழக்க மில்லை."

சன்னியாசி,—"சரி, அப்படியானால் நீயே திருடினதாக இந்த வாலிபன் சொல்லுவதாக வைத்துக்கொள்ளு

வோம். நீ கொதிக்கிற சாணிநீரில் அல்லது நெய்யில் கை போட்டுச் சத்தியம் செய்வாயா? நீ திருடனல்லவென்றால் இதோ கொதிக்கிற சாணிநீரில் கைபோடு. உன் யோக்கியதையைப் பார்ப்போம்."

கூட்டத்தலைவன் இதைத் தமாஷாக எண்ணிச் சிரிப்பவனைப்போல பாவனை செய்தான். ஆனால் அவனுக்கு சிரிப்புவரவில்லை; பல்லிளிப்புத்தான் காணப்பட்டது. அவன் கண்கள் திகைப்பையும், அச்சத்தையும், வெளிப்படுத்தின.

சன்னியாசி.—"ஏன் அப்பா, உன் கை வெந்துபோகுமென்று பயப்படுகிறாயா? அல்லது யோக்கியதை வெளிப்பட்டு விடுமென்று அஞ்சுகிறாயா?"

கூட்டத்தலைவன் பதில் சொல்லாமல் மௌனஞ் சாதித்தான்.

சன்னியாசி.—"குற்றமில்லாதவன் கொதிக்கிற நெய் அல்லது சாணிநீரில் கைபோட்டு சத்தியம் செய்தால் கைக்கு எவ்விதத்தீங்கும் நேரிடாது; குற்றமுள்ளவன் கை மாத்திரம் வெந்துபோகும். அப்படியல்லவா?"

கூட்டத்தலைவன்.—"அப்படித்தான் எல்லாரும் சொல்லுகிறார்கள்."

சன்னியாசி.—"நீ நம்புகிறாயா?"

கூட்டத்தலைவன் பதில் பேசாமல் தலைகுனிந்து நின்றான்.

சன்னியாசி.—"சரி, உனக்கும் சந்தேகந்தான்போலிருக்கிறது. அப்படியிருக்க இந்த வாலிபனை கொதிக்கிற சாணிநீரிலே கைபோடும்படி நீயும் உன் கூட்டத்தாரும் இம்சிக்கலாமா? அவன் கை வெந்துபோகுமென்று உனக்குத்திட்டமாகத் தெரிந்து, அவன் கைக்கு சேதமுண்டாக்க

வேண்டுமென்ற நோக்கத்துடன்தானே இப்படிச் செய்கி றீர்கள். இது ஊர்க்காவல் வேலைபார்க்கும் உங்களுக்கு நியாயந்தானா? திருட்டு நடந்தால் யுக்தியால் உளவு விசா ரித்து திருடனைக் கண்டுபிடிக்காமல், செட்டியாரிடம் இல் லாத பொய்களை யெல்லாம் புளுகி செலவுக்குப் பணம் வாங் கித்தின்று கொண்டிருப்பது மன்றி, நிரபராதியான இந்த வாலிபனை, ஏதோ முன்னுள்ள விரோதத்தை மனதிலெண் ணிப் பிடித்துவந்து, இவ்வாறு அடித்து இம்சிப்பது பெரிய அக்கிரமம். "எளியாரை வலியார் அடித்தால் வலியாரை வல்முனி அடிக்கும்" என்பதை மறந்துவிட வேண்டாம். இத்தகைய மிலேச்சகுணம் நமது தேசத்தார்களிடம் காண ப்படுவது பெரிதும் அவமானமான காரியமாகும். பெரிய நாயைக்கண்ட சின்னநாய் எப்படித் தன்வாலைப் பின்னங் கால்களினிடையில் மடக்கிக்கொண்டு உடல் நடுங்கப் பல்லை யிளித்துக்கொண்டு ஓடுகிறதோ அதேமாதிரி வலியாரைக் கண்டால் சுயமரியாதையும், ஆண்மையும் குன்றுமாறு அடிபணிந்து அடங்கி நிற்றலும், ஏழை இளைத்தவர்களைக் கண்டால் தங்கள் வாலை அவிழ்த்துவிட்டு, அவ் வெளிய வரை இம்சிப்பதும் குரூரமாய் நடத்துவதும், காசு பணங் களை மிரட்டிப் பறிப்பதும், சிலருக்கு வழக்கமாயிருக்கிறது. ஒருதுளி ஆண்மையேனு மிருந்தால் ஒருவன் இத்தகைய ஈனச்செயல்களுக்கு உட்படான். இவ்வித பேடித்தனம் பெருகினதினால்தான் நம்தேசம் க்ஷீணமடைந்தது. நீங்கள் பத்துப்பேர்க்கதிகம் கூடி இவனை அடித்து விட்டீர்கள். ஒரு வேளை இவன் உங்களுக்குப் பதில் செய்ய முடியாது. அரச தண்டனைக்கும் நீங்கள் தப்பிக்கொள்ளலாம் ஆனால் தெய்வதண்டனைக்கு தப்பமுடியுமோ! தெய்வம் நின்று

கேட்கும். தெய்வ தண்டனை ஒருபோதும் தப்பாது. உங்கள் அக்கிரமத்துக்குத் தக்க தண்டனை சீக்கிரமே கிடைக்கும்,'' என்று அந்தச் சந்தர்ப்பத்துக்கு ஏற்ற உக்கிரமான வார்த்தைகளை கேட்போர் மனங்கலங்கத்தக்க கடுமையான தொனியிலே கூறிக்கொண்டு அந்த வாலிபனை அழைத்துக்கொண்டு சென்றார். ஒருவரும் தடைசெய்யவில்லை. அவர்களெல்லாரும் பிரமித்தாற்போல நின்ற நிலையில் நின்றுகொண்டிருந்தார்கள். சில நிமிஷநேரம் அப்படி நின்றபின் அவர்கள் கலைந்து சென்றனர்.

நாம் அவர்களை விட்டு, சன்னியாசியையும் வாலிபனையும் பின் செல்லுவோம். வண்டிப்பாதை போய்ச் சேரும் வரையில சன்னியாசி பேசவில்லை. வாலிபனும் அவ்வாறே மௌனமாய்ச் சென்றான். இந்தச் சன்னியாசி நமது தலைச்சேரி தாமோதர சுவாமிதானென்பதை வாசகர்கள் ஏற்கனவே அறிந்திருப்பார்கள். பாதையில் சேர்ந்தபின் தாமோதர சுவாமி வாலிபனைப்பார்த்து "உன் பெயரென்ன?'' என்று கேட்க அவன் "வெங்கடாசலம்'' என்றான்.

"நீ இவர்களிடம் எப்படி அகப்பட்டாய் விபரமாய்ச் சொல்'' என்று கேட்டார் தாமோதரசுவாமி.

வெங்கடாசலம்.—"சுவாமிகளே, என்னை அடித்துத் துன்பஞ்செய்த ஆட்களெல்லாரும் எங்களூர் காவல்காரர் தான். காவல்காரர் என்று பேர் வைத்துக் கொண்டு ஊரைக் கொள்ளையடிக்கிறவர்கள். பெருந்துஷ்டர். ஏழை எளியதுகளை அடித்தும், மிரட்டியும் அட்டூழியஞ் செய்வது தான் இவர்கள் மணியம். நாட்டுக் கோட்டை சீமான்களிடம் நயத்தாலும் பயத்தாலும் பணம் பிடுங்கித் தின்பார்கள். தங்கள் ஆளையே களவுசெய்ய ஏவிவிட்டு, பிற்பாடு தாங்க

ளே திருடனைப் பிடித்துக்கொடுப்பதாகவும் வெளிவந்து அதற்கும் செலவுக்கு வாங்கிக் கொண்டு, களவிலும் பங்கு பெற்றுக் கொள்ளுவார்கள். "துஷ்டனைக்கண்டால் தூர விலகு" என்று சீமான்களான செட்டிமார் சும்மா இருப்ப தால் இவர்கள் கொட்டத்தை அடக்க ஆளில்லை. அப்படி யிருக்க, முத்துக் கருப்பன் செட்டியார் வீட்டில் வைரப் பதக்கம் களவு போயிற்று. அந்தத் திருட்டைப் பிடிப்பதா கச் சொல்லிக்கொண்டு தினம் எட்டுரூபா பத்துரூபா செலவு க்கு வாங்கித்தின்றுவிட்டு ஊரையுங், காட்டையுந்தான் சுற்றிவருகிறார்கள். நான் திருடினதைத் தன்னிடம் சொ ன்னதாகச் சொன்னானே அவன் பெயர் முத்தய்யன். இவன் போனவருஷத்திலே இந்த இடத்தில் வந்துகொண் டிருந்த ஒரு வலையச்சி—வாலிபப்பெண்—அவளைப் பலவந்தம் செய்ய எத்தனித்தான். கொஞ்சதூரத்தில் வந்துகொண் டிருந்த நான் அந்தப்பெண் கூச்சல் போடுவதைக்கேட்டு ஓடிவந்து அவளைத் தப்புவித்தேன். நான் சமீபத்தில் வரு முன் முத்தய்யன் ஓடிவிட்டானென்றாலும் சிலர் அதைப்பற் றிப் பஞ்சாயத்துக்கூடி பேசினபொழுது நான்சாட்சிசொன் னேன். அதில் அவனுக்கு நல்ல அடி கிடைத்தது மன்றி அபராதமும் விதிக்கப்பட்டது. அதிலிருந்து அவனுக்கு என்மேல் விரோதம். அப்படியிருக்க, நேற்று குப்புசுவாமி என்பவன் என்னைக்கண்டு "நாளைக்குத் திருமயத்துச் சாக்கு வாங்கப் போகிறேன் வருகிறையா?" என்றான். நான் சம்ம தித்து, இருவருமாய்ப் புறப்பட்டு வருகிறபோது இந்தப் பாறைக்குச் சமீபத்தில் யாரோ பாடுகிறசத்தம் கேட்டது. குப்புசுவாமி "யார் இங்கே பாடுகிறது. வா பார்க்கலாம்" என்றுபோனான் நானும் பின்னாலேபோனேன். அந்தப்

பாறைக்குப் பக்கத்தில் போனதும் அவர்களெல்லாம் மறு பக்கமாய் வந்து என்னைப் பிடித்துக்கட்டி, இழுத்துக்கொண்டு போனார்கள். நான் பிரமித்துப்போனேன். பிறகு தன்னினைவு வந்தபொழுது குப்புசுவாமியைக் காணோம். அவன் என்னைப்பிடித்துக் கொடுக்க வந்தவனென்பது அதன் பின்புதான் தெரிந்தது. பிறகு என்னை அடித்து திருட்டை ஒப்புக்கொள்ளச் சொன்னார்கள். நான் திருடவில்லை என்று சொல்ல அப்படிச் சத்தியம் செய்து கொடுவென்று கொதிக்கிற சாணி நீர்ப்பானையண்டை என்னைத் தள்ளிக் கொண்டு போனார்கள். நான் கடவுள்தான் என்னைக் காப்பாற்ற வேண்டுமென்று எண்ணிக்கொண் டிருக்கையில், சுவாமி வந்தீர்கள். சுவாமிகள் வராமலிருந்தால் அந்தத் துஷ்டர் இன்னேரம் எனக்கு என்னென்ன கொடுமைகள் செய்திருப்பார்களோ சொல்லமுடியாது. சுவாமிகள் தான் இன்று என்னைக்காப்பாற்றினது'' என்றுசொல்லி கைகூப்பி நமஸ்கரித்தான்.

தாமோதர சுவாமி.—“ இப்படிப் பட்ட துஷ்டர்கள் அடக்கப்படவேண்டும். துஷ்டனைக் கண்டால் தூர விலகும் உபாயம் ஒவ்வொரு சமயங்களிலே பொருந்துமே தவிர, கிரமமாக ஜனங்களை உபத்திரவிக்கிற துஷ்டர் விஷயத்தில் அப்படி யிருந்தால் ஊரையும் நாட்டையும் விட்டு ஓடி விடவேண்டியதுதான். நீ இந்தத் துஷ்டரை எதிர்த்து பரோபகாரமாக அவ்வளவாவது செய்ததைப் பற்றி நான் சந்தோஷப்படுகிறேன். நமது நாட்டிலே பிறந்த எந்த ஆளையும், இம்சிக்கவாவது, அவமானிக்கவாவது, கூடாது.

நமது நாட்டிலே பிறந்தவர்களில், சிலர் ஒருவரையொருவர் ஒடுக்கியும், உபத்திரவித்தும், மோசம் செய்தும்

தம் வயிற்றை வளர்க்கத் திரிகிறார்கள். இவர்களெல்லாரும் ஈனப்பிறவிகள். இப்படிப்பட்ட ஜந்துக்கள் இருந்தவிடம் தெரியாமல் ஒழிக்கப்படவேண்டும். பொது ஜனங்களுக்கு இம்சைசெய்கிற இத்தகைய துஷ்டரை நிக்ரகம் செய்வது ஒவ்வொரு ஆண்மகனையும் பொருத்த கடமை. துஷ்டரை யும், போக்கிரிகளையும் நியாயவழியில் நிற்கும்படி கட்டாயஞ் செய்ய ஒவ்வொரு ஆண்மகனும் தன்னாலியன்ற அளவு முயற்சி செய்யவேண்டும். அங்ஙனம் செய்யாமல், தனக்கு சிறிது சிரமம் நேரிடுமே என்று ஒருவன் சுயநலத்தைக் கருதிச் சும்மாவிருத்தல் அந்தத்துஷ்டருக்கு உதவிசெய் வது போலாகும்,'' என்று கூறினார். இப்படி பேசிக்கொண் டே செவல்பட்டிக்குப் போனார்கள்.

அந்த காவல்காரர்கள் யோக்கியதை யில்லாத வீண ரும், துஷ்டருமா யிருந்தபோதிலும் தாமோதர சுவாமி யைக்கண்டு பிரமித்து நின்றதற்கும், அவர் வெங்கடாசலத் தை அழைத்துக்கொண்டு போகும்பொழுது தடைசெய் யாததற்கும் காரண மென்னவென்று இங்கே கூறுவோம். சாதாரணமாக நமது நாட்டிலே சன்னியாசிகளுக்கும் சாது க்களுக்கும் அதிக கண்ணியமுண்டு. எப்படிப்பட்ட துஷ்ட ரும் அன்னாரிடம் பயபக்தி காட்டுவர். எங்கே சபித்து விடுவாரோ எனது பயத்தினாலேற்படும் பக்திதான்; அன்பு, விசுவாசம், இவைகளால் எற்படும் பக்திபல்ல. இவ்விதபக் தியை நமது தாமோதர சுவாமியின் செயல்களும் பேச்சு களும் அதிகப் படுத்திவிட்டன. அவருக்கு அதிகப் பிர பலத்தை யுண்டாக்கிய விஷயம் ஒரு கிழவியின் பல்வலி யைச் சுகப்படுத்தினதேயாகும். ஒருநாள் தாமோதரசுவாமி தெருவழியே போகையில் ஒரு கிழவி தன் வீட்டின்முன்

உட்கார்ந்து "ஐயோ, அப்பா" என்று அலறிக்கொண்டிருந்தாள். தாமோதரசுவாமி சமீபத்தில் வந்ததும் அவள் "சாமிகளே கும்பிடுறேன். இந்தப் பல்வலிக்கு ஏதாவது மருந்து சொல்லுங்கள். என் உயிர் போகுதே" என்று கெஞ்சினுள். அவர் உடனே நின்று தமது கூரிய கண்களால் அவளை உற்று பார்த்துக்கொண்டு, கையினுல் வலிக்கிற பாகத்தில் தடவி பல்வலி சுகமாகிவிட்டதாகக் கூறிப் போய்விட்டார். கிழவி சிறிதுநேரம் மெய்மறந்திருந்து பிறகு தன்னுணர்வு வந்ததும் பல்வலி நின்றுவிட்டதாக உணர்ந்தாளாம். இந்த விசேஷத்தைக் கிழவி ரகசியமாக வைத்திருப்பாளா? உடனே ஊர்முழுவதும் பரப்பிவிட்டாள். கேட்ட எல்லாருக்கும் தாமோதர சுவாமியிடம் முன்னில்லாத பயபக்தியும் கண்ணியமும் ஏற்பட்டன. அதன்பின் அவர்போகிற இடங்களிலெல்லாம், "அதோ வருகிறுர் மலையாள சுவாமி" என்று ஜனங்கள் சொல்லிக்கொள்ளுவார்கள். மலையாளத்திலிருந்து வந்தவரென்று தெரிந்ததும் அவருக்கு "மலையாள சுவாமி" என்ற பெயரைக் கொடுத்து விட்டார்கள். ஆகையால்தான் வெங்கடாசலத்தைத் துன்புறுத்திய காவல்காரர் அவரைக்கண்டு பிரமித்து நின்றதுமன்றி அவர் தங்களை ஒன்றும் செய்யாமல் விட்டதைப்பற்றி "தலைதப்பினது தம்பிரான் புண்ணியம்" என்று எண்ணிக்கொண்டுமிருந்தார்கள்.



## ஒன்பதாவது அத்தியாயம்



### அரிமளங்காட்டில் தாமோதர சுவாமிகள்



ஒரு நாட்காலே இராமபுரத்தி லிருந்து அரிமளம் போகிற பாதையிலே ஓர் சன்னியாசி போய்க் கொண்டிருக்கிறார். இவர் யாரென்று நெருங்கிப் பார்த்ததில் தலைச்சேரி தாமோதர சுவாமிகள் என்று தெரிகிறது. கையில் பிடித்த வளைந்த தடியுடன் வெகுவேகமாய் நடந்து போகிறார். இந்த சுவாமி மந்திர எந்திரங்கள் தெரிந்தவரென்றும், மகத்துவ முள்ளவரென்றும் ஜனங்கள் சொல்லுகிறார்களே நாமும் இவரைப் பின் தொடர்ந்து இவரது மகிமையை சற்றேபார்ப்போம். அவர் வேகமாய் நடந்து அரிமளம் காட்டை அடைந்தார். இது ஏறக்குறைய மூன்றுமைல் நீளமானகாடு. மரங்களும் செடி கொடிகளும் அடர்ந்த அத்வானக் கானகம். கள்வர் விரும்பும் காட்டுப்பிரதேசம். கொள்ளைகளும், வழிப்பறிகளும் நடக்கும் கொடிய ஸ்தலம். இதைப்பற்றி முதல் அத்தியாயத்திலே விவரித்திருக்கிறோம். இந்தக் காட்டினூடே செல்லுகிறது வண்டிப்பாதை. அதன்நடுவில் கோட்டைக்கரை என்ற ஒரு இடம் உண்டு. அந்த இடத்தில் ஓர் கோட்டையிருந்த அடையாளங்கள் காணப்படுகின்றன. அங்கே ஓர் ஆலயம் இருக்கிறது. அதன் பக்கத்தில் ஓர் தர்மசீலரால் தண்ணீர் பந்தல் வைக்கப்பட்டிருக்கிறது. இரண்டு செந்தலை வீரர்கள் காவல் செய்கின்றனர். ஆனால் கள்வர் அவர்கள் காவலைச் சட்டை செய்வதில்லை. தாமோதரசுவாமி போய்க் கொண்டே யிருக்கிறார். காட்டுப் பறவைகளின் சத்தமும்,

மரங்களும் செடிகளும் காற்றிலலைகிற ஓசையும் ரமணீய மாய் கேட்கின்றன. கொஞ்சத்தூரம் சென்றதும் ஒரு கொடிவழி ரஸ்தாவிலிருந்து காட்டுக்குள் செல்வதைக்கண்ட தாமோதர சுவாமி அந்தக் கொடி வழியில் செல்லலானார். அப்படிச் சிலதூரம்போய் அங்கு ஒரு மரத்தடியில் கிடந்த ஒரு கல்லின் மேல் உட்கார்ந்துகொண்டார். அவ்விடம் சற்று மேடாயிருந்ததால் அதிலிருந்து மரங்களினூடாக ரஸ் தாவைப்பார்க்கக் கூடியதாயிருந்தது. செம்மண் தரையான தால், மஞ்சள் ஜமுக்காளம் விரித்ததுபோல தோன்றினது ரஸ்தா.

இப்படியிருக்கையில் அரிமளத்திலிருந்து வண்டி வரு கிற சத்தம் கேட்டது. இரண்டு காளைகள் பூட்டிய அரை வண்டி ஒன்று வருகிறது. இந்த வண்டியில் வருகிறவர்கள் யாரென்று பார்ப்போம். வண்டிக்குள் நாட்டுக்கோட்டை நகர வைசியஸ்திரீகள் இரண்டுபேர் சுமக்கும் பாரம் பொன் நகைகளையும், வெள்ளிச்சிலம்பு கொலுசுகளையும் காதுகளி லும், கழுத்திலும், கை கால்களிலும் தரித்துக்கொண்டிருக் கிறார்கள். செட்டியார் வெள்ளை வேஷ்டி தரித்து, ஜப்பான் பனியன் ஒன்று மேலே போட்டுக்கொண்டு வண்டியின் பக்கத்தில் நடந்து வருகிறார். சரிகைக் கரையுள்ள ஓர் அங்கவஸ்திரம் வலது கைப்பக்க மிருந்து பின்புறமாய் தோள்மேல் வந்து உல்லாசமாக அவரது மார்புப்புரத்திலே விளங்குகின்றது. அகன்ற மார்பும் விரிந்த தோள்களும், திரண்ட புஜங்களும் உள்ளவராய், ஒரு குள்ளப் பீமசேனன் போல தோன்றுகிறார் செட்டியார். உருவுக்குத் தக்க பல மும் சௌரியமும் இருந்து, அவர் வீராவேசத்துடன் தடி கொண்டு சாடுவாராயின் அந்த அரிமளங் காட்டில் கொள்

ளைக்கு வரும் கள்வர்கள் ஐம்பது பேராயினும் சரி, அரை நொடியில் தும்சம் செய்து விடுவாரென்று சொல்லலாம். ஆனால் உருவைக் கண்டு பயப்படலாமா! மனோதிடமில்லா விடின் காரியத்தில் எப்படியோ?

இப்படி வண்டி போய்க்கொண்டிருக்கையில் எதிரே தூரத்தில் இரண்டுபேர் வருவதாகக் காணப்பட்டது. அவர்களில் ஒருவன் கையில் தடி வைத்திருந்தான். ஒருவன் கையில் ஒரு வெட்டரிவாள் இருந்தது. அவர்களைக் கண்டதும் வண்டியில் வந்த ஸ்திரீகளுக்குப் பெருத்த கலவரம் உண்டாயிற்று.

"அடி, ஆத்தே; கள்ளன் வந்திட்டானே. என்ன செய்வமடி" என்று ஒரு ஸ்திரீ சொல்லி தன் சேலையால் காதிலும் கழுத்திலுமிருந்த நகைகளை மூடினாள்.

"ஆமடி. இரண்டுபேர் வாரான்களே. நம்ம குடி கெட்டுதே" என்று மற்றவளும் முன்னவளைப்போல தன் நகைகளைச் சேலையால் மறைக்க ஆரம்பித்தாள்.

வருகிற ஆட்களைப் பார்த்தால் கொள்ளைக்காரரைப் போல தோன்றவில்லை. வழிப்போக்கர் போலத் தோன்றுகிறது. அப்படியே கொள்ளைக்காரராய் இருந்தாலுமென்ன பீமசேனனைப்போல ஒரு செட்டியார் இருக்கிறாரே. அவர் இவர்களை லேசிலே விடுவாரா? என்னவோ பார்க்கலாம். இதற்குள் அவ்விருவரும் வண்டிக்குச் சமீபித்துவிட்டார்கள். வண்டிக்குள் இருக்கிற ஸ்திரீகள் சேலையால் தங்களை மூடிக்கொள்வதும் முகத்தோடு முகம் பொருந்த ஏதேதோ பேசிக்கொள்வதும் அவர்களுக்குப் புலப்பட்டது.

"அடேய் வண்டியை நிறுத்தடா" என்று வந்தவர்களில் ஒருவன் சத்தமிட்டான். வண்டிக்காரன் பயந்து

வண்டியை நிறுத்தினான். இன்னொருவன் அவன் தலையில் சடேரென்று ஒரு அறை கொடுத்தான்.

"அடேய் யார் உள்ளே, இறங்கு கீழே" என்று சொல்லிக்கொண்டு ஒருவன் வண்டியின் பின்பக்கமாய்ப்போய் வெட்டரிவாளை ஓங்கிக்கொண்டு நின்றான்.

செட்டியார் உடனே முன்வந்து பின்வருமாறு விண்ணப்பஞ் செய்துகொண்டார்.—

"அப்பா! தயவுசெய்து எங்களிடம் உள்ளதெல்லாம் வாங்கிக்கொள். அடிக்காதே. தொந்திரவு செய்யாதே. எல்லாவற்றையும் கொடுத்திடுறோம்," என்று பஞ்சாயத்தாரிடம் மன்னிப்புக்காகக் கெஞ்சும் குற்றவாளியைப்போல அந்தச் செட்டியார் கெஞ்சிக் கேட்டுக்கொண்டார். இதற்குள் ஸ்திரிகள் இருவரும் வெகு பரபரப்புடன் தாங்கள் அணிந்திருந்த நகைகளையெல்லாம் கழற்றி வைத்தார்கள். ஒருவன் செட்டியாருடைய அங்கவஸ்திரத்தைப் பிடுங்கினான். ஒருவன் அவருடைய செருப்புகளைஎடுத்துக்கொண்டு அவர் போட்டிருந்த பனியனையும் கேட்க, செட்டியார்,

"எல்லாம் கொடுத்தாச்சுதே. நான் போட்டிருக்கிற பனியனுமா வேணும்?" என்றார்.

"கொடுக்கிறையா குத்து விடட்டுமா?" என்றான் திருடன்.

செட்டியார் அவசரமாக "இந்தா, கொடுத்திடுறேன். என்னை அடியாதே" என்று சொல்லிக்கொண்டு பனியனைக் கழற்ற ஆரம்பித்தார்.

இந்தச் சமயத்தில் தடதடவென்று யாரோ ஓடிவருகிற அரவங்கேட்டது. ஓடிவந்த ஆள் நமது தாமோதர சுவாமிதான், வேறெவருமல்ல. அவர் வெட்டரிவாள் வைத்

திருந்தவன் மேல்பாய்ந்து கைமுஷ்டியால் அவன் முகத்தில் ஒருகுத்து விட்டார். அவன் அப்படியே தொப்பென்று நிலத்தில் விழுந்தான்.

மற்றவன் அவர்மேல் பாய்ந்தான். அவர் சட்டென்று உட்கார்ந்து எழுந்தார். அடி விழுந்த சப்தம் கேட்டது. அவர்மேல் பாய்ந்தவன் தரையில் மல்லாந்து வீழ்ந்தான். தலையில் பலத்த காயம்பட்டது. மற்றவன் எழுந்து தாமோதர சுவாமியைக் கட்டிப் பிடித்துக்கொண்டான். அவர் அவன் பிடியிலிருந்து தம்மை விடுவித்துக் கொள்ளும்படி அவனுடைய விலாப்பக்கத்தில் கையைவைத்து ஏதோ ஒரு நரம்பை அழுத்தினார். உடனே அவன் ஓவென்றலறிக் கொண்டு தன் பிடியை விட்டான். சுவாமியார் தமது வலது காலை அவன் கால்களுக்கிடையில் கொடுத்து அவன் காலைப் பற்றியிழுத்து இடதுகையால் அவன் மார்பில் பலங்கொண்டு நெட்டினார். அவனும் நிலத்தில் மோதுண்டு வீழ்ந்தான். இதெல்லாம் இரண்டொரு நிமிஷங்களுக்குள் வெகுதீவிரமாய் நடந்தது. விழுந்து கிடந்தவர்களை அப்படியப்படியே வைத்து கைகளையும் கால்களையும் கட்டிவிட்டார் தாமோதர சுவாமி. பின்பு அவர் செட்டியாரையும் ஸ்திரிகளையும் பார்த்து கழற்றி வைத்திருக்கிற நகைகளையெல்லாம் எடுத்து அணிந்துகொள்ளச் சொன்னார். அவர்கள் பிரமித்து நின்றுகொண்டிருந்தார்கள். சுவாமியார் போய் அடிபட்டு வீழ்ந்திருப்பவர்களுடைய தடியையும் வெட்டரிவாளையும் எடுத்து வந்தார்.

"நீங்கள் இனிப் பயப்படாதேயுங்கள் இந்த இரண்டு பேரும் எழுந்திருக்க கொஞ்சநேரம் செல்லும். அதற்குள் நீங்கள் வண்டியைத் திருப்பிக்கொண்டு அரிமளம்போய்

போலீசாரைக் கூட்டிவந்தால் இந்தத்திருடரை அவர்களிடம் ஒப்புவித்துவிட்டு போகலாம். அதுவரை நான் இங்கே காவலிருக்கிறேன்'' என்று தாமோதர சுவாமி சொன்னார்.

"சுவாமி இந்த ஆபத்தான வேளையில் நீங்கள் செய்த பேருதவிக்கு நாங்கள் என்ன பதில் செய்யப்போகிறோம். கடவுள்தான் உங்களை இந்த வேளையில் எங்களுக்குச் சகாயமாய் அனுப்பி யிருக்கிறார்'' என்று கூறி செட்டியார் அவரை நமஸ்கரித்தார். பெண்களும் நமஸ்கரித்தார்கள். திரும்பி வருகையில் கோட்டக்கரை கோவிலுக்குத் தேங்காய் உடைப்பதாகவும் நேர்ந்துகொண்டார்கள்.

தாமோதர சுவாமி தமது வஸ்திரத்திலிருந்து பென்சிலும் காகிதமும் எடுத்து ஏதோ எழுதி ஒரு உறையிலிட்டு விலாசமெழுதி செட்டியார் கையில் கொடுத்து அதை அரிமளத்திலிருக்கும் போலிஸ்தலைவனிடம் கொடுக்கக் கேட்டுக்கொண்டார். உடனே எல்லாரும் வண்டியிலேறி அரிமளத்துக்குச் சென்றனர்.

வண்டி அரிமளத்துக்குத் திரும்பிப்போய் சில நேரமானதும் அடிபட்டுக் கீழே விழுந்திருந்தவர்கள் ஒவ்வொருவனாக விழித்தார்கள். விழித்துப் பார்க்கையில் தங்கள் கைகளும் கால்களும் கட்டுண்டிருப்பதையும், ஓர் சன்னியாசி நின்றுகொண்டிருப்பதையும் கண்டு பயந்தார்கள்.

தாமோதர சுவாமி அவர்களைப்பார்த்து "நீங்கள் திருடரா'' என்று கேட்க, அவர்களில் ஒருவன் "நாங்கள் குடிமக்கள், சுவாமி'' என்றான்.

தாமோதர சுவாமி.—"அடே நீங்கள் குடிமக்களானால் ஏன் கொள்ளைக்குப் புறப்பட்டீர்கள்? என்னிடம் உள்ள

தைச் சொல்லிவிடுங்கள். பொய் பேசினுல் அதிகக் கெடுதி நேரிடும்.''

திருடன்.—"நாங்க அரிமளத்துக்குப் போக வந்தோம். எங்க கிரவசாரம் இப்படி வந்துவிட்டது.''

தாமோதர சுவாமி.— "அரிமளத்துக்கு போகிறபொழுது கிரகசாரம் இப்படிக் கொள்ளையடிக்கச் சொல்லிக் கொண்டா வந்தது?''

திருடன்.—"சாமி, உங்களைப்பார்த்தால் கடவுள்மாதிரி இருக்கு. ஆனுல் என் கண்ணு மண்டையை பேத்துப் புட்டியளே சாமி. உங்களைப்போல நாலு ஆள் இந்த பாதையிலே நடமாடினுல் இந்தப்பக்கம் களவே நடக்காது சாமி.

தாமோதர சுவாமி.—"அதிருக்கட்டும். நீங்கள் இந்த மாதிரி கொள்ளைத் தொழிலுக்கு ஆரம்பித்து எவ்வளவு காலமாகிறது?''

திருடர்கள் இருவரும் ஏககாலத்தில் பேச ஆரம்பிக்க, முதலில் பேசினவன் மற்றவனை அமர்த்திவிட்டுப் பின்வருமாறு கூறினுன்.—

"சாமிகளே இண்ணைக்கி காலம்பர வரையிலே நாங்கள் இந்தமாதிரி கொள்ளை செய்ததில்லை. அரிமளத்திலே எங்க ஆளுக்க வீடிருக்கு. அங்கே போறதற்காக வந்தோம். இந்தக் காட்டிலே கள்ளர் பயமென்று ஆளுக்கொரு கம்பும், ஒரு வெட்டரிவாளும் கொண்டாந்தம். அப்ப இந்த வண்டி வந்தது. வண்டி தூரத்திலே வரும்போது நாங்கள் கொள்ளை யடிக்கணுமெண்ணு நினைக்கல்லை. வண்டி எங்க கிட்ட நெருங்கினதும் எங்களைக்கண்டு வண்டிக்குள்ளிருந்த ஆச்சிமாரும், செட்டியாரும் ஒதுங்கினதையும் தலையை மறைத்ததையும் கண்டிட்டு, அந்தக் கட்டையன் ரெங்கப்

பன் சொன்னான், இந்தா செட்டிய வீட்டுவண்டி ஒத்த வண்டியா வருது. பெண்டுகளும் இருக்காக. ஒரு மொட்டு மொட்டுவோம். போற போக்கில் கிடைச்சது லாபமெண்ணுன். செட்டிமாரிட்ட திருடுறதுண்ணு ரெம்ப சலீசு. "அடே எல்லாத்தையும் கொடுக்கிறியா மண்டைய உடைக்கட்டுமா?" எண்ணு இரண்டு மூணுபேர் கம்புங் கத்தியும் வைச்சிக்கிட்டு ஒரு சத்தம் போட்டா எல்லாத்தையும் கழத்தித் தந்திருவாக. சண்டையும் போடவேண்டாம். சாடியும் போடவேண்டாம். இந்தச் சேதி எங்களுக்கு தெரியும். அதனுல் ரெங்கப்பன் சொன்னதுக்கு நான் நல்ல தெண்ணேன். அதுக்குப்பிறகு வண்டியை நிறுத்தி, எல்லாம் கழத்திவைக்கச் சொன்னோம். அதுக்குள்ளேசாமி வந்து எங்களை அடிச்சுத் தள்ளிட்டாக. அப்புறம் எங்களுக்கு ஒண்ணும் தெரியாது" என்று சொன்னான்.

தாமோதர சுவாமி மற்றவனைப்பார்த்து அது உண்மை தானு வென்று கேட்க, அவன் அப்படித்தானென்று கூறினன்.

சிலநேரங் கழித்து ஆறு போலிஸ்காரர் அங்குவந்து தாமோதர சுவாமியை வணங்கி நின்றனர். அவர் நடந்த விஷயங்களை அவர்களுக்கு கூறினபின் போலிசார் அந்தத் திருடர் மூவருக்கும் விலங்கு பூட்டி அரிமளத்துக்குக் கொண்டுபோனுர்கள்.

தாமோதர சுவாமியும் அவர்களுடன் சென்றார். அவருக்கு "சிவ சிவா" "ஹர ஹரா"ப் போடுவதில் மாத்திரமல்ல, கொள்ளைக்காரருக்கு கண்விழி பிதுங்க குத்து விடுவதிலும் தேர்ச்சி உண்டென்று தெரிகிறது. ஏதோ இவர் ஓர் நூதனமான சன்னியாசியாகத்தான் காணப்படுகிறார்

## பத்தாவது அத்தியாயம்.



### "கேடுவான் கேடு நினைப்பான்"



ஒரே சமயத்தில் பல காரியங்கள் நிகழ்ந்திருக்குமானால் அவற்றையெல்லாம் ஏக காலத்தில் சொல்ல முடிகிறதில்லை. ஒன்றன்பின்னொன்றாய்த் தான் சொல்லவேண்டி யிருக்கிறது. சில விஷயங்களைத் தொடர்ந்து சொல்லிவிட்டு மறுபுறம் திரும்புமுன் அவ்விடத்திய சமாச்சாரங்கள் நாட்பட்டு விடுகின்றன. அதற்கு நாமென்ன செய்வோம்.

முந்தின அத்தியாயத்தின் ஆரம்பத்தில் கண்ட விஷயங்கள் நடந்த அன்று காலை 11-மணி இருக்கும். மதுரை கீழமாசி வீதி வழியாக ஓர் குதிரை வண்டி போய்க்கொண்டிருக்கிறது.

"வண்டியை வேகமாய் விடு. ரெயில் வருகிற டயன் ஆச்சு" என்று வண்டிக்குள்ளிருந்து ஒரு சப்தம் புறப்பட்டது. உடனே ஜட்கா வண்டிக்காரன் எலும்பும் தோலுமாய் இளைத்துப் போயிருந்த ஏழைக் குதிரையை சவுக்கினால் அடிமேலடி யடித்துத் துரத்தினான். வண்டி முன்னையைவிடச் சற்று வேகமாய் ஓடி சில நிமிஷங்களுக்குள் மதுரை ஜங்ஷன் ரெயில்வே ஸ்டேஷனில் வந்து நின்றது. ஜட்காக்காரன் வண்டியை நிறுத்தினதும் உள்ளிருந்து ஒரு தனவைசிய கனவான் இறங்கினார். இவர்தான் சோ. ம. அளகப்பன் செட்டியார். வைரப்பதக்கக் களவு விஷயமாய் இவர்மீது சந்தேகமுண்டாக்கி, இவர் நடபடிகளைக் கவனிக்

கும்படி வீரப்பன் செட்டியார் மதுரைக்குப் போனதைப் பற்றி வாசகர்கள் ஏற்கனவே அறிவார்கள்.

ஜட்கா வண்டிக்காரன் வண்டிக்குள்ளிருந்த அவருடைய பெட்டிகளைக் கீழே இறக்கிவைத்தான். இதற்குள் மூன்று ரெயில்வே சிப்பந்திகள் (போர்ட்டர்கள்) வந்து "ஐயா எனக்குக் சொல்லுங்கள் நானே இந்தச் சாமான்களை எடுத்து ரெயிலில் ஏற்றிவிடுகிறேன்" என்று ஒவ்வொருவரும் சொல்லிக்கொண்டார்கள். செட்டியாருக்கு அவர்களில் யாரைத் தெரிந்துகொள்ளுவதென்று தோன்றவில்லை.

செட்டியார் மலைப்பதைக் கண்ட அந்த அற்பக் கூலிக்காரர் ஆளுக்கொரு பெட்டியை தூக்க ஆரம்பித்தனர். ஒருவன் பாய்ந்து செட்டியாரின் ரெயில் பையைக் கையிலெடுத்துக் கொண்டு, தகரப் பெட்டியைத் தூக்க ஆரம்பித்த மற்றவனை ஆக்கிரமத்துடன் நோக்கிப் பார்த்து "ஏ, இங்கே பார், உங்கப்பானை சொன்னேன். அந்தப் பெட்டியை வைச்சிட்டு அப்பாலே போ. நான் முதலிலேயே வந்து செட்டியார் ரெயில் பையைக் கூடக் கையிலெடுத்து வைத்திருக்கிறேன். அதைப் பார்த்திருந்தும் போக்கிரித்தனம்பண்ண ஆரம்பிக்கிறையா வீண் வம்பு வரும் சொல்லிவிட்டேன்," என்று அதட்டினான். மற்றவன், "சீ சீ, நாயே சும்மா கிடக்கிறையா தவடையை உடைக்கணுமா? செட்டியார் வண்டி கேட்டிலே வாக்கிலேயே பார்த்தவன் நானுச்சுதே" என்று கூச்சலிட்டுக் கொண்டே தகரப் பெட்டியைத் தூக்கிக்கொண்டு"செட்டியாரய்யா வாருங்க" என்று செட்டியாரை அழைத்தான். ரெயில் பை வைத்திருந்தவன் நெருங்கி வந்து மற்றவன் வைத்திருந்த தகரப் பெட்டியை பிடுங்கிக் கீழே வைக்க எத்தனித்ததில் அவ்விரு

வருக்கும் மல்லுண்டாயிற்று. அதில் தகரப்பெட்டி தவறி, டமாரென்று தரையில் விழுந்தது. விழுந்ததில் பக்கத்தில் நின்று கொண்டிருந்த செட்டியாரின் முன்னங்காலில் பலமாய் மோதிவிட்டது. செட்டியார் வேதனை பொருக்க மாட்டாமல் ஸ்ரீ ஷண்முக நாதனைக் கூவி யழைத்தார். தகரப்பெட்டி நெளிந்து போயிற்று. தமாஷ் பார்க்கிறதற்காக ஜனங்கள் சுற்றிவளைந்தனர். இந்தச் சந்தடியையும், ஜனக் கூட்டத்தையும் சற்றுதூரத்தில் நின்று கவனித்த ஒரு ரெயில்வேபோலீஸ்வீரன், "ஏதோ சச்சரவு நடக்கிறது. நான் இங்கே நின்றிருந்தால் என்னைக் கூப்பிடுவார்கள். வீண் சிரமமுண்டாகும். ஆகையால் தற்சமயம் தலைமறைவாயிருந்து எல்லாம் முடிந்த பிற்பாடு வந்து அவசியமானால் மேன் பாக்காய் விசாரித்து அட்டகாசம் செய்து ரெயில்வே போலீஸின் கௌரவத்தை நிலைநாட்டிவிடலாமென்று எண்ணினவன் போல அவ்விடம்விட்டுப் பெயர்ந்து ரெயில்வே நிலையத்தின் மற்றொரு பாகத்துக்குப்போய்விட்டான்.

இதனிடையில் ஸ்ரீ ஷண்முகநாதனை சிந்தைசெய்து அடிபட்டகாலைத் தடவிக்கொண்டு நின்ற செட்டியாரிடம் ஜட்காவண்டிக்காரன் வந்து வண்டிவாடகைகேட்க செட்டியார், பேசினபிரகாரம் எட்டணு கூலி கொடுத்தார். அவன் அதை வாங்காமலே, "என்ன ஐயா செட்டியாரே, வண்டியை வேகமாய் விடு என்று சொல்ல நான் குதிரையை அடித்துத் துரத்திவந்தனே. குதிரை துவண்டு போயிட்டுதே அதற்கு ஒன்றுமில்லையா? இன்னொரு கால் ரூபா சேர்த்துக்கொடுங்க," என்று கேட்டான். இரண்டணு சேர்த்துக் கொடுத்தார். அவன் அதையும் வாங்காமல் இன்னும் இரண்டணு கொடுத்துத்தான் தீரவேண்டு

மென்று ஒட்டாரம் பண்ணினன். "அவர், இவர்" என்று மரியாதையைக் குறைத்துப் பேச ஆரம்பித்தான். செட்டியார் சாது என்ன செய்வார்? இப்படிப்பட்ட அற்பகூலிகாரரை அடக்கியாளப் பயின்றிருக்கவில்லை. சுற்றிக் கும்பு கூடி வேடிக்கைபார்த்த ஜனங்களாவது தலையிட்டு அவருக்கு உதவி செய்யவில்லை. எல்லாரும் அதை ஒரு தமாஷாகப் பார்த்துக்கொண்டு நின்றனர். "நமது தேசத்தான் அதிலும் சாதுவாகத் தெரிகிறது. இந்த வண்டிக்காரன் பேசின கூலியைப் பெற்றுக்கொண்டு, அதற்குமேல் அவர் இஷ்டப்பட்டுக் கொடுத்ததை வாங்கிக்கொண்டு போகாமல் தான் குறிப்பிட்ட தொகையைத் தரும்படி அவரை உபத்திரவித்து கௌரவயீனமான வசனப்பிரயோகம் செய்வது அடாத செயலெ"ன்று அந்த ஜனங்களில் ஒருவராவது அந்த வண்டிக்காரனை அடக்க முன்வரவில்லை. வண்டிக்காரனுடைய அடாத செயலும், பல்லிளித்துக்கொண்டு வேடிக்கை பார்க்கிற ஜனங்களின் அற்பத்தன்மையும் அவருக்கு சஞ்சலத்தை கொடுத்தன. அவர் இன்னும் இரண்டணாவை வண்டிக்காரனுக்குக் கொடுத்துவிட்டு, வேறொரு ஆளைக் கூப்பிட்டு தமது சாமான்களை எடுப்பித்துக்கொண்டு போய் ஸ்டேஷனில் பார்சல் குமஸ்தாவிடம் அவற்றை நிறுத்து அனுப்பும்படி கேட்டார். அந்த குமஸ்தா நல்லதென்று சொல்லிவிட்டு தனது வேலையைப் பார்த்துக்கொண்டிருந்தானே தவிர செட்டியாரின் சாமானைக் கவனிக்கவில்லை. நேரம் கடந்துபோகிறதே யென்று செட்டியாருக்கு ஆத்திரமுண்டாயிற்று. அந்தச் சமயத்தில் அலங்காரமாக உடைதரித்திருந்த ஒரு பிரயாணி அந்தப் பார்சல் குமஸ்தாவை யணுகி தமது சாமான்களை ரெயிலில்

அனுப்பவேண்டுமென்று சொல்ல, அவன் உடனே அவரது சாமான்களை நிறுவை பார்த்து ரசீதுகொடுத்து அந்தப் பிரயாணியை அனுப்பிவிட்டான். தமது சாமான்களையும் அனுப்பவேண்டுமென்று செட்டியார் மீண்டும் அந்தக் குமஸ்தாவிடம் சொல்ல அவன் "கொஞ்சம் பொருங்கள் செட்டியாரே. இவ்வளவு அவசரப்பட்டால் எப்படி? கையிலிருக்கிற வேலைகளையெல்லாம் ஒழித்துவிட்டு இதோ வந்துவிடுகிறேன்" என்று அவ்விடம் விட்டு நீங்கினான். செட்டியார் தனக்குள்"இந்த குமஸ்தா நம்மிடம் பணம் பிடுங்கலாமென்று இந்தமோடியெல்லாம் செய்கிறான். மற்ற பிரயாணிக்கு, கையிலிருக்கிற வேலைகள் ஒழிய வேண்டுமென்று இவன் சொல்லவில்லையே" என்று நினைத்துக்கொண்டிருக்கையில் இதை யெல்லாம் கவனித்துக் கொண்டிருந்த ஒரு கூலிக்காரன் செட்டியாரைப்பார்த்து"ஐயா அவருக்கு ஏதும் அரை, கால் கொடுத்தா சுருக்கா முடிஞ்சிடும் "என்று சொல்ல, செட்டியாரும் அப்படியே அரை ரூபாய் அந்தக் குமஸ்தாவுக்குக் கொடுத்து தம்வேலையை முடித்துக் கொள்ள வேண்டியதாயிற்று.

அதன்பின் டிக்கட் வாங்குவதற்காக அவர் டிக்கட் ஜன்னலண்டை போனபொழுது அங்கு ஜனநெருக்கடியாயிருந்தது. மதுரையில் எப்போதும் கூட்டத்துக்குக் குறைவில்லைத்தானே. அந்த ஜனக்கூட்டத்தில் புகுந்து ஜன்னலை யணுகி ஒரு பத்துரூபா நோட்டை நீட்டி சென்னைக்கு டிக்கட் கேட்க டிக்கட் கொடுக்கும் குமஸ்தா அதை வாங்காமல் தன்னிடத்தை விட்டெழுந்து பக்கத்திலிருந்த இன்னொரு குமஸ்தாவிடம்போய் ஏதேதோ பேசிக்கொண்டிருந்தான். இதோ செட்டியார் வந்திருக்கிறார் இவரிடம்

இரண்டொரு ரூபாய்க்காவது வழிபண்ண வேண்டுமென்று அந்தக் குமஸ்தாவின் மனதில் பலத்த யோசனை நடந்து கொண்டிருந்தது. இந்த குமஸ்தாவைப் போன்ற ஆசாமிகள் எங்குமிருக்கிறார்கள். தங்கள் உடன் தேசத்தாரிடமிருந்து அயோக்கிய வழியிலே அக்கிரமமாக பணம் சம்பாதிப்பதையே தொழிலாக அவர்கள் மேற்கொண்டிருக்கிறார்கள். இப்படிப் பணந்தேடுகிற பல இழிஞர், அந்தப் பணத்தில் ஒருசிறு தொகையை செலவிட்டு அன்னதானம் செய்தோ அல்லது பட்சிபறவைகளுக்கு இறைவாங்கிப் போட்டோ, தர்மிஷ்டி என்றும், ஜீவகாருண்ய ரென்றும் புகழ் சம்பாதிக்க துணிவது முண்டு.

சிலநேரங்கழித்து அந்தக் குமஸ்தா தன் ஆசனத்துக்கு வந்து டிக்கட் கொடுக்க ஆரம்பித்தான். செட்டியார் மீண்டும், மீண்டும் டிக்கட் கேட்டும், அதைக் கேளாதவன் போல மற்றப்பிரயாணிகளுக்கு டிக்கட் கொடுத்துக் கொண்டிருந்தான், வண்டிபுறப்படுகிற நேரம் சமீபித்ததால் செட்டியார் ஆத்திரத்துடன் நின்று கொண்டிருந்தார். கடைசியில், செட்டியாரிட மிருந்து பணத்தை வாங்கிக்கொண்டு ஒரு டிக்கட்டை எடுத்து இருபக்கமும் திருப்பித் திருப்பிப் பார்த்தபின் கையில் வைத்துக்கொண்டு "மதுராசுக்குத் தானே" என்று அந்த குமஸ்தா ஒரு கேள்வி கேட்டான். செட்டியார் ஆமென்று பதில் சொன்னதின் மேல் அவன் பல்லை யிளித்துக்கொண்டு "எனக்கு ஏதாவது இல்லையா செட்டியாரே" என்று கேட்டான். செட்டியார் என்ன செய்வார். "சரி பார்த்துக்கொள்ளுவோம்" என்று கூற, அவன் அந்த டிக்கட்டை தேதி குறிப்பிடும் யந்திரத்தில் வைத்து தேதி அச்சிட்டுக் கொடுத்து பாக்கித்

தொகையைக் கொடாமல் தனக்கு ஏதாவது பணந்தரவே ண்டுமென்று சொல்லிக்கொண்டிருந்தான். கடைசியில் அவ னுக்கும் ஒரு ரூபாய் தொலைக்கவேண்டியதாயிற்று.

ரெயில் பிரயாணத்திலும், கப்பல் பிரயாணத்திலும் தனவைசியர் இப்படிப்பட்ட தொந்தரவுகளுக் குட்படுவது சாதாரணமாகிப் போயிருக்கிறது: ரெயில்வேயும்,ரெயில்வே சிப்பந்திகளும் பொதுஜன சௌகரியத்துக்காக ஏற்பட்டுள் ளன ரென்பதே அநேகருக்கு நூதனமாக தோற்றக்கூடும். ரெயில் வண்டியில் போதிய வசதியையும், ரெயில்வே உத்தி யோகஸ்தரிட மிருந்து குறிப்பிட்ட பணிவிடையையும் பெற ஒவ்வொரு பிரயாணிக்கும் உரிமையுண்டு. இவ்விஷ யங்களில் ஏதும் குறை உண்டானல் அதைப்பற்றி உடனே ரெயில்வே மேலதிகாரிகளுக்குத் தெரிவித்து அதை நிவர் த்திக்க ஒவ்வொரு பிரயாணியும் முயற்சி செய்யவேண்டும்

அப்படிச்செய்ய இதுவரையில் தனவைசியர் முற்ப டாததே, ரெயில்வே பிரயாணத்தில் அவர்களுக்கு, ரெயில் வே உத்தியோகஸ்தால் பலவித இம்சைகள் நேரிடுவதற்கு முக்கிய காரணமாகும். ரெயில்வே, தந்தி, தபால், ரெவன்யூ முதலிய ஒவ்வொரு இலாக்காவிலுமுள்ள உத்தியோகஸ்தர் கள் தங்கள் கடமைகளை அணுவளவேனும் மீறி எந்த வகுப் பாருக்கும் இம்சை விளைக்காதபடி, பொது ஜனங்கள் கவனி க்கவேண்டும்; ஒவ்வொருவருமே கவனிக்கவேண்டும். தன வைசியரும் முன்போலிராமல் தங்கள் சுயமரியாதையைக் காப்பாற்ற நியாயமான வழிகளெல்லாவற்றிலும் முயற்சி செய்யவேண்டும். நிற்க.

அளகப்பன் செட்டியார் வண்டியிலேறி விட்டார். வண்டிபுறப் படுகிற நேரத்தில் ஒரு பிரயாணி ஆத்திரத்

துடன் வண்டியிலேற ஓடிவந்தார். அவர் யாரென்று அள கப்பன் செட்டியார் எட்டிப்பார்த்தபொழுது வீரப்பன் செட்டியார் என்று தெரிந்தது. முந்தினநாள் வீரப்பன் தம் மைப்பற்றி விசாரித்ததாக விஸ்வநாதன் செட்டியார் சொன்னவிஷயம் அவர் ஞாபகத்துக்கு வந்தது. ஞாபகத்துக்கு வரவும், வீரப்பன் தன்னைப்பற்றி மதுரையில் விசாரிக்க வேண்டியதென்ன, ஏதும் தொல்லையி விழுத்துவைக்க நினைக்கிருனோவென்று அளகப்பன் செட்டியார் எண்ணமிட்டுக் கொண்டிருந்தார். வண்டி நிலைபெயர்ந்து துரிதகதியாய்ச் செல்ல ஆரம்பித்தது.

இன்னொரு வண்டியில் வீரப்பன் செட்டியார் உட்கார்ந்து யோசனை செய்துகொண்டிருக்கிருர். அவர் மனதில் அடுத்தவண்டியிலிருக்கும் அளகப்பன் செட்டியாரைப்பற்றி பலவித எண்ணங்கள் உலாவுகின்றன. அவ்வெண்ணங்கள் அன்பின் ஜோதிபெற்றவையா யிருக்கவில்லை; குரோதமும் துவேஷமுமுள்ள தீய எண்ணங்களாதலின் அவரது மனப் பரப்பை அந்தகாரப் படுத்தி நின்றன. மதுரையில் வந்து அளகப்பன் செட்டியாருக்குத் தீங்கிழைக்கலாமென்று வந் தவர் வீரப்பன் செட்டியார். ஆனல் என்ன விதத்தில் அப் படிச் செய்வதென்று அவருக்குத் தோன்றவில்லை. மதுரை யில் இரண்டொரு தனவைசியர்களைக்கண்டு அவர்களிடம் அளகப்பன் செட்டியாரைப்பற்றி ஜாடையாகப் பேச்சுக் கொடுத்து அவர்களின் மனப்பாண்மை எவ்வித மிருக்கிற தென்று சோதித்துப் பார்த்தார். ஒருவராவது இவருடைய நோக்கத்துக்குச் சரியாகப் பேசவில்லை. என்னசெய்வ தென்று தோன்ருமல் அளகப்பன் செட்டியாரை பின் தொடர்ந்து திரிந்தார். பின்பு அவர் சென்னைக்குப்போகிரு

றென்று தெரிந்து ரெயில்வே ஸ்டேஷனுக்கு ஓடிவந்தார். வண்டி புறப்படுகிற நேரமாய்விட்டது. டிக்கட் வாங்க முடியவில்லை.

டிக்கட் இல்லாமலே வண்டியிலேறிவிட்டார். அளகப்பன் செட்டியாருக்கு தீங்கிழைக்கும் யோசனையிலே மூழ்கியிருக்கிறார். வண்டி பல ஸ்டேஷன்களைக் கடந்து சென்றது. இன்னும் வீரப்பன் செட்டியாரின் யோசனைக்கு முடிவு ஏற்படவில்லை.

டிக்கட் பரிசோதகன் கூப்பிட்ட பிறகுதான் வீரப்பன் செட்டியார் தமது ஆலோசனையிலிருந்து விழித்தார்; டிக்கட் வாங்கவில்லை என்ற ஞாபகம் உண்டாயிற்று. தொந்தரவு நேரிடுமே என்று பயந்தார். செட்டியாரிடம் டிக்கட் இல்லை யென்பதைக் கண்ட டிக்கட் பரிசோதகன் தனக்குள் "இன்றைக்கு நல்ல வேட்டை கிடைத்தது" என்று எண்ணிக்கொண்டான். வார்த்தைகளைச் சரமாரியாகப் பொழிந்து, அதட்டி அதிகாரஞ்செய்ய ஆரம்பித்துவிட்டான். அவனுக்குப் பக்கபலமாக சில ரெயில்வே உத்தியோகஸ்தர் வந்து கூடினர். கடைசியில் வீரப்பன் செட்டியார் கழுத்தில் கிடந்த மேல் வஸ்திரத்தைப்பற்றி யிழுத்து அவரை ஸ்டேஷன் மாஸ்டரிடம் கொண்டுபோனார்கள். அவசரத்தில் டிக்கட் வாங்கமுடியாமல் வண்டியில் ஏறிவிட்டதாக வீரப்பன் செட்டியார் சமாதானம் சொன்னார்.

"என்ன அவசரமா யிருந்தாலும் கார்டினிடம்சொல்லி யிருக்கவேண்டுமே. அப்படி கார்டினிடம் சொன்னீரா" என்று ஸ்டேஷன் மாஸ்டர் கேட்க, வீரப்பன் செட்டியார் "நான் சொல்லவில்லை, அப்படிச் சொல்லவேண்டுமென்று எனக்குத் தெரியாது" என்று சொன்னார். அவர் சொன்ன

தில் ஒன்றும் ஒப்புக்கொள்ளப்படவில்லை. கடைசியாக அந்த டிரெயின் புறப்பட்ட ஸ்டேஷனிலிருந்து இரட்டை வாடகையும், சட்டவிஷயமாய் மேல்நடவடிக்கைசெய்யாமல் விடுவதற்காக 25 ரூபாயும் தருவதாக, வீரப்பன்செட்டியார் ஒப்புக்கொண்ட பிறகுதான் விஷயம் ஒரு முடிவுக்கு வருவதாகக் காணப்பட்டது. இதற்குள் வண்டி புறப்பட்டுப் போய்விட்டது.

வண்டி போய்விட்டதை யுணர்ந்த வீரப்பன் செட்டியாருக்கு உண்டான மனச்சஞ்சலத்துக்கு எல்லையேயில்லை. டிக்கட் வாங்காததினால் தாம்பட்ட கஷ்டங்களைக்கூட அவர் பொருட் படுத்தவில்லை. வண்டிபோய்விட்டதே என்னும் கவலை மற்ற விஷயங்களை யெல்லாம் விழுங்கிவிட்டு தானாக நின்று அவரைத் துன்பப்படுத்திற்று. மனச்சஞ்சலத்துடன் வெகுநேரம் காத்திருந்து அடுத்தவண்டியிலேறிப் புறப்பட்டார். பறங்கிமலை ஸ்டேஷனில் வண்டி நின்ற பொழுது அலங்காரமாக ஆடைகளை அணிந்துகொண்டிருந்த ஒருவர் வந்து செட்டியார் இருந்த வண்டியிலேறினார். அவருடைய காம்பீரமான தோற்றமும், புன்னகைபொலியும் முகமும் வீரப்பன் செட்டியாரின் கவனத்தைக் கவர்ந்தன. இதற்குள், அவர் வந்து வீரப்பன் செட்டியார் இருந்த இருக்கைக்கு எதிரிலிருந்த ஆசனத்தில் உட்கார்ந்தார். செட்டியாருடன் ஜாடையாகப் பேச்சுக்கொடுத்தார். செட்டியாருக்கு ஏற்கனவே அவரைப்பற்றி மதிப்பான அபிப்பிராயம் ஏற்பட்டிருந்ததால் உற்சாகமாய் பதில் கூறிவந்தார். சம்பாஷணை பலத்தது. சென்னை எழும்பூர் ஸ்டேஷன் போய்ச் சேருமுன் இருவரும் ஆப்தசினேகிதர்களாகி விட்டனர். எழும்பூர் ஸ்டேஷனில் இறங்கினதும்

அலங்கார உடையணிந்திருந்த பிரயாணி, வீரப்பன் செட்டியாரிடம், தாம் மறுநாள் வந்து அவரைக் காண்பதாகச் சொல்லி விடைபெற்று, தமது இல்லம் ஏகினார். வீரப்பன் செட்டியார் பவளக்கார வீதியிலுள்ள பர்மா நாட்டுக்கோட்டையார் நகர விடுதிக்குச் சென்றார். மறுநாட்காலை எட்டு மணியிருக்கும். வீரப்பன் செட்டியார் வெளியே செல்வதற்கு தயாராகி நகரவீதியின் முன் தாழ்வாரத்தில் உட்கார்ந்து கொண்டிருந்தார். சில நேரத்துக்குள் ஒரு குதிரை வண்டிவந்து வாசலில் நின்றது. அதனுள்ளிருந்து நாம் ஏற்கனவே அறிந்திருக்கிற, அலங்கார உடையணிந்தவர் இறங்கி, மலர்ந்த முகத்துடன் செட்டியாரை நமஸ்கரித்து,

"தாங்கள் எனக்காக வெகுநேரம் காத்திருக்கிறீர்களோ." என்று கேட்டுக்கொண்டே வீரப்பன் செட்டியார் இருக்குமிடத்துக்குச் சென்றார். வீரப்பன் செட்டியார் "இல்லை யில்லை. நானும் இப்பொழுதுதான் தயாராகி இங்கு உட்கார்ந்திருக்கிறேன்" என்றார்.

வந்தவர்.—"சரி எல்லாம் தயார்தானே புறப்டுவோமா?"

வீரப்பன் செட்டியார்.—"ஆமாம். புறப்படவேண்டியதுதான்"

பின்பு இருவரும் புறப்பட்டு இராயப் பேட்டைக்குச் சென்று அங்கு ஒரு சந்திலிருந்த ஓர் பெரிய வீட்டின் முன்வாயிலை அடைந்தனர். அலங்கார ஆடையணிந்த மனிதன் முன் சென்று வாயிலில் தட்டினார். சேவகனைப் போல் உடையணிந்த ஒருவன் வந்து கதவைத்திறந்தான். இருவரும் உட்பிரவேசித்தார்கள்.

"கிருஷ்ணய்யர் இருக்கிறாரா?" என்று அலங்கார உடையணிந்தவர் அந்தச் சேவகனிடம் கேட்டார்.

"ஆம் எஜமான் இருக்காங்க" என்று சேவகன் கூறினான். இவர்கள் பிரவேசித்தது ஓர் தாழ்வாரம். அதன் எதிர் பக்கத்தில் ஒருவாயில் இருந்தது. சேவகன் முன்சென்று அந்தவாயிலைத் திறந்தான். அலங்கார உடையணிந்தவர் முன்னும், வீரப்பன் செட்டியார் பின்னுமாக உள்ளே சென்றார்கள். அந்த அறை வெகுவிசாலமாயிருந்தது. ஒரு பெரிய மேஜையில் பெரிய உத்தியோகஸ்தர் போல காணப்பட்ட ஒரு காம்பீர புருஷன் ஏதோ எழுதிக்கொண்டிருந்தார். கௌரவத் தோற்றமுள்ள வேறு இருவர் இரு பக்கங்களில் உட்கார்ந்திருந்தனர். வீரப்பன் செட்டியாரும் மற்றவரும் பிரவேசித்த அரவங்கேட்டு மேஜையில் உட்கார்ந்திருந்தவர் ஏறிட்டு பார்த்து, "குட்மார்னிங், மிஸ்டர் துரைசாமி முதலியார்," என்று அலங்கார உடையணிந்திருந்தவரைப் பார்த்துச் சொன்னார்.

துரைசாமி முதலியார் பதில்வந்தனம் சொல்லி "இந்தச் செட்டியாரவர்களைப் பற்றித்தான் நான் நேற்றிரவு தங்களிடம் கண்டுபேசினேன்" என்று வீரப்பன் செட்டியாரைச் சுட்டிக் காண்பிக்க, மேஜையின்முன் இருந்தவர் ஆசாரத்துடன் எழுந்து சிரம்வணங்கி,செட்டியாருக்கு வந்தனங் கூறியபின், "யாரடா அங்கே, பியூன், நாற்காலி கொண்டு வந்துபோடு" என்று சேவகனைப் பார்த்து அதிகாரத் தொனியாய்க் கூறினார்.

சேவகன் ஓடோடியும் சென்று இரண்டு நாற்காலிகள்கொண்டுவந்து போட்டான். துரைசாமி முதலியாரும் வீரப்பன் செட்டியாரும் உட்கார்ந்தார்கள். இவர்களை வர

வேற்றுப் பேசினவரும் தமது ஆசனத்தில் உடகார்ந்தார். துரைசாமி முதலியார் சேவகனிடம் கேட்ட கிருஷ்ணய்யர் என்பவர் இவர்தான். மேஜையின் பக்கத்தில் உட்கார்ந்திருந்த மற்ற இருவரும் அவருடைய உதவி உத்தியோகஸ்தர்போலத் தோன்றினர்கள். ஆனல் அது என்ன ஆபீஸ் என்றும் அவர்கள் என்ன உத்தியோகஸ்தர்களென்றும் இனிமேல் தான் வெளிப்படவேண்டும்.

எல்லாரும் தாழ்ந்தகுரலிலே வெகுநேரம் பேசிக்கொண்டிருந்தார்கள். கடைசியில் கிருஷ்ணய்யர் செட்டியாரைப் பார்த்து, "இது நிரம்பவும் சிக்கானவேலை. நாங்கள் வெகு ஜாக்கிரதையாக வேலைசெய்யவேண்டி யிருக்கிறது. இல்லாவிட்டால் எங்களுக்கே பெரிய ஆபத்துவந்துவிடும். ஆகையால் நீங்கள் செலவைப் பார்க்கக்கூடாது. ரூபா ஆயிரம் கொடுத்துவிடவேண்டியதுதான். முன்பணமாக ஐந்நூறும், வேலைமுடிந்தபின் ஐந்நூறுமாகக் கொடுங்கள். ஆளை ஆட்டிவைக்கிறோம்" என்று கூறினர்.

செட்டியார், துரைசாமி முதலியாரை ஏறிட்டுப்பார்க்க அவர் "வாஸ்தவந்தான். இது கொஞ்சம் கஷ்டமானவேலைதான். ஆகையால் வேலைக்குத் தக்க கூலிகொடுக்கவேண்டும். நீங்கள் செலவைப்பற்றி யோசிக்கப்படாது." என்று தைரியங் கூறினர். செட்டியார் உடனே தமது மடியிலிருந்த பணப்பையை எடுத்து ஐந்நூறு ரூபாயும் நோட்டுகளாகக் கொடுத்து "சுவாமி, எல்லாக் காரியங்களும் பேசினதுபோல நடைபெறவேண்டும்" என்று கூறினர்.

கிருஷ்ணய்யர்.—நீங்கள் அதைப்பற்றி ஒன்றுமே யோசிக்கவேண்டாம். உங்களுக்கு ஆச்சரியமுண்டாகத் தக்கதாக காரியத்தை முடிக்கிறோம். இதுவிஷயமான

கவலை இனி உங்களுக்கு இருக்கவேண்டியதில்லை. எல்லாவற்றையும் நாங்களே பார்த்துக்கொள்ளுகிறோம். உங்களுக்கு ஏதாவது சந்தேகமிருந்தால் துரைசாமி முதலியாரிடம் கேட்டுக்கொள்ளுங்கள்."

துரைசாமி முதலியார்.—"ஆமாம், செட்டியாரவர்களே. நீங்கள் இனி கவலைப்படவேண்டியதில்லை. உங்கள் கோரிக்கை ஈடேறிவிட்டது என்று எண்ணிக்கொள்ளுங்கள். நான் தினந்தோறும் வந்து மேல் நடவடிக்கைகளைப்பற்றி உங்களுக்கு விபரஞ்சொல்லி வருவேன்" என்றுகூற செட்டியார் திருப்தியடைந்தார். பின்பு வீரப்பன் செட்டியாரும், துரைசாமி முதலியாரும் அவர்களிடம் விடைபெற்றுத் திரும்பினர்.

அன்றுமாலை ஐந்துமணிக்கு துரைசாமி முதலியார் பர்மா நகரவிடுதிக்குவந்து வீரப்பன் செட்டியாரிடம் பேசிக்கொண்டிருந்தார். பின்பு இருவரும் வெளியில் புறப்பட்டு பேசிக்கொண்டே நடந்துபோனார்கள். துரைசாமி முதலியாரின் தூண்டுதலால் ஒரு சந்தில் திரும்பினார்கள். அவ்வழியாகச் சிலதூரம் செல்லுமுன் ஒரு சம்பவம் நிகழ்ந்தது. அங்கே இரண்டு மனிதர் சண்டைபிடித்துக்கொண்டிருந்தார்கள். ஒருவன் நல்ல பலாட்டியன், அவன் மற்றவனை கைகொண்டு நையப்புடைக்கிறான். மற்றவன் அடிபொறுக்கமாட்டாமல் அலறுகிறான். செட்டியாரும் முதலியாரும் அங்கு சென்றதும், அடிபட்டவன் "ஐயோ, சாமி, என்னை அடித்துக்கொல்றானே, கொல்றானே" என்று அலறிக்கொண்டே செட்டியாரைக் கட்டிப்பிடித்துக் கொண்டான். மற்றவனோ விடாமல், பின்னும் இரண்டொரு அறைகள் கொடுத்தான். துரைசாமிமுதலியார் அவனைத்

தடுத்து நிறுத்த முயன்றார். அவனோ திமிறிக்கொண்டு மீண்டும் மற்றவன்மேல் பாயமுயற்சித்தான். செட்டியார் என்னசெய்வதென்று தெரியாமல் விழித்துக்கொண்டு நின்றார். அவரைக்கட்டிப் பிடித்துக்கொண்டு அலறிக்கொண்டிருந்தவன், அதோடு இன்னொரு பக்காவேலையும் செய்துகொண்டிருந்தான். அவன் அழுகையோடு அழுகையாய் செட்டியார் மடியிலிருந்த பணப்பையை வாயினால் கவ்வி வெளியில் இழுத்துக்கொண்டிருந்தான்! ஒருவரும் இதைக் கவனிக்கவில்லை. அடித்தவனுடைய அட்டகாசத்தையே செட்டியார் கவனித்தார். பணப்பை வெளியில் வந்ததும் செட்டியாரைக் கட்டிப் பிடித்திருந்தவன், அவரைவிட்டுத் திடீரென்று மறுபுறம் திரும்பி அந்தப்பையை மறைத்துக் கொண்டு, மற்றவன் பக்கமாய் பார்த்து அழுதுகொண்டே அவனைத்திட்ட ஆரம்பித்தான். பலாட்டியனைகத் தோன்றினவன் துரைசாமி முதலியார் தடுத்ததையும் சட்டை பண்ணாமல், அவனை அடிக்கத்துரத்த, அவன் பயந்து ஓடிப்போனான். பலாட்டியனோ கோபாவேசத்துடன் அவனைத்துரத்திக்கொண்டு போனான். மருகணத்தில் அவ்விருவரும் மறைந்துவிட்டனர். செட்டியார் மடியிலிருந்த பணப்பையும் அவர்கள் கூடவே சென்றது. செட்டியார் அதை உணரவில்லை. நகரவிடுதிக்குத் திரும்பிவந்த பின்தான் பணப்பை காணாமற்போயிற்றென்று தெரிந்தது. அது எப்படிக் காணாமல் போயிற்றென்று அவருக்கு விளங்கவில்லை. சென்ற தெருக்கள் வழியே மீண்டும் சென்று தேடினார். அகப்படவில்லை. மறுநாள் துரைசாமி முதலியார் வந்தபொழுது அவரிடம் சொன்னார். துரைசாமி முதலியார் ஆச்சரியப்பட்டு நன்றாய் பெட்டியைத் தேடிப்பார்க்கும்படி

சொல்ல, செட்டியார் தமது பெட்டியைதிறந்து பரிசோதித்தார். வழியிலே திருடன் பிடுங்கிக்கொண்டு போனபணப்பை பெட்டியிலே இருக்குமா? செட்டியார் வருத்தப்பட்டுக் கொண்டிருந்தார். துரைசாமி முதலியார் தனக்கு அவசரமான வேலையிருக்கிறதென்று கூறி விடைபெற்றுப் போய் விட்டார். பணப்பைபோன கவலையுடன் வீரப்பன் செட்டியார் நகரவிடுதியிலுள்ள கிளப்பில், சாப்பிடச் செல்லுகையில் அளகப்பன்செட்டியார் அன்று சாயங்கால டிரெய்னில் ஊருக்குத் திரும்பிவிட்டதாகக்கேள்விப்பட்டார். அவருக்கு இருந்த பசியும் பறந்தோடிப்போயிற்று. ஒரு மூலையில் உட்கார்ந்து யோசிக்கலாயினார். அளகப்பன் செட்டியாரை கஷ்டத்துக் குள்ளாக்க வேண்டுமென்று அவர் செய்த முயற்சியெல்லாம் வீணாயிற்று.

வீரப்பன் செட்டியார் வியசனத்தி லாழ்ந்திருப்பதை அவ்விடுதியி லுள்ளவர்கள் கண்டு என்ன விசேஷமென்று கேட்க, அவர் ஒன்றுமில்லை என்று கூறிப்பேசாதிருந்தார். துரைசாமிமுதலியார் வருவாரென்று வீரப்பன் செட்டியார் எதிர்பார்த்திருந்தார். ஒருநாள் சென்றது; இரண்டு நாட்களாயின. அவர் வரவேயில்லை. வீரப்பன் செட்டியார், அவர் சொன்ன விலாசத்தில்போய் விசாரணை செய்தார். அவ்விடத்தில் அந்தப்பெயருள்ள ஆள் கிடையாதென்று சொல்லிவிட்டார்கள். வீரப்பன் செட்டியாருக்கு சம்சயந்தோன்றினது. உடனே ராயப்பேட்டையில் அன்று,தாம் துரைசாமி முதலியாருடன் சென்றிருந்த வீட்டுக்குப்போனார். அந்த வீடு சாத்தியிருந்தது. அங்குள்ளவர்களைக் கேட்டதில் அந்த வீட்டில் கடந்த ஆறுமாதக்காலமாக ஒருவரும் குடியிருக்கவில்லை என்றும், அதை வாடகைக்கு அமர்த்த

வேண்டுமானால் அடுத்த வீதியில் வசிக்கும் நாராயணசாமி நாயுடுவிடம் கேட்கவேண்டுமென்றும் சொன்னார்கள். செட்டியாருக்கு என்னசெய்வதென்று தெரியவில்லை. வீட்டுக்காரரான நாராயணசாமி நாயுடுவிடம் போய்க்கேட்டார். அவர் அந்தவீடு ஆறுமாதகாலமாகக் காலியாகத்தான் இருக்கிறதென்றும், ஆனால் நாலைந்து தினங்களுக்குமுன் ஒரு முதலியார் வந்து ஏதோ கூட்டம் நடத்துவதற்காக ஒரு நாளைக்கு அதை வாடகைக்கு எடுத்ததுண்டென்றும் சொன்னார்.

வீரப்பன் செட்டியார்.—"நாலைந்து தினங்கள் என்றால் சென்ற திங்கட்கிழமை தானே"

நாராயணசாமி நாய்டு.—தமது கணக்குப் புஸ்தகத்தை திருப்பிப்பார்த்துவிட்டு "ஆம், சென்ற திங்கட்கிழமை தான்" என்று சொன்னார்.

வீரப்பன் செட்டியார்.—"வாடகைக்கு எடுத்தவர்கள் பெயர் விலாசம் தெரியுமா?"

நாராயணசாமி நாய்டு.—"வாடகைபேச ஒருவர்தான் வந்திருந்தார். பெயர் மார்க்கண்டம்பிள்ளை என்று சொன்னார். ஆள் தளுக்காக உடுத்துக் கொண்டிருந்தார். விலாசம் என்னவோ சொன்னார் மறந்துவிட்டது. வாடகை முன் பணமாகக் கொடுத்து விட்டார்கள். ஏன் விசாரிக்கிறீர்கள்?"

வீரப்பன் செட்டியார்.—"அன்று இங்கு வந்திருந்தேன். அந்த வீட்டில் நாலைந்துபேர் இருந்தார்கள். பேசிக் கொண்டிருந்தோம். அவர்களைப் பார்க்கவேண்டும்."

நாராயணசாமி நாய்டு.—"ஓ. ஓ. அப்படியா சங்கதி. தாங்கள் ஏதாவது தொகை கடன் கொடுத்தீர்களோ?"

வீரப்பன் செட்டியாருக்கு உண்மையைச் சொல்ல வெட்கமா யிருந்தது "இல்லை, கடன் கேட்டார்கள்" என்று சொன்னார்.

நாராயணசாமி நாயுடு செட்டியாரைக் கூர்ந்து பார்த்து விட்டு, "சரி, அது தங்களுடைய காரியம். அதைப்பற்றி அன்னியனான என்னிடம் விவரிக்க தங்களுக்கு இஷ்ட மில்லை என்று உணருகிறேன். ஆனால் ஒன்று. அந்தவீட்டை வாடகைக்கு எடுத்திருந்தவர்கள் யோக்கியராகக் காணப் படவில்லை. பெரிய மோசக்காரரென்று நான் அநுமா னிக்கிறேன். அன்று கூட்டம் நடத்துகிறதாக வீட்டை எடுத்தவர்கள் கூட்டம் நடத்தவில்லை. பகல்வரை நாலைந்து பேர் அங்கு உட்கார்ந்து ஏதேதோ பேசிக்கொண்டிருந்த தாகவும், பிறகு போய்விட்டதாகவும் கேள்விப்பட்டேன். எல்லாரும் வெகு சிறப்பாய் ஆடையணிந்து கொண்டிருந் தார்களாம். நீங்கள் அவர்களுக்கு ஏதாவது பணம் கொடுத் திருந்தால் அதைத்திரும்பப் பார்க்கப்போகிறதில்லை. ஏன் அவர்களையே நீங்கள் இனிக்காண முடியாதென்று நினைக்கி றேன்." என்று கூறினார்.

இதையெல்லாம் கேட்ட வீரப்பன் செட்டியாரின் சந் தேகம் பலப்பட்டது. வியசனத்தோடு விடுதிக்குத்திரும்ப லானார். அலங்காரமாக ஆடைகளைத் தரித்துக்கொண்டு வாக்சாதுரியமாகப்பேசும் தலைப்பாகை மாற்றிச் சோம்பேரி களாகிய பட்டணம் மோசக்காரரால் ஏமாற்றப்பட்டதாக அவருக்குத் தெரிந்தது. உண்மையும் அப்படியே. வீரப் பன் செட்டியார் சென்னைக்கு வரும்பொழுது பாங்கிமலை ஸ்டேஷனிலிருந்து அவருடன் சம்பாஷித்துக் கொண்டு வந்த துரைசாமி முதலியார் என்பவன் பெரிய மோசக்

காரன். உடையாலும், பேச்சினாலும் ஜனங்களை மயக்கி, ஏமாந்தவர்களிடம் பணம் பிடுங்குவதே அவனது தொழில் அதற்காக அவன் செய்யும் உபாயங்கள் பலவேறு மாதிரியா யிருக்கும். அன்று செட்டியாரின் நோக்கத்தை பேச்சினாலறிந்து கொண்டு தானே அதை நிறைவேற்றுவதாக ஒப்புக்கொண்டான். அளகப்பன் செட்டியாருக்கு தீங்கிழைப்பதே வீரப்பன் செட்டியாரின் நோக்கமென்று வாசகர்கள் எளிதில் ஊகித்துக்கொண் டிருக்கலாம். அதற்காக துரைசாமி முதலியார் என்பவன் இராயப்பேட்டையில் ஒரு வீட்டை வாடகைக்கு அமர்த்தி தன்னைச்சேர்ந்த மூன்று நான்கு பேர்களையும் அங்கு ஜோடித்து வைத்திருந்தான். செட்டியாரைக் கூட்டிப் போய் அதையெல்லாம் காண்பித்ததில் அவர் மயங்கி விட்டார். அதோடு, அளகப்பன் செட்டியாரை ஆறுமாதம் ஜெயிலுக்கு அனுப்பத்தக்க ஏற்பாடு செய்வதாக ஆரவாரமாய்க்கூறவே, அவர்களிடம் வீரப்பன் செட்டியாருக்கு அத்தியந்த விசுவாசம் ஏற்பட்டு விட்டது. அவர்கள் கேட்டபடி ஐந்நூறு ரூபாவை அள்ளிக்கொடுத்து விட்டார். அப்பொழுதே அளகப்பன் செட்டியார் வாயில் மண் விழுந்துவிட்டதென்று எண்ணி யெண்ணி மகிழ்ந்து கொண்டிருந்தார். அந்த அவசரத்தில் அவர்களின் நடத்தையையும் ஜாடைகளையும் கவனிக்க முடியாமற் போயிற்று.

சில ஆண்டுகளுக்கு முன் அன்னிய நாடுகளில் கடன் கொடுத்துவிட்டு, கடன் வாங்கினவன் விலாசத்தைச் சரியாய் எழுதாமல், சுரைபடர்ந்த வீட்டுக்கு எதிர் வீட்டுக்காரன் பற்று என்றாவது முனிசிபல் விளக்குக்கு முன் வீட்டுக்காரன் பற்று என்றாவது எழுதிக்கொள்வார்களாம்.

அம்மாதிரியே நமது வீரப்பன் செட்டியார் நடபடியும் இருந்தது. அவருடைய பணப்பையை அபகரித்ததும் துரைசாமியின் ஆட்கள்தான். அந்த ஆட்களை தயார்பண்ணிவைத்துவிட்டு வந்துதான் துரைசாமி முதலியார் செட்டியாரை அழைத்துச் சென்றான். பணப்பை போனவிதத்தைப்பற்றி ஏற்கனவே விவரித்திருக்கிறோம். இந்தப் பணத்தையெல்லாம் அவர்கள் தங்களுக்குள் பாகித்துக்கொண்டார்கள். வீரப்பன் செட்டியாருக்கு இவ்விதமாக ஏறக்குறைய ஆயிரம் ரூபா நஷ்டமேற்பட்டது. "கெடுவான் கேடுநினைப்பான்," என்ற பழமொழி அவர் பால் நிதரிசனமாயிற்று.



## பதினோராவது அத்தியாயம்.



### துப்பறியும் விநோதம்



ஆரிமளம் போலீஸ் ஸ்தானத்திலே அவ்விடத்திய போலீஸ் தலைமை உத்தியோகஸ்தனும் சேவகர்களும் தாமோதர சுவாமியிடம் அதிக வணக்கமாக நடந்துகொண்டனர். தங்கள் மேல் உத்தியோகஸ்தருக்கு எவ்வளவு மரியாதை காட்டுவார்களோ, அவ்வளவு மரியாதை காட்டினார்கள். தாமோதர சுவாமி, அவ்விடத்திய போலீஸ் உத்தியோகஸ்தரிடம் சிலநேரம் அந்தரங்கமாகப் பேசிக்கொண்டிருந்தார். பின்பு அவர் தங்குவதற்காக ஒரு சௌகரியமான வீடு தயாரித்துக் கொடுக்கப்பட்டது.

தாமோதரசுவாமி அந்த வீட்டுக்குச் சென்று தமது உடைகளைக் களைந்து விட்டு வேறு ஆடைகள் தரித்துக் கொண்டார். அதைப் பார்த்தவுடனே எமக்கு எல்லையில்லாத ஆச்சரியமுண்டாயிற்று. என்ன நினைக்கிறீர்கள்? தாமோதர சுவாமியைக் காணோம். அவருக்குப் பதில் ஸ்ரீமான் பத்மநாதன் நிற்கிறார். பதக்கக் களவை வெளிப்படுத்தவந்த துப்பறி நிபுணர் இவர்தான் என்பது வாசகர்கள் ஞாபகத்திலிருக்கும். அவர் அன்று, முக்துக்கருப்பன் செட்டியார் வீட்டுக்கு வந்து சோமசுந்தரத்தினிடம் பேசிக் கொண்டிருந்துபோனதின் பின் அவரைப்பற்றி ஒரு விஷயமும் தெரியாதிருந்தது. அவர் வேறெங்கும் போகாமல் சாமியார் வேஷம் பூண்டு செவல்பட்டியில்தானே துப்பு விசாரித்துக்கொண்டிருந்தார். தாமோதர சுவாமியின் செய்கைகள் சோம்பித்திரியும் சாதாரண சாமியார்களுடையது போல அற்பத்தன்மையதாயிராமல், சுருசுருப்பும், பரோபகாரமு முள்ளவைகளாயிருந்ததால், அவரை ஓர் நூதன சாமியார் என்று நாம் ஏற்கனவே சில தடவைகளில் சந்தேகித்ததுண்டல்லவா?

இப்பொழுது அவர் அரிமளத்தில் வந்திருப்பதற்கும் ஏதோ காரணமிருக்க வேண்டுமென்று தோன்றுகிறது. அன்றிரவு எட்டுமணி இருக்கும். பத்மநாதன் தங்கியிருக்கும் வீட்டிலிருந்து ஒரு கூலிக்காரக்கிழவன் வெளிப்பட்டான். தன்மேல் கிடந்த கந்தல் துணிகளை இழுத்து இழுத்து மூடிக்கொண்டும், குளிரால் நடுங்கிக்கொண்டும், அந்தக்கிழவன் கையிலிருந்தகோலினால் தரையில் தட்டி, தடவித்தள்ளாடிநடந்து சென்றான்.

அந்தக் கிராமத்தின் வடபக்கத்துக்குத் தெருவுக்குச்

சென்று, மற்ற வீடுகளுடன் சேராமல் தனியாய் நின்ற ஒருவீட்டையணுகி அதன் சுவரில் சார்ந்து கொண்டு வீட்டிக்குள் ஏதாவது சந்தடி கேட்கிறதாவென்று கவனிக்கலானான். வீட்டுக்குள் ஒரு சத்தமும் கேட்கவில்லை. கிழவன் வெகு கூர்மையாய்க் கவனித்துக்கொண்டு நின்றான். இந்தக்கிழவன் யார்? நமது நண்பர் பத்மநாதன் ஏதோ காரணத்துக்காக கிழவன் வேஷம்பூண்டு இங்கு வந்திருக்கிறாரென்பதை வாசகர்கள் முந்தியே தெரிந்து கொண்டிருப்பார்கள்.

ஒருமணி நேரத்துக்கு மேலாயிற்று. ஒன்றும் நிகழவில்லை. தமது உத்தேசம் பிசகிவிட்டதோவென்று பத்மநாதனுக்கு சந்தேகம் ஏற்பட்டது. என்றாலும் இன்னும் பார்ப்போமென்று எண்ணினவர்போல நின்றுகொண்டிருந்தார். சிலநேரங்கழித்து அந்தத் தெருவின் வழியே ஆள் வருகிற அரவங்கேட்டது. பத்மநாதன் சுவரோடுசுவராய் ஒண்டிக்கொண்டார். வந்த ஆள்கள் இருவரும் அந்தவீட்டில் முன் வந்து நின்றார்கள். ஒருவன் சென்று கதவைத் தட்டி "மீனாக்ஷி, மீனாக்ஷி" என்று கூப்பிட்டான். இரண்டு மூன்றுதரங் கூப்பிட்ட பிறகு கதவு திறக்கப்பட்டது. வீட்டுக்குள் தீபமேற்றப்பட்டது. வந்த ஆட்கள் இருவரும் உள்ளே புகுந்து உட்கார்ந்தார்கள். அது தாழ்ந்த கூரை வீடாயிருந்ததால் பத்மநாதன் அங்குகிடந்த ஒரு கல்லின் மேல் ஏறி, கூரைக்கும் சுவற்றுக்கு மிடையிலுள்ள இடைவெளி மார்க்கமாய் உள்ளே எட்டிப் பார்த்துக்கொண்டிருந்தார். வந்தமனிதர் இருவரும் உட்கார்ந்து வெற்றிலை போட ஆரம்பித்தனர். அவர்களில் ஒருவன் முத்துக் கருப்பன் செட்டியார் வீட்டு வேலைக்காரனான சுப்பய்யா

என்று தெரிகிறது. ஆனால் அவனை அப்படி அங்கு கண்டதால் பத்மநாதனுக்கு சிறிதும் ஆச்சரிய முண்டாகவில்லை. ஒரு ஸ்திரீ அவர்களுக்கு வெற்றிலை பாக்கு முதலியன எடுத்துக் கொடுத்துக் கொண்டு நிற்கிறாள். அவர்கள் உட்கார்ந்திருப்பது ஏறக்குறைய பதினைந்து அடிநீளமும் பத்து அடி அகலமுமுள்ள ஒரு கூடம். இரண்டொரு பாய்களும், ஒரு கொடியில் சிலதுணிகளும் காணப்படுகின்றன. ஒரு சிறிய மண்ணெய் விளக்கு அவர்களுக்கு முன்னால் புகைவிட்டு எரிந்து கொண்டிருக்கிறது. அந்தக்கூடத்தின் எதிர்ப் பக்கத்தில் இன்னொரு சிறு அறை காணப்படுகிறது. திறந்திருக்கிற அதன் வாயில் வழியாக உள்ளே ஒரு பாய் விரித்துக் கிடப்பது தெரிகிறது.

கொஞ்சநேரம் வெற்றிலையை வெகு அவசரமாக மென்று கொண்டிருந்த பின், சுப்பய்யா மற்றவனைப் பார்த்து, "ஏண்டா, நாராயணா, நான் எடுத்த பிரயாசை யெல்லாம் வீணாய்ப்போச்சே வீணாய். கதை நடுவில் காபி சாப்பிடும் பொழுதே மயக்க மருந்தைக்கலந்து கொடுத்திட்டேன். எல்லாருக்கும் நல்ல தூக்கம். அவள் போட்டிருந்த நகை ஐயாயிரம், ஆறாயிரம் பெறுமே. அதை யெல்லாம்விட்டு அந்தக் குழந்தையிட்ட ஏன்போனாய்?" என்று எரிச்சலும் துக்கமும் கலந்த தொனியிலே கேட்டான். நாராயணன் என்று அழைக்கப் பட்டவன் நல்ல தேகக்கட்டுள்ள பலாட்டியனாகத் தோன்றினான். அவனது கடினமுகமும் துணிகரப்பார்வையும், அவன் எத்தகைய தீச்செயல்களையும் துணிந்து செய்யத்தக்கவன் என்று காட்டின. அவனுக்கு ஏறக்குறைய முப்பத்திரண்டு வயது இருக்குமென்று உத்தேசிக்கலாம்.

"கேளு அண்ணே, நீ எல்லாம் சரியாய்த்தான் செய்து வைச்சிருந்தே. நான்தான் மதிகெட்டுப் போனேன். நான் முன்வாசல் கதவைத்திறந்துகொண்டு இரண்டாங் கட்டுக்கு வந்தபொழுது அங்கணத்திலே போட்டிருந்த விளக்கு மங்கலாய் எரிஞ்சுக் கிட்டிருந்தது. நீ சொன்ன குறிப்புப் படியே ஆச்சியும் குழந்தையும் படுத்திருந்த இடத்தைக் கண்டு பிடித்தேன். அப்பத்தான் நான் முட்டாள் பயலாய்ப் பொயிட்டேன். பதக்கத்துக்கல்லு மின்னட்டாம் பூச்சிமாதிரி பளிச்சுப் பளிச்சென்று மின்னிச்சு. அதைப் பார்த்ததும் என் நினைவுமாறிப் போச்சு. அந்த நாசமாய்ப் போற பதக்கத்தைக் கழற்றினதுதான் தாமசம் குழந்தை முழிச்சு அலறிட்டது. அப்புறம் நான் என்ன செய்ய? அங்கு நிண்ணுலோ மோசந்தான். உடனே சரசரவெண்ணு வெளியே வந்திட்டேன். வெளித் திண்ணையில் படுத்திருந்த ஒரு செட்டியார் தலையை உயர்த்திப் பார்த்தார். எனக்குக் கெதக்கிண்ணுது. ஆனால் அவர் மறுபுறம் திரும்பிப்படுத்துக் கிடவும் நான் தலைதப்பினது தம்பிரான் புண்ணியமென்று வந்திட்டேன்," என்று நாராயணன் சொன்னான்.

"நல்லா நினைவு மாறிப் போச்சு. அவள் போட்டிருந்த நகையெல்லாம் அப்படியே உரிஞ்சுகிட்டு வந்திருக்கலா மேடா. அப்படியானால் எவ்வளவு லேசாக அதுகளையெல்லாம் விற்று முதலாக்கலாம். பதக்கத்திலுள்ள கல் ஒரு மாணிக்கமாம், முப்பதினாயிரமோ, நாற்பதாயிரமோ பெறுமெண்ணு செட்டியார் சொன்னார். அதைக்கொண்டு போய் காரைக்குடி, இராம சுவாமி ஐயரிடம் கொடுத்திருக்கிறையே அவர் நமக்கு எதும் தருவாரா? முழுசாய் நாமஞ்

சாத்தப் போறூர் பார்த்துக் கொள்ளுவேன்" என்றான் சுப்பய்யா.

நாராயணன்.—"அப்படிச் செய்தாரென்றால் அவர் இந்தச் செட்டிநாட்டிலே இருக்கப் போறதில்லை. அவர் என்னை வெள்ளிக்கிழமை வரும்படி சொன்னார். இன்றைக்கு திங்கட்கிழமை. இன்னும், மூன்று நாளிருக்கிறது. வெள்ளிக்கிழமை போனால். அன்றைக்கு தெரிஞ்சுபோகும் அவருடைய பேச்செல்லாம்."

சுப்பய்யா.—"வெள்ளிக்கிழமை போனால் பணம் தருவதாகச் சொன்னாரா? என்ன விலை, அதில் அவருக்கு எவ்வளவு என்று எல்லாம் திட்டமாய்ப் பேசிவிட்டாயா?"

நாராயணன்.—"விலை இன்னதுதானென்று குறிப்பிடவில்லை. எவ்வளவு ஜாஸ்தி கிடைக்குதோ அவ்வளவுக்கு ஏற்பாடு செய்வதென்றும், கிடைக்கிற விலையில் அவருக்கு மூன்றிலே ஒருபாகமென்றும் பேசியிருக்கு. யாரிடமோ பேச்சு நடக்குது. வெள்ளிக்கிழமைவா. முடிவு சொல்றேன் என்றார்."

சுப்பய்யா.—"வெள்ளிக்கிழமை திட்டமான முடிவு சொல்லாவிட்டால் பதக்கத்தையே வாங்கி வந்திடு. வேறு வழியாக அதை காசு மாறலாம் எல்லாம் எச்சரிக்கையாக வேலை நடத்தணும். அங்கே வந்ததாகச் சொன்னனே போலீஸ் அதிகாரி, அவரை நீ எங்கேயாது கண்டியா? அண்ணைக்குவந்து சோமசுந்தரம் செட்டியாரிடம் பேசிக்கிட்டிருந்து விட்டுப்போனதுதான்; அதற்குப்பிறகு ஆளைக் காணவில்லை. நான் செம்ப பயந்துக்கிட் டிருந்தேன்?"

நாராயணன்.—"போலிஸ் அதிகாரியைப்பற்றி நமக்கென்ன. செட்டியப் பிள்ளைகளிடம் காசு பறிக்கிற தற்காக

எதையாவது புளுகிக்கொண் டிருந்துவிட்டுப் போயிருப்பான். நம்மசோலிக்குஅவர்களெல்லாரும் வரமாட்டார்கள்."

சுப்பய்யா.—"ஆனால் நாம் சாக்கிரதையாய் இருக்கணும். வெள்ளிக்கிழமை நீ காரைக்குடிக்குப் போய் காரியத்தை திட்டப் படுத்தி முடித்துப் போட வேண்டியது,"

இப்படிச் சிலநேரம் பேசிக்கொண்டிருந்தபின் சுப்பய்யா எழுந்து தன் மாமன் வீட்டிலே போய்ப் படுத்துக் கொள்வதாகச் சொல்லிப் போய்விட்டான். நாராயணனுக்குச் சாதம்படைக்க அவள் மனைவி ஆயத்தம் செய்யலானாள். சுவரில் ஒண்டிக்கொண்டு இவற்றையெல்லாம் கவனித்திருந்த பத்மநாதனும் அவ்விடம் விட்டு பெயர்ந்து தமது வீட்டை நோக்கிச் சென்றார்.



## பன்னிரண்டாவது அத்தியாயம்



### காரைக்குடிக்கு போகிறவழியில்



ஒருநாள் காலை பத்துமணி யிருக்கலாம். இரண்டு காளைகள் பூட்டிய ஒரு அரைவண்டி கானாடுகாத்தானிலிருந்து காரைக்குடிக்குப் போகிற மார்க்கத்திலே போய்க்கொண் டிருக்கிறது. வண்டி அதிவேகமாய் செலுத்தப்பட்டுப் போகிறது. நாம் சற்றே தாமதித்து அதில் போகிறவர்கள் யாரென்று பார்ப்போம். அவர்கள் வேறெவருமல்ல; நமது நண்பர்கள் சோமசுந்தரமும், சொக்கநாதனுமே. கானாடுகாத்தானில் ஒரு பந்துவின் வீட்டில் நடந்த சாந்தி விசேஷத்துக்கு சோமசுந்தரம் வந்திருந்தார். சொக்கநாதனும் அவ்விசேஷத்துக்கு வா, இரு

வரும் சந்தித்தனர். காரைக்குடியில் தனவைசிய ஊழியர் சங்கச்சார்பாக நடக்கப்போகும் ஒரு ஜாதீயக் கூட்டத்தைப்பற்றி சொக்கநாதன் பிரஸ்தாபித்து, சோமசுந்தரத்தை வரும்படி அழைத்தார். அப்படியே, இப்பொழுது அவ்விருவரும் காரைக்குடிக்குப்போவதைப் பார்க்கிறோம்.

இவ்விதமாக அவர்கள் போய்க்கொண் டிருக்கையில் எதிரே ஒரு தொகையான ஸ்திரிகள் வருவது காணப்பட்டது. அதைப்பார்த்த சோமசுந்தரம், "அதோ மூட்டைகளையும், முடிச்சுகளையும் தூக்கிக்கொண்டு, ஆடியலைந்து வருகிறார்களே நாட்டியக்காரர்போல அந்த ஸ்திரிகள் யார்?" என்று வினவினார்.

சொக்கநாதன் அவர்களைப் பார்த்துவிட்டு "ஓ, அவர்களா? அவர்கள் ஸ்திரமான குடியிருப்பின்றி ஊரூராய் அலைந்துதிரியும் ஒருவகைஜாதிப் பெண்டுகள். பார், அந்த ஸ்திரியை. தலையில் ஒரு மூட்டை, இடையில் ஒருபெட்டி, கையில் ஒரு பொட்டணம். அத்தனையும் தூக்கிக்கொண்டு அந்த ஸ்திரி நடந்து போவதைப் பார்." என்றார்.

அதைக்கேட்ட வண்டிக்காரன். "இல்லை ஐயா, அவர்கள் நம்ம செட்டியவீட்டு ஆச்சிமார்தான். தீர்த்தயாத்திரை போய்த் திரும்பி வாருக" என்று சொன்னான்.

சோமசுந்தரம் நன்றாய் உற்றுப் பார்த்துவிட்டு "ஆமாம் சொக்கா, நீ சொன்னது தப்பு. அவர்கள் நமது செட்டியப் பெண்கள்தான். அவர்களை நீ குடியிருப்பின்றி ஊருக்கூர் அலைந்து திரியும் ஜாதிப்பெண்கள் என்று கூறினையே. மண்டு!" என்றார்.

சொக்கநாதன்.—"அவர்களைத் தூரத்திலே பார்த்தவுடனே யாரென்று எனக்குத் தெரிந்துவிட்டது. ஆனல்

வேண்டுமென்று தான் அவர்களை அலைந்துதிரியும் ஜாதிப் பெண்கள் என்று சொன்னேன். அப்படிச் சொன்னது உனக்கு விபரீதமாக, அல்லது வேடிக்கையாகத் தோன்றினால் நீ என்னிடம் அதற்குக் காரணம் கேட்க வேண்டும்''

சோமசுந்தரம்.—"சரி, அந்தக் காரணத்தை சொல்லு பார்க்கலாம்."

சோக்கநாதன்.—"அட மண்டு! நான் காரணம் சொன்னால் நீ அதைக் கேட்கலாமே தவிர பார்க்கமுடியாது. ஆனால் கேள். இந்தப் பெண்கள் தலையிலும், தோளிலும் இடையிலும், கையிலுமாக மூட்டைகளைத் தூக்கிக்கொண்டு ஊருக்கூர் போகிறார்கள்.

நான் முன் குறிப்பிட்ட ஜாதிப்பெண்களும் அப்படிப் போவதை நீ பார்த்திருப்பாய். அவர்கள் ஆண்துணையில்லாமல் ஊரூராக அலைந்து திரிவார்கள்.

இந்த நாட்டுக்கோட்டைப் பெண்களும் அப்படியே ஆண்துணை யில்லாமலும் "துணையோடல்லது நெடுவழி போகேல்" என்பதைச் சிறிதும் கவனியாமலும் பலவிடங்கள் சென்று வருகின்றனர். வேறெந்த வகுப்புப்பெண்களும் இப்படி நடந்து கொள்ளுகின்றனரா? இல்லையே. நாலாயிரம் அல்லது ஐயாயிரம் ரூபா ஆஸ்தியுள்ள இதர வகுப்புப் பெண்கள் எவ்வளவு கட்டாகவும் மெட்டாகவும் நடந்து கொள்ளுகிறார்கள் என்பதை எண்ணிப்பார். தீர்த்தயாத்திரை என்றாலென்ன இப்படியெல்லாம் அலைந்து திரிவதா? கங்கை, காவேரி முதலிய நதிகளில் சதா வசித்துக்கொண்டிருக்கிற மச்சம், தவளை, பாம்பு முதலியனவெல்லாம் மோட்சமடைந்து விட்டனவா?

'மூர்த்திதலம் தீர்த்தம் முறையாய்த் தொடங்கின

ர்க்கு வார்த்தை சொல்ல சற்குருவும் வாய்க்கும் பராபரமே”
என்ற மேலோர் வாக்குப்படி முறையோடல்லவா யாத்தி
ரைசெய்தல் வேண்டும்? அதற்குமாருக சில கார்பார் ஆச்சி
கள் ஏற்பட்டு சுமார் ஒரு டசன் இரண்டுடசன் பெண்களைச்
சேர்த்துக்கொண்டு யாத்திரை போகிறார்கள். ரயில்ஸ்டே
ஷன்களில் இவர்கள் டிக்கட் வாங்கப்படுகிற இக்கட்டுக
ளும் அவஸ்தையும், ரயில்வேக்காரரும், அற்பக் கூலிக்கார
ரும் கூட இவர்களை நடத்துகிற பான்மையும், தூரவிடங்
களில் அபாயம் நேர்ந்துவிட்டால் இவர்கள் படுகிற பரிதாப
மும் சொல்லத்தரமில்லை. இவர்களுடன் செல்லும் வாலிபப்
பெண்கள் இன்னும் அதிகமான அவஸ்தைகளுக்கு உள்ளா
கின்றனர்.

“தெய்வந் தொழாஅள் கொழுநர்த் தொழுதெழுவாள்,
“பெய்யெனப் பெய்யு மழை”

என்றார் பெரியார். அப்படியிருக்க புருஷர் துணையின்றி
இந்தப் பெண்கள் யாத்திரைபோவது சரியாகுமா? நிற்க
வழியில் எங்கேனும் சாமான்களைக் கண்டுவிட்டால், பின்னர்
அவைகளை வாங்கி மூட்டைகட்டிக் கொள்ளாமல் அவ்வி
டம் விட்டு பெயரமாட்டார்கள். மைசூரிலிருந்து மண்சட்டி
பானைவாங்கி வருகிறார்களே. அதனால் புருஷர்களுக்கு
எவ்வளவு அவமானம் உண்டாகிறதென்று பார். அடக்கம்,
அறிவு சிறிதேனு மில்லையே. புருஷர்கள் வருடக்கணக்கில்
பிரிந்து போய்விடுவதால் பட்டிமாடுகள் போல வெளிக்
கிளம்பி விடுகின்றனர். போகுமிடங்களிலும் மரியாதை
யுடன் நடந்து கொள்ளுவதில்லை. இவர்கள் முன்ஜன்மத்தில்
மலையாளத்திலே பிறந்திருந்தார்களோ என்னவோ தெரி
யாது, உடம்பு மறைய அலங்காரமாக சேலை உடுத்திக்கொ

ள்ள, இந்தப் பெண்களுக்கு இஷ்டமிருக்கிறதில்லை. இப்பொழுது சிறுபெண்கள் ரவிக்கைபோட ஆரம்பித்திருப்பதைப்பற்றி சந்தோஷமடையவேண்டும். இப்படிப்பட்ட அலங்கோலத்தில்தான் இவர்கள் ஊரூராகத் திரிகின்றனர். ஒரு சமயம் இவ்வித பெண்படை ஒன்று தீர்த்தயாத்திரையாய் ஸ்ரீ காசிக்குச்சென்றிருந்தபொழுது, அங்குள்ள நகரசத்திரத்தில் அவர்கள் தலைக்கு வைத்துறங்க தலையணைகள் கொடுப்பட் டிருந்தனவாம். அந்தப்பெண்மணிகள் அந்த தலையணை உரைகளையெல்லாம் கழற்றி அவற்றில் அங்குகாயவைத்திருந்த அவரை வத்தலையள்ளி மூட்டை கட்டிக்கொண்டு வீடுதிரும்பினார்களாம்! அதுமுதல் தலையணை கொடுப்பதை சத்திரக்காரர் நிறுத்திவிட்டார்கள் என்றும் தெரிகிறது. ஆகையால் இந்தப் பெண்களைப்பற்றி நான் சொன்னது குற்றமா?

சோமசுந்தரம்.—“நீ சொல்வது முற்றிலும் நியாயந்தான். இந்த மாதிரி வழக்கங்கள் நம்மவர்களுக்கு பெருமை தருவனவல்ல. பெண்களுக்குக் கல்வியில்லாததுதான் இதற்கெல்லாம் காரணம். இந்த வழக்கத்தை துரிதத்தில் நிறுத்த வேண்டும்.”

சோக்கநாதன்.—“இந்தப் பெண்கள் இவ்வளவெல்லாம் அவஸ்தைப் பட்டுக் கொண்டு இம்மாதிரித் தீர்த்தயாத்திரை செய்வதால் என்ன பிரயோஜனத்தை அடையப் போகிறார்களோ எனக்கு விளங்கவில்லை.”

சோமசுந்தரம்.—“இவர்கள் தீர்த்தயாத்திரை செய்வது, எங்களூர்ப்பெண்கள் காவேரிப் புராணம் கேட்பது போலத்தானிருக்கும்.”

சோக்கநாதன்.—"உங்களூர் பெண்கள் காவேரிப் புரா ணம் கேட்பது போலவா! அந்த விஷயம் ரசமாயிருக்கும் போலிருக்கிறது. தயவுசெய்து விவரமாகச் சொல்லு."

சோமசுந்தரம்.—"எங்களூரில் காலா காலங்களில், அர்ப்பசி மீத்தில், காவேரிப் புராணம் படிப்பதுண்டு. ஸ்திரீகளெல்லாம் ஆற்றுக்கு போய்வந்து வெகு உற்சாகத் துடன் போய்க் கூடுவார்கள். புராணம் படிக்கும் பிராமணன் வந்து புஸ்தகத்தை திறந்து வைத்துக் கொண்டு ராக மிழுத்து வாசித்துக்கொண்டிருப்பார். யார் தக்ஷிணைகொண்டு வருகிறார்களென்பதைக் கவனிக்க, அவருடைய கண்கள் அங்குமிங்கும் அலைந்து கொண்டிருக்கு மாதலால், அவர் புஸ்தகத்தைப் பார்த்து வாசிப்பதாய்ச் சொல்ல முடியாது. தமது ஞாபகத்திலுள்ள கதையையே சொல்லுவாரென்று தோன்றுகிறது. அப்படிச்சொல்லிக்கொண்டிருக்கும் பொழுது ஒரு ஸ்திரீ அரிசி, பருப்பு, புளி, புடலங்காய்களை தக்ஷிணையாகக் கொண்டுவருவாள். பாகவதர் உடனே கதையை நிறுத்திவிட்டு "அந்தப் புடலங்காய் அரிசி, பருப்பு, புளிகளை வாங்கி அப்படிவை" என்று தாம் கூட்டி வந்திருக்கும் தமது பையனிடம் சொன்னபின்பு கதையை நடத்துவார். இதற்குள் இன்னொரு பெண் ஒரு தட்டில் சில கத்திரிக்காய்களும், வெற்றிலையும் கொண்டு வருவாள். அதைக் கண்டவுடன் மீண்டும் கதையை நிறுத்தி, "அடே கத்தரிக்காயை அந்தப் பெட்டியில்போடு, வெற்றிலையை இப்படிவை" என்று தமது பையனிடம் சொல்வார். அப்படி சொல்லி முடிந்த பின்புதான் கதையைத் தொடருவார். அந்தச் சமயத்தில் இரண்டு மூன்று ஸ்திரீகள் தக்ஷிணைகளுடன் வந்து சேர்வார்கள். அவர்கள் கொண்டுவந்த சாமன்

களையெல்லாம் வாங்கிப் பத்திரப் படுத்தும் மட்டும் கதை மறுபடியும் நிறுத்தப்படும்.

அவர் இடையிடையே "பருப்புக் கொடுத்தால் பரலோகம், புளிகொடுத்தால் பூலோகம், அரிசி கொடுத்தால் அநந்தலோகம்" என்றும் சொல்லிக்கொள்வார். இதைக் கேட்கிற ஸ்திரீகளும், பரலோகத்தையும் பூலோகத்தையும் அனந்தலோகத்தையும் ஒருங்கே யடையும்படி பருப்பு, புளி, அரிசி முதலியவைகளைத் தாராளமாய்க் கொண்டு போய்க் கொடுப்பார்கள். இப்படி கொடுக்கப்படும் அரிசி காய்கறிகள் ஒரு குடும்பத்துக்கு 10 மாதச்சாப்பாட்டுக்குப் போதிய அளவு இருக்கும்.

ஒவ்வொரு ஸ்திரீயும் தக்ஷிணைகளைக்கொண்டு வரும் பொழுதெல்லாம் அதற்கு மரியாதையாக கதையும் நிறுத்தப்படும். அந்த நிறுத்துதல்களைக்கடந்து கதை எவ்வளவு தூரம் நடைபெறுமோ, அது ஈசனுக்குத்தான் வெளிச்சம். இதையறியும்படி நான் ஸ்திரீகளில் சிலரை விசாரித்தேன். நான் முதலில் கேட்ட இரண்டுபேர் தங்களுக்குத் தெரியாதென்றும், அடுத்தவீட்டு அரிய நாயகிக்குத் தெரியுமென்றும் சொன்னார்கள். அரியநாயகியிடம் கேட்க, அந்தஆச்சி எதிர்வீட்டுக் கண்ணம்மாளுக்குத் தெரியுமென்றாள். கண்ணம்மாள், விசாலாக்ஷிக்குத் தெரியுமென்று கூற, விசாலாக்ஷி, உமையாளுக்குத் தெரியுமென்றாள். உமையாளைக் கேட்டதில் அவள் சிட்டாள் என்ற கார்பார் ஆச்சியிடம் சென்று விசாரிக்கச் சொன்னாள். எனக்கு மனஞ்சலித்து இந்த ஒரு ஆளையும் கேட்டுவிட்டு, அதோடு விசாரணையை நிறுத்தி விடுகிறதென்று தீர்மானித்து அந்த ஆச்சியிடம், சென்றேன். அந்த ஆச்சியைக் கேட்டதில் அவள்

சொல்லுவாள்:—"எல்லாரும் காவேரிப் புராணங்கேட்கப் போகிறார்களே என்று ஒப்புக்கு நானும் போறதுதான். போய் காய்கறி தக்ஷிணைகொடுத்திட்டு, ஐயர் புராணம்படிப் பார், கேட்டுக்கிண்ணு நிண்ணிட்டுவாரது. அப்படிப்போகா ட்ட, யார்வரவில்லே என்று தெரிந்து அவளுக்கென்ன கண் ணுதெரியாதாக்கும் எண்ணு வசவுகிடைக்கும். அதற்காகப் போறது. கதை, படிச்சவளுக்குத் தெரியும். எனக்கெப் படித் தெரியும்" என்றாள். அவர் சொல்வதிலே ஏதாவது விளங்குமாவென்றுகேட்க, "அதெல்லாம் நினைவிலே இரு க்குதா? ஐயர் ராகமிழுத்து என்னமோ படிப்பாரு, அதைச் சற்றே கேட்டுக்கிண்ணு இருந்திட்டு வாறது. கதை தெரி யாது" என்று அந்த ஆச்சி சொன்னாள். அன்றுதான் எங்க ளூர்ப்பெண்கள் காவேரிப் புராணங்கேட்கும் லட்சணத்தை அறிந்தேன். அதேமாதிரித்தான் இருக்கும் இவர்கள் புராதீனக் கட்டுப்பாட்டைமீறி தீர்த்த யாத்திரை செல்கிற லட்சணமும்."

சொக்கநாதன்.—"ஆட்சேபணையில்லாமல்."

இதற்குள் வண்டி காரைக்குடியை சமீபித்து விட் டது. அப்பொழுது எதிர்ப்பக்கமிருந்து செந்தூளெழுப் பிக்கொண்டு, இறைச்சலுடன் ஒரு மோட்டார் இரதம் வந்தது. அது சமீபத்தில் வந்ததும். "சொக்கா, அதில் போகிறவர் யாரென்று பார்" என்று சோமசுந்தரம் கூற, "எனக்குப் பார்க்க இஷ்டமில்லே" யென்றுசொல்லி சொக்க நாதன் மறுபக்கம் முகத்தைத்திருப்பிக்கொண்டார். சோம சுந்தரம் மோட்டார் இரதத்தை உற்றுநோக்கினார். மறு கணத்தில் அது அவர்கள் வண்டியை கடந்து சென்று, செந்தூள் படலத்தில் மறைந்தது.

"என் சொக்கா, நீ அந்த மோட்டர் இரதத்தில் போகிறவரை பார்க்க மறுத்தாய்?" என்று சோமசுந்தரம் கேட்டார்.

சொக்கநாதன் —"காரணமுண்டு. நீ பார்த்தாயல்லவா என்ன கண்டாய்?"

சோமசுந்தரம்.—"உள்ளே நாட்டுக்கோட்டையார் ஒருவர் இருப்பதைக் கண்டேன். அவர் யார்? உனக்கும் அவருக்கும் விரோதமுண்டோ?"

சொக்கநாதன்.—"விரோதமுமில்லை; குரோதமுமில்லை. அதற்காகவல்ல நான் பார்க்கமாட்டே னென்றது. காரணம் வேறு. சொல்லுகிறேன். நீ பார்த்தபொழுது அவர் என்ன செய்தாரென்று கவனித்தாயா?

சோமசுந்தரம்.—"நான் பார்த்தபொழுது அவர் உட்கார்ந்திருந்தார். வேறொன்றும் செய்யவில்லையே."

சொக்கநாதன்.—"நீ பார்த்தபொழுது அவர் கால் மேல் காலைத்தூக்கிப்போட்டு விறைப்பாய் உட்கார்ந்து கொண்டு உன்னை முறைத்துப் பார்க்க வில்லையா?"

சோமசுந்தரம்.—"ஆமாம், நீ சொன்ன பிறகு ஞாபகம் வருகிறது. நான் பார்த்தவுடனே அவர் ஒரு காலைத்தூக்கி மற்றக் காலின்மேல் போட்டுக்கொண்டு நிமிர்ந்து உட்கார்ந்து என்னைக் கூர்ந்து பார்த்ததாகத் தெரிந்தது. அதிலேதும் ரகசியமுண்டோ? விபரமாய் கூறு."

சொக்கநாதன்.—"இந்த மாதிரி ஆட்கள், மோட்டார் இரதமேறிப் போகையில் நம்மைப்போன்றவர்கள் பார்த்து விட்டால் அப்பொழுதுதான் கால்மேல் கால்தூக்கிப்போட்டுக்கொண்டு, மிகவும் இருமாப்பாக உட்கார்ந்துகொண்டு, 'என்னையும் பாருங்கள் என் பவிஷையும் பாருங்கள்'

என்று சொல்வதுபோல நமது பக்கமாய் ஒரு "ஷோக்" பார்வை பார்ப்பார்கள். அப்படிப் பார்ப்பதற்கு அர்த்தமென்னவென்றால், அவர்கள் மோட்டார் இரதத்தில் அவ்வளவு பெருமையுடன் பிரயாணம் செய்கிறதாகவும், நம்போன்றவர்கள் அதைக்கண்டு வியப்படைந்து அவர்களைப் புகழவேண்டுமென்பதுமே. இவர் தகப்பனார் மழை வெய்யலுக்குக் குடையும், காலுக்குச் செருப்புமில்லாமல் கஷ்டப்பட்டு பைசாபைசாவாகச் சேர்த்து பணம் சம்பாதித்தார். இவரோ மோட்டார் இரதமும் வலியவரும் சிநேகிதரும் இல்லாமல், வெளிக் கிளம்புவதில்லை. நலம்பெறநடந்து, நன்மையான விஷயங்களில் செலவிடாதார் செல்வமெல்லாம் போனவிடந் தெரியாமல் போய்விடுமென்பதை, பெரியார் நேசமும், சாஸ்திர அறிவுமில்லாத இந்த சபலைகள் அறிவதில்லை. செல்வம் என்றாலே செல்வோம் என்றே பொருள்படுகிறது.

" குடைநிழலிருந்து குஞ்சரமூர்ந்தோர்
நடைமெலிந்தோரூர் நண்ணினும் நண்ணுவர்"

" அரத்திடுபிச்சை கூவியிரப்போர்
அரசோடிருந்தரசாளினு மாளுவர்"

என்பதை இந்தப் பேதைகள் எண்ணிப் பார்ப்பதில்லை. அதற்காகத்தான் நான் வேறுபக்கமாய் முகத்தைத் திருப்பிக்கொண்டேன். இம்மாதிரி 'தலைவீக்கம்' நம் நாட்டில் பொருளாளர் சிலருக்குத் தோன்றியிருக்கிறது."

சோமசுந்தரம்.—" அப்படியா விஷயம். நீ ஒவ்வொரு காரியத்தையும் வெகு நுட்பதிட்பமாய் ஆராய்ச்சி செய்து வைத்திருக்கிறாய். இதெல்லாம் கல்விப்பஞ்சத்தினாலேற்

பட்ட பலன் என்றே சொல்லவேண்டும். கல்வியினால் ஞானச் சுடர்கொளுத்தப்படாத மனதில் வீண்பெருமை, அற்ப சந்தோஷம் முதலியன குடி கொண்டிருப்பது இயல்பு தானே.''

இவ்வாறு சம்பாஷித்துக் கொண்டே அவர்கள் காரைக்குடி போய்ச் சேர்ந்தார்கள்.



## பதிமூன்றுவது அத்தியாயம்



### களவின் வரலாறு



அன்று பிற்பகல் சொக்கநாதன் வீட்டு மேல்மாடியில், சொக்கநாதனும் சோமசுந்தரமும் உட்கார்ந்து பேசிக் கொண்டிருக்கையில், யாரோ ஒருவர் சோமசுந்தரத்தைத் தேடி வந்திருப்பதாக, ஆள் வந்து சொல்ல, இருவரும் கீழே போய்ப் பார்த்தபொழுது, அங்கு பத்மநாதன் உட்கார்ந்திருப்பதைக் கண்டு ஆச்சரியமடைந்தனர்.

அவர்களுடைய ஆச்சரியத்தைக்கண்டு பத்மநாதன் புன்னகை செய்து, "நீங்கள் என்னை இங்கே காண்பதாய் எதிர் பார்க்கவில்லை யல்லவா??' என்று வினவினர்.

சோமசுந்தரம்.— "இல்லை. நீங்கள் இங்கு என்ன அலுவலாய் வந்திருக்கிறீர்கள்? நான் இங்குவந்திருப்பதை எப்படி அறிந்தீர்கள்?''

பத்மநாதன்.— "நீங்கள் வண்டியில் வந்து இந்தவீட்டிலிறங்கினதைக்கண்டு வந்தேன். எனக்கு பதக்கக்களவு விஷயமாய் இவ்விடத்தில் விசாரணைசெய்யவேண்டியிருக்கிறது.''

சோமசுந்திரம்.—"காவல்காரருக்கு பணம் கொடுப்பதை நிறுத்தி அவர்களுடைய விசாரணையை நிறுத்தி விடும்படி புதுக்கோட்டையிலிருந்து நீங்கள் கடிதம் அனுப்பினபின் வேறொரு விஷயமும் எங்களுக்குத் தெரியவேயில்லை. தகப்பனார் இரண்டொரு தடவை கேட்டார். நான் 'விசாரணை செய்து கொண்டிருப்பார். எதற்கும் சிலநாட்கள் காத்திருந்து பார்க்கவேண்டுமென்று சொல்லிவிட்டேன். ஆகையால் உங்களுடைய விசாரணை தற்சமயம் எம்மட்டிலிருக்கிறதென்று தயவுசெய்து சொல்லவேண்டும்."

பத்மநாதன்.—"நான் செவல்பட்டிக்கு வந்து உங்களைக் கண்டது முதல் பலநாட்கள் அங்கு தங்கியிருந்தேன். நான் உருமாறி யிருந்தமையால் நீங்கள் தெரிந்துகொள்ளவில்லை. தாமோதர சுவாமி என்றொரு சாமியார் அங்கு வந்திருந்தது உங்களுக்கு ஞாபக மிருக்கலாம். அந்தச் சாமியார் நானே. அந்த வேஷத்தில் நான்பல காரியங்களைக் கண்டுணர்ந்தேன். சில பாதகங்களை விலக்கினேன். உங்கள் வீட்டு வேலைக்காரன் சுப்பய்யாவின் மேல் முதல் நாளிருந்தே எனக்குச் சந்தேகம். உங்கள் வீட்டையும் களவு நடந்த யிடத்தையும் பார்த்தபின் உள்துப்பில்லாமல் களவு நடந்திருக்க முடியாது என்ற நிச்சயம் எனக்கு உண்டாயிற்று. இந்த உள்துப்பு யாரால் கொடுக்கப்பட்டிருக்கு மென்று அறியும்படி பரதேசி வேஷம் பூண்டு உங்கள் வீட்டுக்கு வந்து கவனித்ததில் சுப்பையாவுக்கு வீட்டில் பூரண அதிகாரமிருப்பதாய்த் தெரிந்தது. அன்றியும் அவன் வெகு சாக்கிரதைக்காரனென்றும் காணப்பட்டது. அவ்வளவு கவலையுள்ள வேலைக்காரன் இருக்கையில் வீட்டுக் கதவுதிறந்துகிடக்கவிட்டிருப்பானு என்ற எண்ணம் உண்டாயிற்று.

ஆனால் சாக்கிரதையுள்ளவனென்றால் ஒருபொழுதும் தவற மாட்டானென்று அர்த்தமா? ஒருவேளை அவசரத்தில், தூக்கமயக்கத்தால், கவனிக்காமல் போயிருக்கலாம். ஆகை யால் அந்த சம்சயத்தை வேறு சாட்சியம் கிடைக்கும் வரை யில் நிறுத்திவைக்க வேண்டியதாயிற்று. அதுவுமன்றி குழந்தை வீறிட்டலறிக்கொண்டிருந்தும் தாய் விழிக்கா மல் தூங்கினுளென்பதும், மற்ற ஸ்திரிகள் வந்து தட்டி யெழுப்பின பிறகுதான் விழித்தெழுந்தா ளென்பதும் என் கவனத்தைக் கவர்ந்தது. அது இயற்கைத்தூக்கமோ, செயற் கையாய் வருவிக்கப்பட்டதோ என்று சந்தேகம் உண்டா யிற்று. எனவே இவ்விஷயமாய் ஆராய்ச்சி செய்யவேண்டி யது அவசியமாயிற்று. அதற்காக எளிய கூலிக்காரனைப் போல் வேஷமாறி அங்கு செட்டியார் வீட்டுக்கலியாணத் தைப்பற்றி யாராருக்கு விபரந்தெரியுமோ அவர்களிடமெல் லாம் விசாரணை செய்தேன். நான் கேட்ட இரண்டாவது ஆளிடமிருந்தே, காலட்சேபத்துக்குப் பலகாரம் செய்ய இரண்டு புதிய சமயல்காரர் நியமிக்கப்பட்டதாயும், அதற் காக ஏற்கனவே வேலைசெய்து கொண்டிருந்த இருவர் நீக் கப்பட்டதாகவும் கேள்விப்பட்டு, அப்படி நீக்கப்பட்ட வே லைக்காரர்களி லொருவனைக் கண்டுபிடித்து அன்று புதிதாய் சுப்பையா கொண்டுவந்த சமயல்காரரின் ஊர் பெயர் என்ன வென்று கேட்க, அவன் அந்த இருவரையும் சுப்பய்யாவை யும்பற்றி தனது அபிப்பிராயத்தை ஆபாசவார்த்தைகளில் வெளியிட்ட பின்னர், அவர்களின் ஊர்பெயர்களைத் தெரி வித்தான். அதன்பின் நான் சுவாமியார் வேஷம்பூண்டு ஷை இரண்டு புதியசமயல்காரரையும் தேடிக்கண்டுபிடித்து, அவ்விருவரில் கோழைநெஞ்சனாகத் தோன்றினவனைத்

தொடர்ந்து சென்று "அப்பா, இராத்திரிக்கு உன் வீட்டில் தங்க இடந்தருவாயா?" என்று கேட்டேன். அவன் சம்மதித்தான். நான் அவன் வீட்டு வெளித்திண்ணையில் படுத்துக்கொண்டேன். நடுராத்திரியில் அவனைக்கூப்பிட்டு விளக்கேற்றச்சொல்லி விபூதியை அள்ளி அவன் கையில் கொடுத்து வெகு கூர்மையாய் அவனை ஓர் பார்வை பார்த்துவிட்டு "அடே, நீ நல்லவன்போல் தோன்றுகிறாய். ஆனால் அன்று செவல்பட்டி முத்துக்கருப்பன் செட்டியார் வீட்டில் செய்த பலகாரத்தில் வசநாபி கலந்தது நீதானல்லவா?" என்று திடீரென்று கேட்டேன். அவன் பயந்து மேலுங்கீழும் பார்த்துக்கொண்டு "வசநாபி இல்லை சாமி, சும்மா மயக்க மருந்தென்று சுப்பய்யாதான் கொண்டுவந்து காபியில் போட்டான்" என்று உண்மையைச்சொல்லி என் காலில் சாஷ்டாங்கமாய் விழுந்து, தனக்கு மோசம் வாராமல் காப்பாற்றவேண்டுமென்றான். அதன்பின் சுப்பய்யாவின் நடவடிக்கைகளை கவனிக்கலானேன்"

என்று முந்தின அத்தியாயத்தில் கண்டவிபரங்களையும், காவல்காரர் கையிலிருந்து தான் ஒரு மனிதனை மீட்ட விஷயத்தையும் கூறிப் பின்னும் சொல்லுகிறார்— "இங்குள்ள இராமசுவாமி ஐயரிடம் ஷை பதக்கம் வந்திருப்பதாக அறிந்து இவ்விடம் வந்திருக்கிறேன். இனி செய்து முடிக்க வேண்டியதுதான் அதிமுக்கியமான வேலை. சாதாரணப் போலீசாருக்கு இவ்வளவு தெரிந்தால் உடனே சுப்பய்யாவையும் அவன் தம்பியையும் இந்த இராமசுவாமி ஐயரையும் பிடித்துக் கொண்டுபோய் உதையும் குத்தும் விட்டு உளவு விசாரிப்பார்கள். அது நாகரீகமான முறையல்ல. ஒருவன் குற்றவாளி என்று சம்சயமுண்டானால்

அவன் மேலுள்ள குற்றத்தை யுக்தியால் அறிந்து, நியாயப் படி ரூபகாரஞ்செய்து, அதன்பின் சட்டப்படி தண்டிக்க வேண்டுமேயன்றி, இடையில் மிருகத்தனமாய் அவனை அடித்து இம்சிப்பது தர்மமல்ல'' என்று கூறினார்.

சோமசுந்தரம் சற்றுநேரம் யோசித்துக் கொண்டிருந்து விட்டு ''சுப்பய்யா பழகின திருடன் என்று நினைக்கிறேன். இதற்குமுன் பலதடவைகளில் பல நகைகளும் சாமான்களும் தவறிப்போயின. அவைகளின் விலை சொற்பமானதால் அவை எப்படித் தவறினவென்று நாங்கள் முயற்சியெடுத்து விசாரிக்கவில்லை. அவைகளையும் சுப்பய்யாவே எடுத்திருக்கக் கூடுமென்று இப்பொழுது எனக்குத் தோன்றுகிறது'' என்றார்.

''அப்படி நடந்திருக்கலாம்'' என்றார் பத்மநாதன்.



## பதினான்காவது அத்தியாயம்



### கல்வி யறிவில்லாத மனைவி



கல்வியும், நற்குணமும் வாய்ந்த மனைவியை அடைந்த கணவனே பாக்கியவான். சிறந்த நவரத்தினங்களும் அவளுக்கு ஒப்பாகா. அவள் உடை உறுதியும் அலங்காரமுமாயிருக்கிறது. அங்கங்கள் மறைய அழகாய் ஆடை அணிந்திருக்கிறாள். அவள் தன் வாயைத்திறந்து மதுரமான வார்த்தைகளிலே பேசுகின்றனள். யுக்தியான ஆலோசனைகளை அவளுடைய உதடுகள் வெளிப்படுத்துகின்றன. காலையிலே எழுந்து

காலந்தவருமல் கணவனுக்கு ஆகாரம் கொடுக்கிருள். அவள் வீட்டார் சாப்பாட்டை எதிர் பார்த்துக்கொண்டு பல நாழிகை நேரம் பசியோடு காத்திருக்க வேண்டியதில்லை. அவள் பகலில் தூங்குவதில்லை. பக்கத்து வீட்டில் புறணிபேசச் செல்வதுமில்லை. தன் வீட்டைப் பிரகாசமாயும், சுத்தமாயும் வைத்துக் கொள்வதிலேயே கண்ணுயிருக்கிருள். ஏழைகளுக்கு இரங்கி, இடுக்கண் பட்டவர்களை ஆதரிக்க அவன்மனம் முந்துகிறது. அவள் புருஷன் தேசத்தலைவர்கள் மத்தியிலே சிறப்புடன் விளங்குகிருன். அவள் பிள்ளைகள் எழும்பி தேசத்தின் முன்னணிகளிலே நிற்கிருர்கள். இளமையில் அவர்களின் தாய் ஊட்டிய போதனைகள் தேசகாரியங்கள் கொந்தளித்து நிற்கும் வேளையில் அவர்களுக்கு பலத்த அரண்போலிருக்கின்றன. அவள் உயிரோடிருக்கிற நாளெல்லாம், தன் கணவனுக்கு தீமையையல்ல, நன்மையையே செய்கிருள். கணவனுக்கு மாத்திரமல்ல அந்தக் குடும்பத்துக்கும், அந்த சமூகத்துக்கும்—ஏன், தேசத்துக்குங்கூட, நன்மையையே செய்கிருள். இத்தகைய ஸ்திரிகளைப்பெற்ற சமூகமே தேசத்தின் முன்னணிகளிலே நிற்கிறது.

இவ்வித இலக்கணங்களமைந்த பெண்களைப்பெருத ஓர் ஜனத்திரள் முன்னேற்ற ஓட்டத்திலே பின்தாங்கி நிற்பதை நாம் பார்க்கலாம். கல்வியறிவில்லாத ஸ்திரீகளால் வீட்டிலும், நாட்டிலும் சிறப்பு பெருக மாட்டாது. கல்வியறிவில்லாமல், இயற்கையறிவுமில்லாமல், இல்லறம் நடாத்துவதற்கு வேண்டிய எவ்வித பக்குவமுமில்லாமல் வெறும் பெண்ணுருவம் மாத்திரம் தாங்கிநிற்கும் பேதைகளை கடிமணம்புரியும் கணவன்மார் படுங் கஷ்டங்கள் அனந்தம்.

உண்மையாகவே அவர்கள்நிலைமை பரிதபிக்கப்படத் தக்கது. இப்படிப்பட்ட ஓர் குடும்பம் இந்தக் கதையில் சம்பந்தப்படுகிறபடியால் அவர்களின் சரித்திரத்தை இங்கே விவரிப்போம்.

காரைக்குடிக்கு சமீபத்தில் நாகநாதபுரம் என்று ஒரு ஊர் இருக்கிறது. இந்த ஊரின் தென்பாரிசத்திலே ஒரு நாலுகட்டு மாடிவீடு நிற்கிறது. அதன் மேற்கோபுரங்களும், பலவர்ணம் பூசின பலகணிகளும் பார்ப்போர் ஆச்சரிப்படத்தக்கவை. அது மெ. நா. கதிரேசன் செட்டியார் வீடு. "இடம்பட வீடிடேல்" என்ற ஒளவை மொழிக்கு முற்றும்மாருக, முற்றத்துக்கும், பின் கொல்லைக்கும் போதுமான இடமின்றி, மிக விசாலமாய்க் கட்டப்பட்டிருந்தது. முதலாவது, இரண்டாவது கட்டுகளிலுள்ள அறைகளில் ஒருவருக்கும் பிரயோஜனப்படாத வெண்கல பாத்திரம், ஜாடி, ஜமுக்காளம், பாய், தலையணை முதலிய சாமான்கள் நிறைத்து வைக்கப்பட்டிருந்தன. வீட்டு ஜனங்கள் இவ்விரண்டு கட்டுகளிலும் அதிகமாகப் புளங்குவதில்லை. அனேகமாய் எல்லாரும் மூன்றுங்கட்டிலேயே இருப்பார்கள் அந்த வீடு வெளிப் பார்வைக்கு மனோகரமாய்த்தோன்றினுலும் வீட்டுக்குள் குடியிருப்பதற்கு சௌகரியமான வசதிகள் அமைக்கப்பட்டிருக்கவில்லை. அதில் வாழ்ந்த அங்கனைகளும் கல்வி வாசனையற்றவர்களானதால் வீட்டைச் சிறப்பிக்கவோ, பிரகாசிப்பிக்கவோ அவர்களால் முடியவில்லை. அவ்விஷயமாய் அவர்கள் எண்ணவுமில்லை.

கதிரேசன் செட்டியார் தமிழ் நன்ருய் வாசித்தவர். வேதாந்த சித்தாந்தங்களில் நல்லஞானம் உண்டு. சமய பேதங்கடந்த சாந்தகுணம் படைத்தவர். ஆனல் இவ

ருக்கு வாய்த்திருந்த இல்லறத்துணைவியோ அதற்கு முற்றும் எதிரிடையான குணங்களை படைத்தவள். இல்லாளாக வந்த அவள் அறிவும் நற்குணமும் இல்லாதவளாகவே யிருந்தாள். அமராவதி என்பது அவளது திருநாமம். கல்வியற்றவள் என்று நாம் குறிப்பிட்டுச் சொல்ல வேண்டுவதில்லை. பெண் கல்வியென்பதே நூதனப்பேச்சாயிருக்கும் நம் நாட்டிலே கல்லாமைதான் பெண்களின் பிறப்புரிமை என்பதை எல்லாரும் நன்ருய் அறிவார்கள். இதோடு அமராவதிக்கு இயற்கையறிவும் சொற்பந்தான். அவ்வீட்டிலுள்ள மற்றஸ்திரி ஜனங்களும் அவளுக்கு ஒருவாறு ஈடுஜோடாய் நிற்கக் கூடியவர்களா யிருந்தார்கள். அதனுல் அவ்வீட்டில்-வீட்டில் என்று சொல்லுவது திட்டமாயில்லை வீட்டின் மூன்ருங்கட்டில் என்றே சொல்ல வேண்டும்—அவ்வீட்டின் மூன்ருங் கட்டில் சண்டை சச்சரவுகளும், அவதூறு வழக்குகளும், மான நஷ்ட தாவாக்களும் அடிக்கடி வம்பர் சபையில் விசாரணைக்கு வந்துகொண்டேயிருக்கும். கதிரேசன் செட்டியார் அப்படிப்பட்ட வழக்குகளில் தலையிட்டு முடிவு செய்வது சாத்தியமான காரியமல்ல. இரண்டொரு தடவைகளில் அவர் அப்படி தலையிட எத்தனித்தபொழுது அமராவதி பிரசன்னமாகி சொல்லலங்காரம் பொருளலங்காரங்களுடன் பிரசங்கம் பண்ண ஆரம்பிக்கவே அதற்கு எதிர் நிற்க மாட்டாமல் அவர் இளைத்துப் பின்வாங்கி விட்டதாகவும் அண்டை வீட்டார் சொல்லிக்கொள்வதுண்டு. அமராவதி தனது திருவாயைத் திறந்தாளேயாமாயின் கர்ணகடூரமான வசனங்களே வெளிப்படும். மறந்தேனும் மதுரமாக வசனிக்க அவளுக்குத் தெரியவே தெரியாது. கல்வியிருந்தா

லல்லவா மதுர சம்பாஷணையும், மனோகரமான வசனங்க ளும் உண்டாகும்? நிற்க,

அமராவதியின் சிக்கன முறைகள் வெகு வேடிக்கை யானவை. சமயலுக்காக காய்கறி பதார்த்தங்கள் வாங்கி வந்தால், அவற்றில் நல்லவைகளை எல்லாம் தெரிந்தெடுத்து சன்னலில்லாத ஒரு அறைக்குள் வைத்துப் பூட்டிவிட்டு, சொத்தையானவைகளையும், அழுகி யிருக்கிறவைகளையுமே முதல் முதலாக சமைக்க ஆரம்பிப்பாள். அவை தீருமுன் நல்லதாய்த் தெரிந்து வைக்கப்பட்ட காய்கறி பதார்த்தங்க ளும் கெட ஆரம்பித்து விடும். அமராவதியும் சலிக்காமல் அப்படிக்கெட்டுப் போனவைகளையே பொறுக்கி யெடுத்து, ஆக்கிப் படைப்பாள். 'காசுபோட்டு வாங்கினதாயிற்றே, அழுகினதென்று கழித்துவிட்டால் அவ்வளவும் நஷ்டந் தானே' என்று எண்ணி அவ்வித நஷ்டத்தைத் தடுப்பதற் காகத்தான் மேற்கண்ட உபாயத்தை அமராவதி அனுச ரித்து வந்தாள். அதன் பலனாக அவள் வீட்டார் பிரதி தினமும், வாரம் முழுவதும், மாதக்கணக்காக, அழுகிக் கெட்டுப்போன பதார்த்தங்களையே சாப்பிட்டு உடம்பைக் கெடுத்துக்கொள்ளும்படி லபித்தது.

வெற்றிலை விஷயத்திலும் அப்படியே. ஒருகட்டு வெற்றிலை வாங்கிவந்தால் அதில் நல்லவெற்றிலையாக யாரும் எடுத்துப்போட விடமாட்டாள்; தானும் எடுக்கமாட்டாள் அமராவதி. வாடின, அழுகியிருக்கிற, பழுத்துப்போன வெற்றிலைகளையே தெரிந்தெடுத்துக் கொள்ளுவாள்; மற்ற வர்களுக்கும் கொடுப்பாள். வெற்றிலைகளும் இந்தமர்மம் தெரிந்தவைபோல, கிரமமாக அழுகிக்கொண்டே யிருக் கும். இருக்கவே, வெற்றிலைக் கட்டு வந்த அன்று ஆரம்

பித்தவர்கள், அது முடியுமட்டு அழுகின வெற்றிலைதான் மென்று தீரவேண்டும். இம்மாதிரி சிக்கன உபாயங்களை அமராவதி தான் அநுசரித்து வந்தது மன்றி, அண்டை அயலிலுள்ள பெண்களுக்கெல்லாம் போதித்து வந்தாள். பெரும்பான்மையான ஸ்திரிகள் இந்த உபாயங்களை ஆதரித்து வந்தனர். அழுகிக் கெட்டுப்போன பதார்த்தங்கள் இருக்கையில், நல்ல பதார்த்தங்களை எந்தஸ்திரியாவது உபயோகித்ததாகத் தெரிந்தால், உடனே மேற்குறித்த ஸ்திரிகளெல்லாரும் மகா சபைகூடி அந்த விஷயத்தைப் பற்றி ஆலோசனை செய்வார்கள். ஆலோசனைசெய்து குறிப்பிட்ட ஸ்திரி ஊதாரி என்னும், சிக்கனம் தெரியாதவள், வழக்கத்துக்கு மாருக நடப்பவள் என்றும், அப்படிப் பட்டவளை ஜாதியிலிருந்து நீக்கி விடுவதே உத்தம மென்றும் பலமான தீர்மானங்கள் செய்வார்கள். இத்தகைய புண்ணியவதிகள் மனைகள் தோறும் நிரம்பியிருந்ததால் அவ்வூரில் அனேக வைத்தியர்களுக்கு நல்லபிழைப்பு கிடைத்தது.

கதிரேசன் இந்த வழக்கத்தை நிறுத்த வேண்டுமென்று நினைத்து "அழுகின வஸ்துக்களை சமைத்து சாப்பிடுவதால் விபாதி நேரிடும்" என்று அமராவதியிடம் இரண்டொரு தடவை சொல்லிப்பார்த்தார். அவர் அப்படிச் சொல்லுகையில், செட்டியாருக்கு இந்தமாதிரி வெற்றுபேச்சுத் தவிரவேறு வேலையில்லை போலும் என்று நினைத்தவள் போல அவள் அப்பாலே போய்விடுவாள். தாம் சொன்ன நற்புத்தியை தமது மனைவிக்கு வலியுறுத்தி அவளை அவ்வாறு நடக்கும்படி செய்ய கதிரேசன் செட்டியாருக்கு மனோபலம் போதாதாகையினுல் விதிவசமென்று பேசாதிருந்துவிடுவார்.

அமராவதிக்கு கால அளவு தெரியாது. காலந்தவறு மல் கணவனுக்கு போஜனம் கொடுக்கவேண்டுமென்று அவள் கருதுவதுமில்லை. அவள் எப்பொழுது ஆகாரம் தயார் செய்து முடிக்கின்றனளோ அதுவே சரியானவேளை என்பது அவளுடைய எண்ணம். காலையிலெழுந்து தன் நியம நிஷ்டைகளை முடித்துக்கொண்டு கதிரேசன் செட்டியார் காலைப் போஜனத்துக்காக பல நாழிகை நேரம் காத்துக்கொண்டிருப்பது வழக்கம். அமராவதி காலையில் பலகாரங்கள் செய்ய ஆரம்பித்து விட்டாலோ கதிரேசன் செட்டியார்கதி வெகு பரிதாபத்திலாகி விடும். தனக்கு எத்தனைவிதப் பலகாரங்கள் செய்யத் தெரியுமோ அத்தனை வகைப்பலகாரங்களும் செய்து முடித்த பின்னர்தான் பசியோடிருக்கும் கதிரேசன் செட்டியாருக்கு அவள் பலகாரம் கொடுப்பாள்.

கணவன் பசியால் காய்ந்துகொண்டிருப்பாரே துரிதமாய் ஏதாவது செய்துகொடுத்து அவர் பசியை ஆற்ற வேண்டுமே என்று அவள் நினைப்பது கிடையாது. அப்படி விதவிதமாக பலகாரங்கள் செய்து முடிக்க பல தடவைகளிலும் காலை பத்து நாழிகை வரையில் ஆகிவிடுவதுமுண்டு. அதுவரை அவர் காத்திருக்கவேண்டியதுதான். வேறு நிவர்த்தியில்லை.

ஒருநாள் காலை கதிரேசன் செட்டியார் வெகுநேரம் யோடிருந்து சாப்பிட்டமையால் மனஞ்சலித்து, "தகுந்த நேரத்தில் போஜனங்கிடைக்கிறதற்கு வழியில்லையே, என் தலைவிதியோ இது" என்று எண்ணமிட்டுக்கொண்டே அவருடைய நண்பரான முத்தப்பன் செட்டியார் வீட்டுக்குப் போனர். அங்கு முத்தப்பன் செட்டியார் தமது மேல்

வேஷ்டியினால் வயிற்றைச்சுற்றி இறுக்கிக் கட்டிக்கொண்டு "பாவை நல்லாள் ஆகாரம் தருவதினி எக்காலம், பாவி யெந்தன் பசியுந்தீருவது மெக்காலம்" என்று எக்காலக் கண்ணிகள் பாடிக்கொண்டு படுத்து உருளுவதைக்கண்டார்.

"ஏன் அண்ணா இப்படி உருளுகிறீர்" என்று கதிரேசன் செட்டியார் கேட்க, முத்தப்பன் செட்டியார்.—

"இவ்வளவு நேரமாகியும் இன்னும் சாப்பிடுவதற்கு ஒன்றும் கிடைக்கவில்லை. சமையல் கட்டில் என்னென்னவோவெல்லாம் தயாராகிறதாகப் பிரஸ்தாபம். ஆனால் எப்பொழுது கிடைக்குமென்று தெரியவில்லை. எனக்குப் பசி பிராணன் போகிறது. வேஷ்டியினால் வயிற்றை இறுக்கிக்கட்டிக்கொண்டு படுத்து உருண்டால் பசி வருத்தம் குறையுமென்று சொல்லக் கேட்டிருக்கிறேன். அதனால்தான் இப்படி உருளுகிறேன்.

"மானம் குலம் கல்வி வண்மை அறிவுடைமை
தானம் தவம்முயற்சி தாளாண்மை—தேனின்
கசிவந்த சொல்லியர்மேல் காமுறுவல் பத்தும்
பசிவந்திடப் பறந்துபோம்"

என்பதல்லவா பெரியோர் வாக்கு" என்று கூறிக்கொண்டு பின்னும் உருளலானார்.

இதைக் கேட்டதும் கதிரேசன் செட்டியாருக்கு ஒரு பக்கத்தில் சந்தோஷமும், ஒரு பக்கத்தில் இரக்கமும் உண்டாகி "அண்ணே, உங்கள்பாடு என்பாட்டிலும் மோசமாக வல்லவா இருக்கிறது" என்று சொல்லிக்கொண்டுபோய் முத்தப்பன் செட்டியாரைக் கட்டிக்கொண்டார். எங்கும் இப்படியே நடப்பதாக முத்தப்பன் செட்டியார் சொல்ல, கதிரேசன் செட்டியாரின் மனச்சலிப்பு ஒருவாறு மாறிற்து.

ஒருநாள் அதாவது முந்தின அத்தியாயத்தில் கண்ட விஷயங்கள் நடப்பதற்கு சிலதினங்களுக்குமுன் காரைக்குடியிலிருந்து ஒருபிராமணன்வந்து கதிரேசன்செட்டியாருடன் பேசிக்கொண்டிருந்தார். அவர் வேறெவருமல்லர், நாம் எற்கனவே அறிந்திருக்கிற இராமசுவாமி ஐயர்தான். பேசிக்கொண்டிருக்கையில் ஒரு வைரப் பதக்கத்தை எடுத்துக் காண்பித்து அது விற்பனைக்கு வந்திருப்பதாகவும், அது விலையேறப்பெற்றதாகையால் செட்டி நாட்டிலேதான் விற்பனையாகக் கூடியதென்றும் கூறினார். அந்தச் சமயத்தில் அமராவதி அங்குவந்து, பதக்கத்தைக் கண்டு அதை வாங்கிவிடவேண்டுமென்று கதிரேசன் செட்டியாரைத் தூண்டினாள். ஆனால் இராமசுவாமி ஐயர் அதன் விலை 25,000 ரூபாவுக்கு ஒரு பைசாகூடக் குறையாதென்று சொன்னமையால், அந்தப் பேச்சு முடிவுபெற்றது. என்னவிலையானாலும் வாங்கிவிடவேண்டுமென்று அமராவதி எண்ணினாள். தன் புருஷனுக்கு அவ்வளவு பணமுண்டோ என்று அவள் நினைக்கவேயில்லை. கேட்ட வஸ்துவை வாங்கித் தராத கணவன் என்ன கணவன் என்று எண்ணியெண்ணி அவள் மனம் புழுங்கிக்கொண்டிருந்தாள்.

கதிரேசன் செட்டியார் வீடு இடம் விசாலமானதும் வெளிப்பார்வைக்கு அலங்காரமானதுமாயிருந்தும் வெளிச்சமும், காற்றும் எளிதாக உட்பிரவேசித் துலாவத்தக்க சாதனங்கள் அமைக்கப் பெற்றிருக்கவில்லை. அதனால் இராத்திரி காலத்தில் அவ்வீட்டின் முன் இரண்டு கட்டுகளும் இருண்டுகிடக்கும். கதிரேசன் செட்டியார் அதைப்பார்த்து வெறுப்படைவதுண்டு. இரண்டொரு தடவைகளில் அமராவதியிடம் அதைக் குறித்துச் சொன்னார்.

செவிடன் காதருகில் செய்த சங்கநாதம் போலாயிற்று அவர் சொன்னதெல்லாம். இப்படி பலநாள் நடந்ததுண்டு. ஒருநாள் ஏதோ காரியார்த்தமாக அவர் சாமான் நிறைத்து வைத்திருந்த அறைகளில் ஒன்றைத் திறந்தபொழுது, அதனுள் புதுமை, சாந்தி முதலிய விசேஷகாலங்களில் தீபாலங்காரம் செய்வதற்கென்று ஒரு தொகையான கண்ணுடி லாந்தர்கள் இருப்பதைக் கண்டார். அப்பொழுது அமராவதி அவ்விடம் வர அவளை, அழைத்து,

"அமராவதி, இதோயிருக்கிற லாந்தர்களை யெடுத்து முதற்கட்டில் இரண்டும், இரண்டாம்கட்டில் இரண்டுமாகப் போட்டு விளக்கேற்றினுல் வீடு இருண்டு கிடக்காமல் பிரகாசமாயிருக்குமே" என்ருர்.

அமராவதி (அமரிக்கையாக) "நானு வேண்டாமெண்ணன். அத்தனையும் தூக்கிக்கட்டி எண்ணெய் ஊத்திக் கொளுத்தி வைங்களேன். எனக்கு குறைஞ்சா போகிறது. எங்காத்தா வீட்டிலிருந்தா அந்த ராந்தல்களைக் கொண்டாந்தேன்" என்ருள்.

கதிரேசன் செட்டியார்.—(சாந்தமாக) "உங்காத்தாள் வீட்டிலிருந்து கொண்டுவந்தாயென்ருவது, உனக்கேதும் குறைந்துபோகுமென்ருவது நான் சொல்லவில்லை. வாழும் வீடு இருளடைந்து கிடக்கிறதே. விளக்கேற்றி வைத்தால் பிரகாசமாயிருக்குமென்று சொன்னேன்."

அமராவதி.—"எப்ப பார்த்தாலும் வீடு இருண்டு போச்சு, இருளடைந்துகிடக்கு எண்ணுதானே சொல்றிய. நான் வந்து என்னத்தைக் கெடுத்து உங்க வீட்டை இருளடையப் பண்ணிப்பிட்டேன். மயித்தவக வீடெல்லாம் பளிச்

சுப் பளிச்செண்ணு மின்னுது. என்னாலே உங்க வீடு இருண்டு போச்சாக்கும். அட தெய்வமே!"

கதிரேசன் செட்டியார்.—(இதேது கிணறு வெட்ட பூதம் புறப்பட்ட மாதிரி யிருக்கிறது என்று மனதிலே கலவரப்பட்டவராய்) "சே, என்னபேச்சு பேசுகிறாய் அமராவதி, நீதானே இந்த வீட்டுக்கு எஜமானி. வீட்டைச் சுத்தமாயும், பிரகாசமாயும் வைத்துக்கொள்வது உன் பொருப்பல்லவா? நீ ஒன்றும் செய்யவேண்டியதில்லை. வேலைக்காரர்களை ஏவி இந்தமாதிரி வேலைகளையெல்லாம் சுலபமாகச் செய்து முடிக்கலாம். அதனாலேதான் உன்னிடம் சொல்லுகிறேன். அதற்கு தெய்வத்தை ஏன் கூப்பிடுகிறாய்?"

அமராவதி.—"மயித்தவக வீடெல்லாம் சுத்தம் சொதசொதண்ணு கிடக்கு. உங்கவீடுதேன் நான்வந்து கெட்டுப்போச்சு. எப்ப பார்த்தாலும் இந்தமாதிரி இளப்பச் சொல் சொல்றீயளே நான் அப்படி என்னத்தைப் பண்ணிப் பிட்டேன். உங்க சொந்தக்கார வீடெல்லாம் ஓவியமாத்தேன் கிடக்கு. எனக்குத் தெரியாதாக்கும்."

கதிரேசன் செட்டியார்—"மற்றவர்கள் வீட்டைப்பற்றி நாம் கவனிக்கவேண்டிய தில்லை. நமது வீட்டை நாம் சிறப்பாய் வைத்துக்கொள்ளவேண்டும். ஏதாவது சடங்கு சாந்தி நடந்தால், மூன்றுவது வீட்டார் முப்பது வகைக்கறிகள் செய்திருந்தார்கள், நாம் நாற்பது வகைக்கறிகள் செய்ய வேண்டுமென்று நீயே சொல்லியிருக்கிறாயே. அதேமாதிரி மற்றவர்கள் வீட்டைவிட நமது வீட்டை அதிகச்சிறப்பான நிலைமையில் வைத்துக்கொள்ளவேண்டாமா?"

அமராவதி.—"உங்க வீட்டு முதல் அழிஞ்சு போறதுக்காக, முப்பதுகறி—நாற்பதுகறி நான் வைக்கச் சொன்

னேன். மயித்தவக வீடுகளிலே கறிவகை குறைய இருந்திச்சிண்ணு எல்லாரும் குறை சொன்னுக. நம்மளுக்கு அம்மாதிரி, குறைச்சொல் வரப்படாதே; வைக்கிறதே வைக்கோம். அதோடே கூட நாலு அஞ்சுவகை கறிசேர்த்து வைச்சாப் போகுது எண்ணுதானே சொன்னேன். அப்படி உங்கபொருளை அழிச்சிட்டனு, ஆத்திலே விட்டிட்டனு, தூறுமாறு பண்ணித் தொலேச்சிட்டேனு?''

கதிரேசன் செட்டியார்.—''நான் சொல்லுகிறதொன்று நீ பேசுகிறது ஒன்று. நீ பொருளை அழித்ததாக நான் சொல்ல வரவில்லை. கறிவகைகள் மற்ற வீடுகளில் வைப்பதைவிட அதிகமாக நமது வீட்டில் செய்வது நமக்கு எப்படிப் பெருமையோ அப்படியே மற்ற வீடுகளைப் பார்க்கிலும் நமதுவீட்டை அலங்காரமாக வைத்துக்கொள்வது நமக்குப் பெருமை என்று சொன்னேன். நீ என்னென்னமோ நினைத்துக்கொண்டு எதையெல்லாமோ உளறிக்கொண் டிருக்கிருய். பெண்பாலருக்கு படிப்பு இல்லாததால் சிறு காரியத்தைக்குறித்துப் பேசினுலும் இப்படிப் பெருஞ்சங்கடமாய் விளைகிறது.''

அமராவதி.—'' ஆமா, நான் படியாத முட்டாளுத்தேன். உங்க நினைவெல்லாம் நான் அறிஞ்சுதான் வைச்சிருக்கிறேன். முந்தியே படிச்சவளாப் பார்த்துக் கட்டிக்கிடுறது தானே. நானுவந்து என்னைக் கல்யாணம் பண்ணிக்கிடச் சொன்னேன். பத்துவாரகன் வைச்சுப் பாதத்திலே பூப்போட்டுத் தாங்கவா செய்தேன். அட பாழுந்தெய்வமே என்தலையில் இப்படியா விதிச்சிட்ட,'' என்று அலறிக்கொண்டே உள்க்கட்டுக்குள் நுழைந்து ஒப்பாரி வைத்தனள். மற்ற ஸ்திரிகள் வந்து அவளைச் சூழ்ந்துகொ

ண்டார்கள். இதையெல்லாம் கவனித்துக் கொண்டிருந்த கண்ணம்மாள் என்ற பெண் இந்தச் சமாசாரத்தை அக்கம் பக்கத்திலுள்ள ஸ்திரிகளுக்கு தெரிவிக்கவெண்ணி உடனே அவ்விடம் விட்டு நீங்கினாள். சிறிது நேரத்துக்கெல்லாம் கதிரேசன் செட்டியார் தமது மனைவியைத் தடிகொண்டு நைய அடித்து விட்டதாகவும், அவள் அழுதுகொண்டு கிடக்கிறாளென்றும் அந்தப்பக்க மெங்கும் வதந்திபாவிற்று.

அந்த ஊரிலே ஊர்ப்புறணிகளை ஆராய்ச்சி செய்யும் பெண்கள் சபை ஒன்று இருந்தது. அந்தச்சபையின் நடு நாயக நாட்டாண்மைக்கார ஸ்திரிகளுக்கு இந்தப் பிரஸ்தாபம் எட்டினவுடன் அவர்கள் புறப்பட்டு அமராவதி இருக்குமிடம் வந்து நடந்த விஷயமென்ன வென்று விசாரித்தார்கள்.

அமராவதி சொன்னாள் :—“ ஏண்டி, மீனாட்சி, ஆச்சி, என்ன சொல்வேன் என் தலைவிதியை. இத்தனைநேரம் அவர் என்னைப் பேசினது இன்னபேச்சுத்தான் சொல்லணும். இன்னது சொல்லப்படாது என்றில்லை. என்னாலே வீடு இருளடைந்து போச்சுதென்றார் நான் அப்படி என்னத்தைப் பண்ணிப்பிட்டேன்; செய்து விட்டேன் எண்ணு கேட்டேன். 40 கறி—50 கறி வைத்து முதலையெல்லாம் தொலைச்சிட்ட என்றார். குறைச்சொல் வாராமல் வைக்கிறதோடு கூட நாலைந்துகறி சேர்த்தி வைத்தால் என்ன கெட்டுப் போச்சு என்றேன். அதற்காக என்னை படியாத முட்டாள் என்றும், அலங்காரமாயில்லை என்றும், பெருஞ்சங்கடமாயிருக்கிற தென்றும் சொல்லுகிறார். கேளுங்கள் இந்த அநியாயத்தை எனக்கு ஒரு கொள்ளைவந்து என்னைக்கொண்டு போகுதில்லையே. என்று சொல்லி நெடுங்குரல் பாய்ச்சி

அழுவாளாயினள். இதற்குள் மேற்கண்ட பெண்கள் சபையைச்சேர்ந்த ஏறக்குறைய இருபது ஸ்திரிகள் அங்குவந்து சேர்ந்தனர். மூன்று 'கார்பார்' ஆச்சிகள் நீதிபதிகளாகவும், மற்றவர்கள் சபையாராகவும் தங்களை எண்ணிக்கொண்டு அந்தச் சம்பவத்தை விசாரிக்க ஆரம்பித்தார்கள். விசாரணையில் கதிரேசன் செட்டியார்பேரில் கனத்த குற்றம் சுமத்தப் பட்டது. பெண்கள் நீதி சபையானபடியால் பிரதிவாதியான கதிரேசன் செட்டியார் விசாரணைக்கு அழைக்கப்படவில்லை; அவர் ஆஜராகவுமில்லை பிரதிவாதி யில்லாமையைக் கவனியாமலே விசாரணையை நடத்திப் பின்வருமாறு தீர்ப்புச் சொன்னார்கள்.—

"நாட்டுக்கோட்டைப் பெண்கள் படிப்பது வழக்கமில்லை. ஆகையால் அதற்காக கதிரேசன் செட்டியார் தமது மனைவியை படியாத முட்டாள் என்று சொன்னது சாதியாசாரத்துக்கு விரோதமானது. அதுவுமன்றி பெண் ஜாதி அலங்காரமாயில்லை என்றும், பெருஞ்சங்கடமாயிருக்கிறாளென்றும் அவர் சொல்லி யிருக்கப்படாது. அது அநியாயமான பேச்சு."

இந்தத் தீர்மானத்தை அங்கு கூடியிருந்தவர்களெல்லாம் ஏக மனதாய் ஆதரித்துப் பேசினார்கள். இது இப்படி யிருக்க.

கதிரேசன் செட்டியார் என்ன நிலைமையிலிருக்கிறார் என்று பார்ப்போம். அவருடைய மனம் கசந்து நின்றது. தமது மனையாளின் அறியாமையைப்பற்றிப் பெரிதும் இரங்கினார். படிப்பற்ற ஸ்திரிகளுடன்வாழவேண்டியிருக்கிற புருடர்களின் கதியைப்பற்றி பலகாட்சிகள் அவரது மனதில் எழும்பின. வெளித்திண்ணையில் அப்படியே

சேர்ந்து உட்கார்ந்துகொண்டிருக்கிறார். அவருடைய மனத்தோற்றங்கள் தான் அவருக்குத் துணையாய் நிற்கின்றன

“ இருந்து முகம்திருத்தி ஈரோடு பேன்வாங்கி
விருந்துவந்ததென்று விளம்பவே—வம்பனையாள்
ஆடினாள் பாடினாள் ஆடிப்பழமுறத்தால்
சாடினாள் ஓடோடத்தான் ”

என்றதற்கு ஒப்பான சம்பவங்கள் நாட்டுகோட்டை நகர வைசியர் குடும்பங்களில் பலகாலும் நிகழுவதுண்டு.

பெண்களுக்குக் கல்வியின்மையால் எவ்வளவு கெடுதிகளும் விபரீதங்களும் விளைகின்றன வென்பதை வாசகர்கள் எளிதில் உணர்ந்து கொள்ளலாம்.

“வழக்கத்துக்கு விரோதம், “ சாஸ்திரத்துக்கு எதிரிடை,” “கல்வியால் பெண்கள் கற்பிழந்து விடுவார்கள்,” என்பனபோன்ற சில அசட்டு நியாயங்களைக் கூறி சிலர் பெண்கள் கல்வி கற்கக் கூடாது என்கிறார்கள். இவ்வித வாதங்களை, நமது வாசகர்கள் இகழ்ந்து தள்ளுவார்களென்றே நம்புகிறோம்.

முற்காலத்தில் ஆண்களைப்போலவே பெண்களும் கல்விகற்றிருந்தார்களென்பதற்கு நமது தேச சரித்திரத்திலும், புராணங்களிலும் ஆதாரங்கள் பலவுண்டு. பெண்களே அநேகநூல்களை எழுதியுமிருக்கிறார்கள், மத்திய காலத்தில் பெண் கல்விக்கு விக்கினம் நேரிட்டது நமது தேசத்தின் துர்ப்பாக்கிய மென்றே சொல்லவேண்டும். ஸ்திரீகளுக்கு கல்வியறிவுக்குன்றி அறியாமை பெருகினதால், தேசாபிமானம் பொங்கிவழியும் விரிந்த மார்பும், திரண்டதோள்

களுமுள்ள திண்ணியரை ஈன்ற வீரத்தாய்மார் மறைந்த னர். மேற்கண்ட அமராவதி போன்ற மண்டுகங்களே பெருகின. தேசம் கேட்டுக் கீழ்வழிக்குச் செல்லுவதற்கு வேறுகாரணமும் வேண்டுமோ?

ஆகையால் பெண்களுக்கு கல்வி அத்தியாவசியம் என்று இங்கே முக்காலும் மூன்றுமுறை வற்புறுத்திக் குறிப்பிடுகிறோம். ஸ்திரீகள் கற்பரசிகளாயிருக்க வேண்டு மானல், அவர்களுக்குக் கல்விகற்பிக்கப் படவேண்டும். பர்த்தாவுக்கேற்ற பதிவிரதைகளாக இல்லறம் நடத்தவே ண்டுமானல் அவர்கள் படித்திருக்கவேண்டும். மதுசம்பா ஷணை செய்யவேண்டுமானல், மந்திரிபோல் யோசனைகள் கூறவேண்டுமானல், வீடுகளைச் சுத்தமாகவும், பிரகாசமாக வும் வைத்திருக்க வேண்டுமானல், ஆரோக்கியமான போஜ ஞதிகளைக் காலந் தவருமல் தயார் செய்து தரவேண்டுமா னல், மக்களை மன்றச்சபையின் கண் மகிமையுடனிருக்க காணவேண்டுமானல், குடும்ப காரியங்களை மானபங்கமின் றிச் சிறப்பாய் நடத்தவேண்டுமானல் ஸ்திரிகளெல்லாரும் போதிய கல்வியறிவுள்ளவர்களாயிருப்பது அத்தியாவசியம். இல்லையேல், வாசகர்களே, நீங்களும் இந்தக்கதிரேசன் செட்டியாரைப்போல திண்ணையில் உட்கார்ந்து மூடமதி யைச்சிந்தை செய்யும் நாட்கள் பெருகும்.

"குஞ்சியழகும் கொடுந்தானைக் கோட்டழகும்
மஞ்சள் அழகும் அழகல்ல—நெஞ்சத்து
நல்லம் யாம் என்ற நடுவுநிலைமையால்
கல்வி அழகே அழகு."

என்று அறிஞர் கூறினது பெண்களுக்கு கல்வி அவசிய மென்பதை வலியுறுத்தும் பொருட்டல்லவா."

மேற்கூறியவாறு கதிரேசன் செட்டியார் எண்ணமிட்டுக் கொண்டிருக்கையில் அடுத்த வீதி அண்ணாமலை செட்டியார். அங்குவந்து கதிரேசன் செட்டியாரை நோக்கி "என்னப்பா கதிரேசா, பெருத்த யோசனை யிலிருக்கிறாயே" என்று கேட்டார்.

"யோசனைதான். உட்காருங்கள் சொல்லுகிறேன்" என்றார் கதிரேசன்.

உள்ளே அழுகுரல் கேட்பதையும் கதிரேசன் செட்டியார் முகத்தில் துக்கக்குறிகள் காணப்படுதையும் கவனித்து அண்ணாமலைக் செட்டியார் கலவரப்பட்டு, "என்ன சேதி?" என்று ஆத்திரத்துடன் கேட்டார். இவர்கள் இருவரும் ஆப்த நண்பர்களாகையால், கதிரேசன் செட்டியார் தமது வீட்டில் நடந்த சம்பவத்தை விவரித்துக் கூறினார்.

"இது நமது வைசிய மண்டலத்தில் நூதன சம்பவம் அல்லவே. கல்வியறிவில்லாத காரிகைகளால் கணவன்மார் கஷ்டமனுபவிப்பது சர்வசாதாரணமாயிருக்கிறது. என்ன செய்யலாம்? இனியாவது நமது சமுகப் பெண்களுக்கு கல்விகற்பிக்க தக்க ஏற்பாடுகள் செய்யவேண்டும். ஒவ்வொருவரும் இவ்விஷயத்தில் சிரத்தைகாட்டவேண்டும். சமீபத்திலே குன்றக்குடியில் மகாநாடு கூடப்போகிறார்களென்று பிரஸ்தாபமா யிருக்கிறதே. அப்படிமகாநாடு கூடும்பொழுதவாவது பெண்கல்வி விஷயமாய் ஏதேனும் ஏற்பாடு செய்தால் பெரிதும் புண்ணியமாயிருக்கும்" என்று சொல்லி அண்ணாமலைசெட்டியார் சில நிமிஷநேரம் அவ்விஷயமாய்ப் பேசிக்கொண்டிருந்தபின், கதிரேசன் செட்டியாரிடம் விடைபெற்று தம்வீட்டுக்குப் போனார். சில நேரத்துக்கெல்லாம் சமையல்கார சின்னையா என்ற பையன் வந்து கையைப்

பிசைந்துகொண்டு கதிரேசன் செட்டியார் முன் நின்றான்.

கதிரேசன் செட்டியார் ஏறிட்டுப் பார்த்து "என்ன சேதி?" என்று கேட்டார்.

சமயற்காரன்.—"ஐயா சாதம்மட்டும் வடித்திருக்கு. கறிவகைகளுக்கு என்னசெய்யறதென்று தெரியலே. ஆச்சி அழுதுகிட்டிருக்கிறாக."

கதிரேசன் செட்டியார் மறுவார்த்தை பேசாமல் மௌனஞ் சாதித்தார்.

சமயற்காரப்பையன் கொஞ்சநேரம் காத்து நின்றான். செட்டியார் ஒன்றும் சொல்லாததால், மீண்டும் "ஐயா என்ன பண்ணச்சொல்றீய?" என்றான். கதிரேசன் செட்டியார் சற்று எரிச்சலாக "சரி, நான் ரூபாய் கொடுக்கிறேன். நீ கொஞ்சநேரங்கழித்துப் போய் ஐயாவய்யர் சாப்பாட்டுக் கடையில் வேண்டுவன வாங்கிவா." என்று சொல்லி எழுந்துபோய் ஒரு ரூபாய்கொண்டுவந்து அவன் கையில் கொடுத்தார்.

அன்றுமுதல் அமராவதி ஒத்துழையா விரதம் பூண்டு வேலே நிறுத்தும்படி செய்து கொண்டிருந்தாள். கதிரேசன் செட்டியார் தமது போஜனபானுதிகளுக்காக ஐயாவய்யர் சாப்பாட்டுக் கடையில் சரண்புகவேண்டியதாயிற்று. இரண்டொரு தினங்கள் அப்படிக்கழிந்தன. அதன் பின் ஒரு நாட்காலே வண்டிகட்டிக்கொண்டு, கதிரேசன் செட்டியார் அவ்வூரிலிருந்து புறப்பட்டுப்போனார்.



## பதினைந்தாவது அத்தியாயம்



### அக்கினி விபத்து.

நள்ளிரவு; எங்கும் அந்தகாரமாயிருக்கிறது. இரவு இருபது நாழிகை யிருக்கலாம். காரைக்குடியில் பார்ப்பனர் வசிக்கும் பாகத்தில் ஒரு வீட்டில் நெருப்புப் பற்றி எரிகிறது. காற்று வீசிக்கொண்டிருந்ததால் அக்கினி ஆனந்தத்துடன் ஜுவாலை வீசி எரிந்து அந்தப்பாக மெல்லாம் பிரகாசமாகத் தெரிகிறது. அந்த வீட்டின் முன் தாழ்வாரத்திலிருந்து ஒருவன் வெளியே பாய்ந்தோடிவந்து, "ஐயோ, தீ தீ," என்று பித்தம் பிடித்தவன் போல கத்திக்கொண்டு அத்தெரு வழியே ஓடினான். அண்டைவீட்டுக்காரர் விழித்து வந்து, நெருப்பை அணைக்க முடியுமாவென்று பார்த்தார்கள். ஓடுபோட்ட வீடாயிருந்தும், மாத்தாலாய மேற்கோப்பில் அக்கினி தாவி ஜுவாலை வீசி எரிந்து கொண்டிருந்ததால் ஒருவரும் கிட்டநெருங்கமுடியவில்லை. இதற்குள் பலபாகங்களிலு மிருந்து திரளான ஜனங்கள் வந்து கூடிவிட்டார்கள். தீப்பிடித்து எரிகிற வீடு. இராமசுவாமி ஐயர் என்பவருடைய வீடு. அவர் இராமநாதபுரம் ஜில்லா, புலியூர் கிராமத்திலிருந்து பத்து வருடங்களுக்கு முன் காரைக்குடியில் வந்து குடியேறினார். வரும்பொழுது தரித்திரத்துடன்தான் வந்தாரெனினும், காரைக்குடியில் குடியேறினது முதல் சுகஜீவனம் செய்ய அவருக்கு மார்க்கமுண்டாயிற்று. நாட்டுக்கோட்டையார் வசிக்கும் ஊர்களிலே பிராமணருக்கு என்ன குறைவு? அதிலும், புலியூர், இராமசு

வாமி ஐயர் ஜித்துவித்தைகள் தெரிந்தவர். இதம் சொல்லிப் பிழைப்பதிலும், வலியாரை வணங்கி, எளியாரை மிரட்டித் தன் காரியத்தைச் சாதித்து கொள்ளுவதிலும் அவர் மகா சமர்த்தர். இதம் சொல்லுவதன்றி, வேறு ஸ்திரமான தொழில் அவருக்குக்கிடையாது. பலவித காரணங்களைக் கொண்டு வைசியகுலச் சீமான்களையடுத்து அவர்களின் கருத்தறிந்து, இணக்கமான வார்த்தைகளைக் கூறி அவர்களின் சிநேகத்தைப் பெற்றுவிடுவார். பின்பு அவருக்கு வேண்டிய பணங்கள் அதிகப் பிரயாசையில்லாமல் வந்து கொண்டேயிருக்கும். அப்படி பொருளீட்டி அவருடைய சொந்தத்தில் ஓர் சௌகரியமான வீடு கட்டிக் கொண்டதுமன்றி, பல எக்சர் நிலங்களும் வாங்கியிருப்பதாகப் பிரஸ்தாபம். காரைக்குடியிலும் அவர் தொழில் விருத்திக்காக ஒரு சிறிய வீடு கட்டிக்குடியிருந்தார். அந்த வீட்டில் தான் இப்பொழுது நெருப்புப்பற்றி எரிகிறது. பார்ப்பனக் கூட்டங்கள் பேரிரைச்சல் செய்தன. இராமசுவாமி ஐயர் அவ்வளவு சீக்கிரத்தில் பொருள் சம்பாதித்ததைப்பற்றி உள்ளறிந்த சிலர் பலவிதமான கதைகளைச் சொல்லித்திரிவதுண்டு. அவை உண்மையாயிருந்தால் இராமசுவாமி ஐயர், நெடுநாள் ஜெயில் வாசம் செய்யவேண்டிய ஓர் ஆசாமி என்று வெளிப்படும். ஆனால் அவற்றை யாரால் ரூபிக்கமுடியும்? அவர் சீக்கிரம் பணக்காரனானது பற்றி அவர் ஜாதிக்காரருக்குள்ளேயே அநேகருக்கு அளவற்ற பொறாமை ஏற்பட்டிருந்தது. இன்று அவர் வீட்டில் நெருப்புப் பிடித்ததைக் குறித்து அவர்களுக்கு எல்லையில்லாத மனகிழ்ச்சி உண்டானது. அவர்களின் ஆநந்தத்தை அதிகரிக்க எண்ணினது போல அக்கினியும் சில நேரத்துக்

குள் அந்த வீட்டை எரித்துச் சாம்பலாக்கிற்று.

இதனிடையில், வீட்டில் நெருப்பு பற்றினவுடனே பயந்து தெருவிலோடிப்போன மனிதனுடன் சிலர் வந்து சேர்ந்தார்கள். அவன் மெய்மறந்து கூச்சல் போட்டுக் கொண்டு ஓடிப்போவதைக்கண்ட அவர்கள் அவனை நிறுத்தி என்ன விசேஷமென்று கேட்க அவன் நாக்குளறித் திக்கித் திணறிக்கொண்டு "ஐயோ, ஐயா, இராமசுவாமி ஐயர் வீட்டிலே நெருப்பு. ஐயர் உள்ளே அகப்பட்டுப் போனார்" என்று சொன்னான். உடனே அவனையும் கூட்டிக் கொண்டு அவர்கள் அங்கு வந்தார்கள். அக்கினி ஜுவாலை கதவிலும் தாக்கி பற்றி எரிந்தது. பெரிய பட்டணமாயிருந் தால் நெருப்பவிக்கும் யந்திரங்களின் உதவியால் நெருப்பை அணைக்கலாம். காரைக்குடியில் அப்படிப்பட்ட யந்திரம் கிடையாது. சமீபத்தில் தண்ணீர் வசதியுமில்லை. நெருப்பும் வெளிக்குக் காணப்பட்ட சிறிது நேரத்துக்குள் அதி துரிதமாய் வீடு முழுவதும் பரவி ஜுவாலை வீசி எரிந்து ஒருவரையும் கிட்ட நண்ண வொட்டாமல் செய்தது. ஆகையால் எல்லாரும் பார்த்துப் பரிதாபப்பட்டார்களே தவிர வேறொன்றும் செய்ய முடியவில்லை. உள்ளே இராமசுவாமி ஐயர் அகப்பட்டுக்கொண்டார் என்ற விஷயம் தெரிந்ததும் அநேகர் பயங்கரத்தால் பிரலாபித்தார்கள். மேற்குறிப் பிட்ட மனிதன் ஓவென்றிறைந்து அழுதான்.

"நீயார்; எங்கிருந்து வந்தாய்?" என்று சிலர் அவனைக் கேட்டதற்கு அவன், தான் கானாடுகாத்தானிலிருந்து ஒரு கடிதம் கொண்டு வந்ததாகவும், இராமசுவாமி ஐயர் கொஞ்சம் பலகாரம் கொடுக்க, அதைச்சாப்பிட்டு விட்டு முன் தாழ்வாரத்தில் படுத்துத் தூங்கிவிட்டதாகவும், நெருப்பு

அனல் வீசினதால் விழித்தெழுந்து பார்த்ததில் வீடெங்கும் அக்கினி மயமாயிருக்கக் கண்டு திகிலடைந்து ஐயரைக் கூப்பிட்டும், கதவைத் தட்டியும் ஒருவரும் சத்தம் கொடாததால் பயந்து வெளியிலோடிப் போனதாகவும் கூறினான்.

இவ்வளவு கோஷ்டமும் நடந்து கொண்டிருக்கையில் ஒரு ஆள் மாத்திரம் அந்த ஜனங்களின் பேச்சைக் கேட்டு வெறுப்படைந்தவர் போல சற்று எட்ட நின்று அக்கினி பற்றி யெரிகிற வீட்டைப் பார்த்துக் கொண்டு நின்றார். அவர் முகத்தில் ஆச்சரியம் நிலவுகின்றது. ஏதோ ஓர் சிக்கலான விஷயத்தை ஆராய்ச்சி செய்பவர்போல அவர் முகம் சுளித்துக் காணப்படுகிறது. அவர் நமது நண்பர் பத்மநாதன் தான்.

இராமசாமி ஐயரின் வீடு எரிந்து சாம்பலாயிற்று. அந்த வீடு தனிநிலத்தில் நின்றமையாலும், பக்கத்தில் கூரை வீடுகள் இல்லாததாலும், அக்கினி வேறிடம் பாவாமல் அத்துடன் அணைந்தது. கூட்டங் கூட்டமாய் நின்று அக்கினி வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்த ஜனங்கள் கலைந்து தங்களுக்குத் தோன்றிய வாறெல்லாம் பேசிக்கொண்டு அவரவர் வீடு சென்றார்கள். வீட்டுக்குள் ஆள் அகப்பட்டு எரிந்துபோனதாகத் தெரிந்ததால் ஒருவரும் கிட்ட நெருங்கத்துணியவில்லை. அது போலீசாருக்குத் தெரிவிக்கப்பட வேண்டிய ஓர்காரியமாதலால் அவர்கள் வரும் வரையில் அவ்வூர் காவல்காரர்கள் எரிந்து போனவீட்டைக் காவல் செய்யும்படி நியமிக்கப்பட்டார்கள்.

காலையில் போலீசார் வந்து பரிசோதித்தார்கள். பத்மநாதன் போலீசாருடன் வந்த தலைமை உத்தியோகஸ்தனைக்கண்டு பேசிய பின், தாமும் எரிந்த வீட்டைச் சுற்றிப்

பார்த்தார். வீட்டுக்குள் படுக்கை அறையில் ஒரு கட்டில் எரிந்து தணிந்திருந்தது. அதன் மத்தியில் எரிந்துபோன பிணச் சாம்பல் மாதிரி ஓர் சாம்பற் கூட்டம் காணப்பட்டது. அதனுள் கிளறிப் பார்த்ததில் சில எலும்புத்துண்டுகள் காணப்பட்டன! அதுவே இராமசுவாமி ஐயரின் உடற் சாம்பலென்று போலீசார் தீர்மானித்தார்கள்.

நெருப்புப்பற்றினவுடனே அவ்வீட்டிலிருந்து கூச்ச லிட்டுக்கொண்டு வெளியில் ஓடிப்போன மனிதனைப்பற்றிப் போலீசாருக்குத் தெரிய வந்ததும் அவனைக்கூப்பிட்டு விசாரித்தார்கள். அவன் தான் காஞடுகாத்தானிலிருந்து இராமசுவாமி ஐயருக்கு ஓர்கடிதம் கொண்டுவந்து, அங்கு படுத்திருந்த தாகவும், பின்பு தீப்பிடித்து அனல் வீசின பிறகு விழித்துக் கொண்டதாகவும், ஏற்கனவே அவன் கூறினதைபோல கூறினன். போலீஸ் இன்ஸ்பெக்டர் கேசவநாயுடு அவனைக் குறுக்குவிசாரணை செய்ததில் அவன் மிரண்டு முன்னுக்கு பின் முரண்பட பதில் சொன்னதால், போலீசார் அவன்மேல் சம்சயங் கொண்டு அவனைப் போலீஸ் பாதுகாவலில் வைத்தனர். முன்னொரு அத்தியா யத்தில் சுப்பய்யாவும் நாருயணன் என்பவனும் பேசிக் கொண்டிருந்த விஷயம் வாசகர்கள் ஞாபகத்திலிருக்கும். அந்த நாருயணன்தான் இவன். இவன் கொடுத்த வாக்கு மூலத்தில், தான், எரிந்துபோன ஐயரிடம் கடிதம் கொடுத்த பொழுது அங்கு ஒரு வேலைக்காரனிருந்ததாகவும், அவனே ஐயரின் சொற்படி தனக்கு கொஞ்சம் பலகாரம் கொடுத்ததா கவும் கூறியிருந்தான். போலீசார் அந்தவேலைக்காரன் எங்கே என்று விசாரித்ததில் அந்தக் கூட்டத்திலிருந்து ஒருவன் முன்வந்து மிரள மிரள விழித்துக்கொண்டு நின்ருன். அரை

யில் மலினமான ஒரு வேஷ்டி தரித்திருந்தான். தோளின் அதே யோக்யதையுள்ள ஒரு துண்டு கிடந்தது. ஒல்லியான தேகமுள்ளவனயிருந்தான். அழுக்கினல் பொதியப்பெற்ற பூணூல் மார்பின்மேல் விளங்கிற்று. சதா வெற்றிலை மெல்லுவதால் பற்களில் சிவப்புக்கறை பிடித்திருந்தது. இவ்வளவு கோலாகலமாய் எதிரில் வந்து நின்ற அந்த மனிதனைப் பார்த்து,

"நீதானு இந்த இராசுவாமி ஐயர் வீட்டில் வேலை செய்தவன்?" என்று இன்ஸ்பெக்டர் கேசவ நாயுடு கேட்டார்.

"நான்தான் ஐயா" என்றுன் அவன்.

இன்ஸ்பெக்டர்.—"உன் பெயரென்ன?

"என் பெயர் சாமிநாத ஐயர்!

இன்ஸ்பெக்டர்—"உனக்கு சாமிநாதன் என்று பெயரா, அல்லது சாமிநாத ஐயர் என்று பெயரா? பெயரைத் திட்டமாகச் சொல்லு."

சாமிநாதன்.—"என் பெயர் சாமிநாதன் தான்."

இன்ஸ்பெக்டர்.—"பின்னை என் சாமிநாத ஐயர் என்று சொன்னுய்?"

சாமிநாதன்.—"ஐயர் என்ற ஜாதிப் பட்டத்தையும் பேரோடு சேர்த்துச் சொல்ற வழக்கம். அதனல் அப்படிச் சொல்லிவிட்டேன்."

இன்ஸ்பெக்டர்.—"சரி இந்த இராமசுவாமி ஐயரிடம் நீ என்ன வேலை செய்கிருய்."

சாமிநாதன்.—"சமயல் வேலை."

இன்ஸ்பெக்டர்.—"எவ்வளவு காலமாக"

சாமிநாதன்.—"நாலுமாதமாக."

இன்ஸ்பெக்டர்.—"அதற்குமுன் யார் வேலை பார்த்தது உனக்குத் தெரியுமா?"

சாமிநாதன்.—"அதற்குமுன் இராமசுவாமி ஐயரின் மனைவி உயிரோடிருந்ததால், சமயல் வேலைக்கு ஆளிருக்கவில்லை

இன்ஸ்பெக்டர்.—"இந்த இராமசுவாமி ஐயருக்கு என்னவேலை?"

சாமிநாதன்.—"செட்டியார் வீடுகளுக்குத்தான் வேலையாகப் போய் வருவார். என்ன வேலையென்று எனக்குத் தெரியாது."

இன்ஸ்பெக்டர்.—"வீடு நெருப்புப் பிடித்த அன்றிரவு நடந்த சங்கதிகளை விபரமாகக் கூறு."

சாமிநாதன்.—"நேற்றைக்கி இராமசுவாமி ஐயர் காலையில் பலகாரம் சாப்பிட்டதன்மேல் வெளியிலே போனவர் சாயந்தரம் ஐந்து மணிச் சமயத்துக்குத்தான் திரும்பிவந்து சீக்கிரம் சமயல் ஆகவேண்டுமென்று சொன்னார். எட்டு மணிக்கு முன்னே சமயலாகி, சாப்பாடு முடிந்தது. அப்பொழுது (போலீஸ் பாதுகாவலில் நிற்கும் நாராயணனைச் சுட்டிக் காண்பித்து) அவன் வந்தான். வந்து இராமசுவாமி ஐயரோடு பேசிக்கொண்டிருந்தான். அவன் ரொம்பக் கோபமாய் சத்தம் போட்டுப் பேசினான். நான் சமயல் கட்டில் சாப்பிட்டுக் கொண்டிருந்தேன். கொஞ்ச நேரம் சென்றதும் இராமசுவாமி ஐயர் என்னைக் கூப்பிட்டு சாதம் இருக்கிறதா என்று கேட்டார். நான் சாதம் இல்லை, கொஞ்சம் பக்ஷணம் தான் மீதியிருக்குது என்றேன். அதைக்கொண்டுவந்து அவனுக்குக் கொடுக்கச்சொன்னார். அப்படியே கொண்டுவந்து கொடுத்தேன். பிறகு இராம

சுவாமி ஐயர் என்னைப் பார்த்து நீ போகவேண்டுமானால் போகலாம் என்று சொன்னார். நான் உடனே போய்விட்டேன்.

இன்ஸ்பெக்டர்.–(நாராயணனைச் சுட்டிக்காண்பித்து), இவன்தானா நேற்று இராமசுவாமி ஐயர் வீட்டுக்கு வந்த மனிதன்? அவன் பெயர் உனக்குத் தெரியுமா?"

சாமிநாதன்.—"ஆமாம், ஐயா இவன்தான். தன்பேர் நாராயணனென்று சொன்னான்."

இன்ஸ்பெக்டர்.—"இவன் ஏதாவது கடிதம் கொண்டு வந்திருந்திருந்தானா? அதைப்பற்றி உனக்குத் தெரியுமா?"

சாமிநாதன்.—"எனக்குத் தெரியாது. இவன் வந்த பொழுது இவன் கையில் கடிதம் கொண்டுவரவில்லை."

இன்ஸ்பெக்டர்.—"அவன் இராமசாமி ஐயரிடம் என்ன சொன்னானென்று உனக்குத் தெரியுமா?

சாமிநாதன்.—"அவர்கள் பேசினது எனக்குக் கேட்கவில்லை. நான் சாப்பிட்டுக்கொண்டிருந்தேன்.

இன்ஸ்பெக்டர்.—"அவன் சத்தம் போட்டுப் பேசினதாகச் சொன்னாயே. அதுவும் கேட்கவில்லையா? சாப்பாட்டின் மீது வெகு கவனமாயிருந்தாயோ!"

சாமிநாதன்.—"அவன் சத்தமிட்டுச் சொன்னது. "சாமி, என்னை ஏமாத்தப் பார்க்காதே. பிறகு நீ இங்க இருக்கமாட்டே" என்று கோபமாய்ச் சொன்னான்.

இன்ஸ்பெக்டர்.—"அவன் அப்படிச் சொன்னானா? நீ சத்தியஞ் செய்து சொல்லுவையா?"

சாமிநாதன்.—"அவன் அப்படிச்சொன்னது எனக்கு நன்னாக் கேட்டுது. சத்தியஞ் செய்து சொல்லுவேன்."

இன்ஸ்பெக்டர்.—"அதற்கு பின் நீஎங்கே போனுய்?"

சாமிநாதன்.—"சத்திரத்துக்கு."

இன்ஸ்பெக்டர்.—"என் சத்திரத்துக்குப் போனுய்?"

சாமிநாதன்.—"படுத்துக் கொள்ள."

இன்ஸ்பெக்டர்.—"படுத்துக்கொள்ளவா? உண்மையைக் கூறு. இராமசுவாமி ஐயர் வீட்டில் படுத்துக்கொள்ளலாமே."

சாமிநாதன்.—"இராமசுவாமி ஐயர் அளவாகத்தான் அரிசி போட்டுச் சமைக்கச் சொல்லுவார். அப்படித்தான் செய்யறது. அதில் அவர் மனங்கொண்டு சாப்பிட்டு விட்டாராணுல் எனக்குச் சாதம் குறைந்துபோகும். அதற்காக சத்திரத்துச் சமயல்காரன் நல்லப்பனே தனது பண்ணிக்கொண்டு அங்கு போய் வயிருர ஆகாரம் சாப்பிட்டால்தான் தூக்கம் பிடிக்கும். அதனுல் தான் நான் சத்திரத்துக்குப் போய்விடுவது வழக்கம்."

இன்ஸ்பெக்டர்.—"அப்படியாணுல் இராமசுவாமி ஐயர் தமது வீட்டில் தனிமையாகப் படுத்துக் கொள்ளுகிறதா?"

சாமிநாதன்.—"செல்லேயர் சாப்பாட்டு விடுதியில் கையாளாக வேலைபார்க்கும் சின்னி என்கிற வலயப் பெண்ணே வைத்திருந்தார். அவள் வந்து படுத்துக் கொள்ளுவதுண்டு."

இன்ஸ்பெக்டர்.—"நேற்றிரவு அவள் வந்திருந்தாளா?"

சாமிநாதன்.—"எனக்குத் தெரியாது. நான் போகுமட்டும் வரவில்லே"

இன்ஸ்பெக்டர்.—"சரி, நீ இராமசுவாமி ஐயரிடம் வருமுன் என்னவேலே செய்தாய்"

சாமிநாதன்.—"வேலே, என்ன வேலே ஐயா. சத்திரத்

திலே சாப்பிடறது. செட்டிய வீட்டிலே பூரிப்பணம் வாங்கிறது தான் வேலை."

இன்ஸ்பெக்டர்.—"அதிலே உனக்கு ஜீவனஞ் செய்ய முடியுமா.?"

சாமிநாதன்.—"ஆம் ஐயா, ஜீவனம் செய்ய முடியும். இதற்காக எங்கெங் கெல்லாமிருந்தோ பிராமணுள் மந்தை மந்தையாக வரு. ஒன்பதாவது பத்தாவது கிளாஸ் வாசிச்சவன்கள் கூட படிப்பை விட்டுட்டுஇதற்கு வந்திடுறுன்கள்."

இன்ஸ்பெக்டர்.—"அப்படியா, அந்தப் பிழைப்பிலே அவ்வளவு சுகமா?"

சாமிநாதன் —"சுகமில்லாமலென்ன. செட்டிப் பிள்ளைகள் எங்கு பார்த்தாலும் சத்திரம் கட்டி வைத்திருக்கிறுர்கள். அதிலே இரண்டு வேளை பூர்த்தியான சாப்பாடு கிடைத்து விட்றது. செட்டிய வீட்டிலேயே பூரிப்பணம் மாதம் பதினைந்து, இருபதுக்குக் குறைவில்லை. இனி அங்கங்கே தூக்கிற துடைக்கிற வேலைகள் செய்யும் சூத்திரப் பெண்களில், நல்ல வாலிபமாய்ப் பார்த்து வைப்பு வைச்சுக்கிடுறு. பிறகென்ன வேணும். சுகமா? பரசுகமென்னு சொல்லணும் தொல்லை ஒண்ணுமில்லை.

இன்ஸ்பெக்டர்.—"ஒருவித தொந்தரவு மில்லையோ?"

சாமிநாதன்.—"இன்ஸ்பெக்டர் ஐயா, தங்களுக்கு அதிலுள்ள ரகசியம் தெரியவாது. சொல்லுகிறேன் கேளுங்கோ. செலவில்லாமல் சத்திரத்தில் சோறு. உழைப்பில்லாமல் பூரி வருமானம்; குடும்பபாரம் இல்லாமல் பெண்டாட்டிசுகம். அப்படியானல் என்ன தொந்தரவு இருக்கும்? தொந்தரவு என்று சொன்னல், செட்டிகள்

வீட்டில் அடிக்கடி சாவுநேரிடாதா என்று ஜெபம் பண்ணற தொந்தரவு ஒன்று தான். வேறொண்ணு மில்லை."

இன்ஸ்பேக்டர்.—"செட்டிகள்வீட்டில் அடிக்கடிசாவு நேரிட்டால் உங்களுக் கென்ன லாபம்."

சாமிநாதன் —"ஐயா,செட்டி மார் நன்மையிலும் தீமையிலும் பூரி கொடுக்கிறார்கள். சாவு நேரிட்டால் முதல் சிரார்த்தத்திற்கு ஆயிரக் கணக்காக செலவு செய்வா. பிராமணாளுக்கு பூரி பலமாக அகப்படும். அதற்காகத் தான் அவர்கள் வீட்டில் அடிக்கடி சிரார்த்தம் நேரிடணும் என்று ஜெபம் செய்யறது."

இன்ஸ்பேக்டர்.—"நீ அப்படி ஜெபம்செய்ததுண்டா."

சாமிநாதன்.—"ஐயா நான் உண்மையைச் சொல்லிட்டேன். பல தடவைகளிலே நான் அப்படி நினைத்ததுண்டு. கடவுளைப் பார்த்து ஜெபம் செய்ததில்லை. ஆனால் இந்த இராமசுவாமி ஐயர் அப்படி ஜெபம் செய்யறதுண்டு."

இன்ஸ்பேக்டர்.—" அப்படியா இராமசுவாமி ஐயர் பூரி பணம் வாங்குகிறது வழக்கமா?"

சாமிநாதன்.—"ஐயா, அவர் வந்த துவக்கத்தில் சத்திரத்திலே சாப்பிட்டு பூரிக்காக அலைந்து கொண்டிருப்பார். எந்த மாதத்திலாவது முதல் வாரத்தில் பூரி அகப்படாவிட்டால் செட்டிய வீட்டில் சீக்கிரம் சாவுவரணுமென்று ஜெபம் செய்ய ஆரம்பித்துவிடுவார். "சத்திரங்களைக் கட்டிவைத்து தினம் பிண்டத்துக்கு வழி செய்திருக்கிற செட்டிகள், யாரும் சாகும்வரை காத்திருந்து பூரி பணமென்று கொடுப்பதைவிட, மாதம் இவ்வளவென்று கொடுக்க ஏற்பாடு செய்தால் எவ்வளவு நன்றாயிருக்கும். அவ்வளவு புத்தி யோசனை அவர்களுக்கு இல்லையே. என்ன இந்தச் செட்டிக

ளெல்லாம் சுத்த ஜடங்கள்'' என்று சொல்லுவார். சத்தி ரத்திலே யாராவது நியமநிஷ்டை செய்வதைக் கண்டால், என்ன சுவாமிகளே, இராமசுவாமி ஐயரைப்போல ஜெபம் செய்யப் போகிறீர்களோவென்று சொல்லி பையல்களெல் லாம் சிரிப்பது வழக்கம்.''

இன்ஸ்பெக்டர்.—''நீங்களெல்லாரும் இந்த செட்டிகள் சாப்பாட்டை நன்ருய் சாப்பிட்டுவிட்டு அவர்களையே ஏள னம் செய்யலாமா?''

சாமிநாதன்.—''செய்யக் கூடாதுதான். ஆனல் எங் களைப்போ லொத்தவர்கள் சாப்பிட்டு விட்டு கூத்தியார் வைத்துத் திரிந்தால், தங்களுக்கு புண்ணியம் கிடைத்து விடு மென்று, சத்திரங்களைக் கட்டிவைத்து, ஆயிரம் ஆயிர மாக ரூபாய்களை வாரியிறைக்கும் இந்தச் செட்டிகளைப் பற்றி வேறென்ன தான் சொல்றது. அவர்கள் அறிவு எந்நாளும் இந்த நிலைமையிலேயே இருக்க ஆண்டவன் துணை செய்யணும்.''

இன்ஸ்பெக்டர்.—''சரி, உன் பிரசங்கத்தை நிறுத்தி, கேட்ட கேள்விக்கு சுருக்கமாய் உத்தரவு சொல்லு. இராம சுவாமி ஐயர் சத்திரத்திலே சாப்பிடுவதும், பூரிவாங்குவது மான வேலை செய்தார் என்று இப்பொழுது சொன்னை யல் லவா? சில நிமிஷங்களுக்குமுன் நான் இராமசுவாமி ஐய ருக்கு வேலை யென்ன வென்று கேட்டதற்கு தெரியா தென்று ஏன் சொன்னுய்?''

சாமிநாதன்.—''ஐயா, சத்திரத்திலே சாப்பிடறதும், பூரி வாங்குகிறதும் அவர் வந்த துவக்கத்தில் செய்த வேலை. இடையில் அவருக்கு வருமானம் அதிகரித்து விட் டது. பல ஊர்களுக்குப் போறதும், செட்டிகளில்

சிமான்களாயிருப்பவர்களைச் சிநேகம் செய்வதுமே அவர் செய்த வேலையாகத் தெரிந்தது. ஆனால் வருமானம் மாத்திரம், தக்க வருமானமாக வந்துகொண்டிருந்தது. அது எப்படி வருகிறதென்று தெரியாது. அதனால்தான் அவர் செய்தவேலை தெரியாதென்றேன்.''

"சரி, நீ இங்குதானே இரு'' என்று அவனை நிறுத்தி விட்டு, அவன் சொன்ன, சின்னி என்ற வலையப் பெண்ணைக் கூப்பிட்டு விசாரிக்கலானார் இன்ஸ்பெக்டர். இந்த விசாரணைகளெல்லாம் முடிந்தபின் நாராயணனுக்கு விலங்கு மாட்டி போலிஸ் பாதுகாவலில் அனுப்பிவிட்டு, இன்ஸ்பெக்டர் கேசவநாயுடு, போஜனம் செய்து தமதுவேலையைச் சமர்த்தாகச் செய்து முடித்த அகமகிழ்ச்சியுடன், மேல் அதிகாரிகளுக்கு அதைப்பற்றி கடிதம் எழுதும்படி உட்கார்ந்தார்.



## பதினாறுவது அத்தியாயம்



### பத்மநாதனின் ஆராய்ச்சி



போலீசார் எரிந்து தணிந்த இராமசுவாமி ஐயர் வீட்டைப் பரிசோதித்தபொழுது, பத்மநாதனும் அவ்விடத்தை ஆராய்ச்சி செய்தாரென்று நாம் முன்னரே கூறியுள்ளோம். அவர் பரிசோதனையில், அக்கினிக்குத் தப்பியிருந்த மாவுத்திரங்களும்,பளுக்களும் அவற்றின் பாகங்களுமே அவர் கவனத்தை கவர்ந்தன. அவர் அவைகளைத் தொட்டுப் பார்த்தார்; உற்று நோக்கினார்; அணுதரிசனியால் ஆராய்ச்சி

செய்தார்; முகர்ந்து பார்த்தார். பின்பு புருவத்தை நெரித்துக்கொண்டு யோசனை செய்தார். போலீசார் சாம்பலைக் கிளறுவதையும், படுக்கையில் அஸ்தியிருக்கக்கண்டு ஆச்சரியப் படுவதையும் அவர் கவனிக்கவேயில்லை. பின்பு எரிந்துபோன பெட்டி அலமாரி முதலியனவைகளைப் பரிசோதித்தார். இப்படி ஆராய்ச்சி செய்து முடிந்ததும் பத்மநாதன் அவ்விடம் விட்டு நீங்கி ஏதோ ஓர் பெரிய ஆலோசனையில் ஆழ்ந்தவராக தந்தி ஆபீசுக்குச் சென்றார். சில அவசரத் தந்திகள் அனுப்பிவிட்டு வீட்டுக்குத் திரும்பினார். அவருடைய யோசனை இன்னும் முடியவில்லை.

இப்படி யோசனையாய் இருக்கையில் இன்ஸ்பெக்டர் கேசவ நாயுடு முகமலர்ச்சியுடன் வந்து, பத்மநாதனுக்கு வந்தனம் சொல்லி, ஓர் இருக்கையில் உட்கார்ந்தார். பத்மநாதன் "என்னையா நாயுடுகாரு. முகம் மலர்ச்சியாயிருக்கிறது. இந்த அக்கினி விபத்தைப் பற்றி என்ன நினைக்கிறீர்கள்" என்றார்.

இன்ஸபெக்டர் கேசவ நாயுடு.—"நினைக்கிறதென்ன? உண்மையே வெளிப்பட்டுவிட்டது. பைத்தியம் பிடித்தவன்போல உளறிக்கொண்டிருந்தானே அந்தப் பயல் பெருந்திருடனென்று நான் அவனைக் கண்டவுடனேயே சந்தேகப்பட்டேன். அவனை நான் விசாரித்ததில் அவன் காஞ்டு காத்தானிலிருந்து கடிதம் கொண்டுவந்தேனென்று சொன்னான். ஆனால் யாரிடமிருந்து கடிதம் கொண்டுவந்ததாகச் சொல்லமுடியாமல் கண்டபடி உளறினான். பிறகு அவனைக்கொண்டுபோய் நன்றாய் அடித்துப் பயமுறுத்தியதில் அவன் சில நகைகளைத் திருடிவந்து இந்த இராமசுவாமி ஐயரிடம் கொடுத்து விற்பனை செய்துதரக் கேட்ட

தாகவும் அவர் நல்லதென்று சம்மதித்து நகைகளை வாங்கிக் கொண்டு நாள் கடத்தி வந்ததாகவும், அதனால் இதற்கு முன் ஒரு தடவை அவரிடம் கோபித்துப் பேசினதாகவும் உண்மையைச் சொல்லிவிட்டான். ஆனால் வீட்டில் நெருப்பு வைத்தது தனக்குத்தெரியாதென்கிறான். அதுவும் இரண்டொரு நாட்களில் ஒப்புக்கொண்டு விடுவான். நான் ஏற்கனவே ரிப்போர்ட் அனுப்பி விட்டேன்.''

பத்மநாதன்.—“அப்படியானால் அந்த மனிதன்தான்—அவன் பெயரென்ன நாராயணனா? சரி நாராயணன்தான், இராமசுவாமி ஐயரை வீட்டிலடைத்து நெருப்புவைத்து விட்டானென்று நினைக்கிறீர்களோ?''

கேசவ நாயுடு.—“ஆட்சேபனை என்ன? காரியம் இப்படி நடந்திருக்கவேண்டும். நாராயணன் ஏதோ சில நகைகளைத்திருடிக்கொண்டுவந்து இராமசுவாமி ஐயரிடம் விற்பனை செய்து தரும்படி கொடுத்திருக்கிறான். இராமசாமி ஐயர் இங்கு வந்தபொழுது பூரிக்கு அலைந்து கொண்டிருந்ததையும், இடையில் பணக்காரனாகி விட்டதையும் யோசிக்கும் பொழுது அவன் இவ்விதத் தொழில்—அதாவது யோக்கியன் போல உடுத்திக்கொண்டு களவுபொருட்களை விற்பனைசெய்து கொடுத்து தாகு வாங்கும் தொழில்—செய்திருப்பானென்று தெரிகிறது. அப்படியிருக்க நாராயணன் கொண்டுவந்த நகைகள் செட்டிய வீட்டுக்கு நகைகளாதலின் விலையேறப் பெற்றவைகளாயிருப்பதைக்கண்ட இராமசுவாமி அவற்றின் கிரயத்தில் பெரும்பாகத்தை மோசம் செய்ய உத்தேசித்திருக்கலாம். அதனால் நாராயணனுக்கு கோபமுண்டாகி இப்படிச் செய்திருக்கலாம். ஏற்கனவே ஒருதடவை சச்சரவு நேரிட்டிருக்கிறது. இந்தத் தடவை

நாராயணனுக்கு, தான் திருடனாயிருந்தும் தன்னை ஏமாற்றப்பார்க்கிறானே என்று ஆங்காரம்பொங்கி அவனை அடித்து படுக்கையில் தூங்கிப்போட்டு வீட்டைச்சாத்தி நெருப்பை வைத்திருக்கலாம்.''

பத்மநாதன்.—''நீங்கள் சொல்லுகிறபடி நாராயணனே வீட்டில் நெருப்பை வைத்தவனானால், அவன் ஏன் தீ தீ என்று அலறிக்கொண்டு வெளியில் ஓடவேண்டும்?''

கேசவநாயுடு.—'' அது நான் சொன்னதற்கு ஆட்சேபணையாகத் தோன்றுகிறது.''

பத்மநாதன்.—'' அக்கினிக்கு தப்பின மாத்துண்டுகளையும் பளுக்களையும் கவனித்தீர்களா?''

கேசவநாயுடு.—'' ஆம், அவற்றிலென்ன விசேஷம்?''

பத்மநாதன் சில மாத்துண்டுகளை ஒருகாகிதச் சுருளிலிருந்து எடுத்து கேசவநாயுடுவினிடம் கொடுத்து நன்றாய்க் கவனிக்கும்படி சொன்னார். அந்த மாத்துண்டுகள் எரிந்துபோன வீட்டிலிருந்து கொண்டுவரப் பட்டவை. அவற்றில் அனேகம் நாலைந்து அங்குல நீளத்துக்கு எரியாமல் இருந்தன. கேசவநாயுடு அவற்றைப் பார்த்துவிட்டு ஒன்றும் தோன்றாமல் நிற்பதைக் கண்ட பத்மநாதன் அந்த மாத்துண்டுகளை முகர்ந்து பார்க்கும்படி சொன்னார். அவர் அப்படியே முகர்ந்து பார்த்துவிட்டு மண்ணெண்ணெய் நாற்ற மடிப்பதாகக் கூறினார்.

பத்மநாதன்.—''மண்ணெண்ணெய் நாற்றம் மாத்திரமல்ல. மண்ணெண்ணெயில் சுவறியிருப்பதாகவும் தெரிகிறது. எரியாமல் கிடக்கிற துண்டுகளும் இப்படியே இருக்கின்றன. இதையும், அந்தவீடு எரிந்து தணிந்த வேகத்தையும் ஒன்று சேர்த்துப் பார்க்கும் பொழுது ஒரு உண்மை புலனாகிறது,

என்னவெனில் வீடு துரிதத்தில் எரிந்து தணிவதற்காகத் வீட்டின் மாக்கட்டுகளில் மண்ணெண்ணெயைப் பூசி அதன் பின் நெருப்புக் கொளுத்தப்பட்டிருக்க வேண்டு மென்று தெரிகிறது. அவ்வளவு யுக்தியுடன் வேலைசெய்யும் சக்தி நாராயணனுக்குக் கிடையாது. அதுவுமன்றி, நாராயணன் வீட்டைக் கொளுத்த வேண்டியகாரணமென்ன? அவனுக்கு இராமசுவாமியின்மேல்கோபம் உண்டானதென்றால் அவனை அடித்துத் தள்ளிவிட்டு, அகப்பட்டதைச் சுற்றிக் கொண் டல்லவா போவான்? வீட்டில் நெருப்பு வைத்து விட்டு வீதிவழியே கூவிக்கொண்டு ஓடுவானா? நீங்களே நிதானித் துப்பாருங்கள்."

கேசவநாயுடு.—"நீங்கள் சொல்வதின் நுட்பம் எனக்கு விளங்குகிறது. ஆனால் துஷ்டர்களின் நடத்தையை அளவு கட்டமுடியாது. சில வேளைகளில் மெய்மறந்து பயித்திய காரத்தனமாய் நடந்து தாங்களே வலிய விலங்கைமாட்டிக் கொள்ளுவார்கள். ஆகையால் நீங்கள் சொல்வதைவிடப் பலமான சாட்சியம் ஏற்பட்டாலன்றி வேறேவரும் இந்தக் குற்றத்தைச் செய்ததாக நான் நம்பமுடியாது."

பத்மநாதன்.—"அதுபோகட்டும். இராமசுவாமி ஐயர் நாராயணனுக்குச் சாப்பிடப் பலகாரம் கொடுத்ததைப் பற்றி உங்களுக்கு ஒன்றும் தோன்றவில்லையா?"

கேசவநாயுடு.—"இல்லை. எனக்கு ஒன்றும் தோன்ற வில்லை"

பத்மநாதன்.—"நாராயணனுக்கு பலகாரம் கொடுத்தது அவன் கோபமாய்ப் பேசினதற்கு முந்தியா, பிந்தியா?

கேசவநாயுடு.—"கோபப்பேச்சுக்குப் பின்பு தான்."

பத்மநாதன்.—"பின்புதான் என்றால், நாராயணனின் கோபம் தீர்ந்து அவர்கள் இருவரும் ஒருவிதமான சமாதானத்துக்கு வந்துவிட்டதாகத் தெரிகிறதல்லவா? ஒருவனுக்கு கொலைக்கேதுவான கோபமோ, அல்லது குரோதமோ இருக்குமானால் அவன், அதற்குக்காரணமாயிருக்கிற மனுஷனிடமிருந்து எதையேனும் வாங்கிச்சாப்பிடுவானா? நன்றாய் யோசித்துப் பாருங்கள்."

கேசவநாயுடு.—"(சிறிதுநேரம் யோசனை செய்து)நீங்கள் அற்பமும் சாதாரணமுமாய் தோன்றுகிற விஷயங்களைப் பற்றி சிந்தனை செய்து அதிலிருந்து நவநவமான கருத்துகளை பிறப்பிக்கிறீர்கள். உங்கள் முறையை நான் பின்பற்றமுடியாது. நீங்கள் நினைக்கிறபடி நாராயணன் இந்தக்குற்றஞ் செய்யவில்லை என்றால் வேறுயார் செய்திருப்பார்கள்?"

பத்மநாதன்.—"யாரேனும் செய்திருக்கலாம். அதைத்தான் கண்டு பிடிக்கவேண்டும். உதாரணமாக இராமசுவாமி ஐயரின் வேலைக்காரனே செய்திருக்கலாம். என் செய்திருக்கக்கூடாது.?"

கேசவநாயுடு.—"நான் அவனையும் போலிஸ்பார்வையிலேயே வைத்திருக்கிறேன்."

இப்படி சிலநேரம் பேசிக்கொண்டிருந்தபின் கேசவநாயுடு விடைபெற்று போய்விட்டார். பத்மநாதனின் அபிப்பிராயங்களைக் கேட்டபின் அவருடைய முகமலர்ச்சி மாறிப்போயிற்று. வெகுசுலபத்தில் ஒரு நூதன கொலையை வெளிப்படுத்திக்குற்றவாளியையும் பிடித்து விட்டதாகக் கீர்த்தியும், சம்பள உயர்வும் பெறலாமென்று அவர் மனோராஜ்யம் செய்துகொண்டிருந்தார். பத்மநாதன் கருதுகிறபடி நாராயணன் குற்றவாளி அல்லவென்றால்

தமதெண்ணம் நிறைவேறாது என்று அவருக்கு மனவருத் உண்டாயிற்று.

அவர் போன சில நிமிஷங்களுக்குப்பின் தந்திச்சேவகன் பத்மநாதனுக்கு இரண்டு தந்திகள் கொண்டுவந்தான். பத்மநாதன் ஆத்திரத்துடன் அவற்றை வாங்கிப் பிரித்துப் பார்த்தார். உடனே பிரயாண ஆயத்தம் செய்து அவ்விடம் விட்டுப் புறப்பட்டுப் போனார்.



## பதினேழாவது அத்தியாயம்



### ஒரு பெரியவர்



சொக்கநாதன் ஏதோ அவசரமாக தன் வீட்டிலிருந்து வெளியில் வந்தபொழுது ஒருவண்டி வந்து இரண்டுவீடுகளுக்கு அப்பாலுள்ள முத்தய்யா செட்டியார் வீட்டுவாயிலில் நின்றது. உள்ளே யிருந்து ஒரு செட்டியார் இறங்கினார். அவர் யாரென்று சொக்கநாதன் உற்றுப் பார்த்தபொழுது நாகநாதபுரம் கதிரேசன் செட்டியாரென்று கண்டு அவரைப் பார்க்கும்படி விரைந்து சென்றார்.

"என்னப்பா சொக்கா சௌக்கியமா, இப்ப எங்க ஊர்ப்பக்கம் நீ எட்டிப்பார்க்கிற தில்லையே" என்று புன்சிரிப்புடன் கதிரேசன் செட்டியார் க்ஷேமம் வினவினார்.

"நான் சௌக்கியந்தான் அண்ணா, உங்கள் முகம்தான் வாட்டமா யிருக்கிறது" என்று சொக்கநாதன் கூறினார். இப்படிப் பேசிக்கொண்டே கதிரேசன் செட்டியார் அந்த வீட்டுக்குள் சென்றார். சொக்கநாதனும் பின்னால் போனார்.

அவர்களைக் கண்டதும் முத்தய்யா செட்டியார் எழுந்து வந்து கதிரேசன் செட்டியாருக்கு உபசாரவார்த்தைகள் கூறி உட்காரச்சொல்லி யோகக்ஷேமங்களை விசாரித்துக் கொண்டிருந்தார். கதிரேசன் செட்டியார் தேகம் மெலிந்து போயிருப்பதைப்பற்றி விசாரித்தபொழுது அவர் தமது மனைவியின் ஒத்துழையா விரதத்தைப்பற்றி ஜாடையாகக் கூறி, சாப்பாட்டு விடுதிச்சாப்பாடு உடம்புக்கு ஒத்துக்கொள்ளவில்லை என்று குறிப்பிட்டார். அவர்கள் பந்துக்களான தினால் அவ்விஷயமாக தாராளமாய்ப் பேசிக்கொண் டிருந்தார்கள்.

முத்தய்யா செட்டியார்.—"நமது வைசிய மண்டலத்திலே தான்பெண்ணரசு ஓங்கிநிற்கிறதே. ஆடவருக்கு அணுவளவும் சுவாதீனம் இருப்பதாகத் தெரியவில்லை. கல்வியறிவில்லாத பெண்கள் நம்மவர்களுக்கு காலதூதர்போல் ஏற்பட்டிருக்கிறார்கள். இந்த நிலைமை என்று ஒழியுமோ அன்றுதான் நம்மவர்களுக்கு நல்நாள் என்று சொல்ல வேண்டும்."

கதிரேசன் செட்டியார்.—"அது உண்மையே. என்ன செய்கிறது? "கழுதைக்கு வாழ்க்கைப்பட்டு உதைக்கு அஞ்சலாமா?" என்ற பழமொழி எனக்குப் பொருத்தமானது. இவ்வளவும் இந்தவூர் இராமசுவாமி ஐயரால் நேரிட்டதென்று சொல்லவேண்டும்.

அவர் வந்து பட்டணத்தில் இரத்தின வியாபாரிகளாம்—கங்காதரம் கம்பனி என்ற பெயராம்—அவர்களிடமிருந்து ஒரு ஏஜண்ட் வந்திருப்பதாகவும், ஒரு பெரிய மாணிக்கத்தை நடுநாயகமாயுள்ள ஓர் தங்கபதக்கம் விலைக்கு கொண்டுவந் திருப்பதாகவும் கூறி, ஓர் தங்க பதக்கத்தைக்

காட்டினார். விலை இருபத்தையாயிரம் ரூபாவுக்கு குறையாதென்று சொல்லிக்கொண் டிருந்தார். அதை வாங்கவேண்டுமென்று வீட்டிலே அமராவதிக்கு அமோகமான ஆசை. நான் இருபத்தையாயிரம் ரூபா பெரிய ஓர் தொகை அவ்வளவு விலைபெற்ற தங்க பதக்கம் அவசியமல்லவென்று அனுப்பி விட்டேன். அதிலிருந்து தான் இந்தப் பிணக்கு ஆரம்பித்தது.''

இதைக் கேட்டதும் சொக்கநாதனுக்கு பெரிதும் ஆச்சரிய முண்டாயிற்று. ஆனால் அதை வெளியிட்டுக் கொள்ளாமல் அடக்கிக் கொண்டார்.

முத்தய்யா செட்டியார்.—''இராமசுவாமி ஐயரா? அவர் வீட்டோடே எரிந்து போய்விட்டாரே. உங்களுக்கு அந்தச்சேதி தெரியாதோ?''

கதிரேசன் செட்டியார்.—(ஆச்சரியத்துடன்) ''என்ன சொன்னீர்கள். எரிந்து போய்விட்டாரா? நீங்கள் சொல்வது எனக்கு அர்த்தமாக வில்லையே.''

முத்தய்யா செட்டியாரும் சொக்கநாதனும் நடந்த சம்பவங்களை யெல்லாம் அவருக்கு விவரித்துக் கூறினார்கள்.

கதிரேசன் செட்டியார்.—''நான் அவருடைய மோசத்திலிருந்து தப்பினது என் அதிர்ஷ்டமே. நான் வந்த நோக்கமெல்லாம் அவரைக்கண்டு, அவர் கொண்டுவந்திருந்த தங்க பதக்கம் மாதிரியில் ஒரு தங்க பதக்கம் போலிவைரம் வைத்ததாகப்பார்த்து சொற்பதொகைக்கு வாங்கிக்கொண்டுபோய் அந்தச்சனியைச் சமாதானப்படுத்தி விடவேண்டும் மென்பதே. அதற்குள்ளே அவரும் எமலோகம் போய் விட்டார். இனிநாம்தான் நேரில்போய் ஏற்பாடு செய்யவேண்டும்.''

முத்தய்யா செட்டியார்.—"இராமசுவாமி ஐயர் இருந்தால் அவர் மூலமாய் பட்டணத்தில் அவர் குறிப்பிட்ட இரத்தினக்கம்பனியாரிடம் அந்தமாதிரி ஆபாணம் வாங்கலாமென்று எண்ணீர்களோ."

கதிரேசன் செட்டியார்.—"ஆமாம், அப்படி நினைத்துத் தான் புறப்பட்டு வந்தேன். இங்கே விபத்தாய் முடிந்திருக்கிறது. இனி சென்னைக்குத்தான் போகவேண்டும்."

முத்தய்யா செட்டியார்.—"ஆனால் கண்டனூர் திருவிழாவுக்கு இருந்து விட்டுத்தானே போவீர்கள். நாங்கள் நாளைக்குப் புறப்படுகிறதாக உத்தேசம். நீங்களும் வந்து போகலாம்."

கதிரேசன் செட்டியார்.—"மனதில் சந்தோஷமிருந்தாலல்லவா திருவிழாவுக்குப் போகலாம்? மனதுக்கே சுகமில்லாதபொழுது நான் எப்படி வரமுடியும்?

முத்தய்யா செட்டியார்.—"ஓகோ, நீங்கள் சொல்வது தலைகீழாயிருக்கிறது. மனதுக்குச்சந்தோஷமில்லாத காலத்தில்தான் திருவிழாவுக்குப் போகவேண்டும். போனால் அங்குநடக்கும் நவநவமான விசேஷங்களைக்கண்டு மனதில் புதிய எண்ணங்கள் உண்டாகி சஞ்சலம் ஒழியும்; சந்தோஷம் பிறக்கும். ஆகையால் நீங்கள் அவசியம் இருந்து போகவேண்டும்"

இவ்விதமாக கதிரேசன் செட்டியார், கண்டனூர் திருவிழாவுக்குப்போகும்படி நேரிட்டது. அவருக்காக சொக்கநாதனும் போனார்.

வைசியமண்டலத்திலே தனவைசிய சீமான்களின் செலவில் நடைபெறும் விழாக்களின் சிறப்பைக்குறித்து இங்கு விவரிக்க இடம் போதாது. விழா நடைபெறும்

பல தினங்களிலும் பல ஆயிரக்கணக்கான ரூபாய்கள் செலவாகும். ஒவ்வொருதினமும் ஒவ்வொரு தனவைசிய சீமானின் உபயம் நடைபெறும். ஆராதனை, அருச்சனை, நைவேத்தியம் முதலானவைகளுக்கும் சதிர்கச்சேரி, வாத்தியக்கச்சேரி, பாணவேடிக்கை முதலானவைகளுக்கும் ஒவ்வொரு உபயக்காரரும் ஐந்நூறு அறுநூறு ரூபாவுக்குக் குறையாமல் செலவழிப்பார்கள். மற்றவர்களுடைய உற்வசத்தைப்பார்க்கிலும் தம்முடைய ஊர் உற்சவத்தையே ஜனங்கள் சிலாகித்துப் பேசவேண்டுமென்று ஒவ்வொருவரும் முயற்சிப்பார்கள். இந்த மர்மம் தெரிந்த கோவில் பிராமணப் பூசாரிகள், ஒவ்வொருக்கும் வீம்பு உண்டாகும்படி பேசி, செலவை அதிகப்படுத்தி அதில் தங்களாலான மட்டும் "சிறுபாடு" தேடிக்கொள்வது வழக்கம். ஒவ்வொரு நாளும் அன்றைய உற்சவம் நடத்துகிறவருக்குத்தான் முதலில் பிரசாதம் கொடுக்கப்படும். அவருடைய சௌகரியத்தை உத்தேசித்து, பிரசாதம் பெறவேண்டு மென்னும் ஆசையுடன் வந்திருக்கும் மற்றஜனங்கள் நெடுநேரம் காக்கவைக்கப் படுவதுண்டு. உற்சவக்காரரும் அவர் வகையருக்களும் வரும்பொழுது அவர்களுக்கு வழிவிடும்படி, ஏற்கனவே வந்து கூடிநிற்கும் ஜனங்களை கோயிற் பிராமணர்கள் வாழைத்தார்கொண்டு சாடுவார்க்ள். பக்தியின் பெருக்கால், பிரசாதத்தின் மீதுள்ள அன்பால், அந்த அடிகளையும் சகித்துக்கொண்டு ஜனங்கள் இடம் பெயராது காத்துநிற்பார்கள். அடிக்கிறார்களே, அவமதிப்பாய் நடத்துகிறார்களே என்ற எண்ணங்கள் அவர்கள் மனதில் எழும்புவதில்லை. மனம் முழுவதும் பக்தியால் நிறைந்திருப்பதால் இவ்வித எண்ணங்களுக்கு அங்கே இடமில்லை போலும்.

உற்சவக்காரர்தான் இவ்விஷயத்தில் சீர்திருத்தம் உண்டாக்கவேண்டும். போட்டிபோட்டுக்கொண்டு வீண்செலவு செய்வதை நிறுத்தி, அளவான செலவில் ஜனங்கள் எவ்வித இடைஞ்சலுமின்றி பூஜைகண்டு, பக்தியில் வளர்ச்சி பெறத் தக்க ஏற்பாடுகள் செய்யலாம். உற்சவக்காரர் தாங்களே முதலில் பிரசாதம் பெறும் அதம வழக்கத்தை மாற்றி ஜனங்களெல்லாருக்கும் கொடுத்தானபின் மிஞ்சியிருக்கும் பிரசாதத்தை வாங்குவதான உத்தம வழக்கத்தைக் கைக் கொள்ளலாம். அல்லது ஜனங்களுக்குக் கொடுத்து மிச்ச மில்லாவிட்டால், மற்றெல்லாருக்கும் குறைவின்றிக்கிடைத் ததே சிலாக்கியமென்று மனமகிழலாம். நிற்க.

சத்திரங்களிலே பிராமணர்களுக்கு பூர்த்தியான சாப் பாடு கிடைத்து வருகையில், திருவிழாக்களிலும் பிராமண சமாராதனை செய்வது அவசியமல்ல. குறைவில்லாமல் சாப் பிட்டுக்கொண் டிருப்பவர்களுக்கு மேலும் மேலும் சாப்பாடு போடுவதால் புண்ணியமுண்டாகுமா?

சாப்பாட்டுக்கு வழியற்ற ஏழைகளுக்கு இரங்கி உதவி புரிவதே தர்மம். நகரவைசிய தனவான்கள் இதைக்குறித்து சிந்தைசெய்யவேண்டும். விபூதி, தேங்காய் முதலியன சிலரு க்கு முதலில் கொடுப்பதென்ற வழக்கம் நிறுத்தப்படவேண் டும். இதனால் பொறாமையும், பகையுமே ஏற்படுகின்றன. அநேக சீமான்கள் இதன் காரணமாய் கோடேறி பெரும் பணம்செலவுசெய்திருக்கின்றனர். ஆயிரக்கணக்காய் பணஞ் செலவழித்து உற்சவம் நடத்துகிறவர்கள், உற்சவம் நடக் கிற ஆலயத்தில்தானே-ஜகதீஸ்வரன் சந்நிதானத்திலே-ஒரு வர் மேலொருவர் பொறாமை பூண்டு, இரண்டணு தேங் காய்க்காக சச்சரவு செய்வது பக்தியாகுமோ? தெய்வபக்தி

யுள்ளவர்கள் இப்படி நடந்து கொள்வார்களா? ஆலயத்திற்குப் போய், அன்பு, நீதியுணர்த்தி, பெருந்தன்மை முதலிய நற்குணங்களை அடையாமல், பகையையும், பொறுமையையும் மூட்டை கட்டிக்கொண்டு வருவோமானால், நமக்கும், குளிக்கப்போய் போய் சேற்றைப் பூசிக்கொண்டு வந்த சபலைகளுக்கும் என்ன வித்தியாசம்? முற்காலத்தில் ஆலயந்தொழுவோருக்கு சன்மார்க்க போதனைகள் செய்யப்பட்டு வந்தன. அதற்காக ஆலயங்களில் பிரசங்கமண்டபங்கள் அமைத்து கிரமமாய் பிரசங்கங்கள் நடத்தப்பட்டுவந்தன. அப்பிரசங்கங்களைக் கேட்ட ஜனங்கள் சன்மார்க்க அறிவில் வளர்த்து வந்தனர். இப்பொழுதோ அந்தப்பிரசங்க மண்டபங்களெல்லாம் பாழ்மண்டபங்களும், சோம்பேறி மண்டபங்களுமாக மாறிப்போய் விட்டிருக்கின்றன. ஜனங்களுக்கு சன்மார்க்கபோதனையே கிடையாது. தேங்காய் மூடிக்காகவும், விபூதிக்காகவும் நான் பெரியவன், அவன் சின்னவன், என்று போட்டிபோட்டுக்கொண்டு கோடேறிவழக்காடும் துன்மார்க்கமே தலையெடுத்தாடுகின்றது.

குருக்கள் படித்தவரா யிருந்தாலல்லவா அவர் ஜனங்களுக்குப் போதனை செய்யமுடியும்? கோவிலுக்குப் போவோரைவிட குருக்கள் ஞானத்திலும் கல்வியிலும் மேம்பட்டவரா யிருக்கவேண்டும். ஞானமுங் கல்வியுங் குறைந்த குருக்களை கோவிலில் வைத்திருப்பது அந்தக் கோவிலை அவமானம் செய்வது போலாகும். தக்ஷிணை வாங்குவதிலும், அபிஷேக பதார்த்தங்களை அபகரிப்பதிலும் கண்ணுயிருக்கிற, மனோபக்குவ மில்லாத குருக்களால் ஆலயந்தொழுவோருக்கு எவ்வித நன்மையும் உண்டாகாது. பலவிதத்தில் தீமையே விளைகிறது. ஆலயங்களெல்லாம் சுங்

கச் சாவடிகளாக மாரிவிட்டன. இவைகளைப்பற்றி தனவை சிய சீமான்கள் ஆலோசனை செய்து தக்க சீர்திருத்தங்களை உண்டாக்குவார்களானால் அவர்களுக்கு பெரும் புண்ணிய முண்டாகும். உற்சவம் நடத்துவது நல்லதுதான். ஆனால் ஜனங்களின் மனதில் சன்மார்க்க போதனைகளை விதைக்க ஏற்பாடுசெய்வது அநேக உற்சவங்களிலும் சிறந்த தாகும். இவ்வரிய திருப்பணியை துவங்கி நடத்த முன்வரு வோர் இல்லையோ ?

கண்டனூர், ஜனங்களால் நிரம்பி வழிகிறது. தன வைசியக் கூட்டங்களே மிகுதி. திறந்த மார்பும், திரண்ட புஜங்களும் ஆகாய வெளியில் இலங்க, தோளில் கிடக் கும் மேல் வேஷ்டியுடன் நிற்கும் செட்டியார்களும் தலைக்கிராப்செய்து 'கோடு' விட்டு சீவி, ஐரோப்பி மாதிரியில் வெட்டித்தைத்த ஷர்ட், கோட்டுகளும், காலர் களும் அணிந்து, மூக்கில், தங்கக்கட்டு கண்ணாடி துலங்க, கையில்பிடித்த மலாக்கா பிரம்புடன் ஒய்யாரமாக நடந்து செல்லும் பாலவைசியர்களும், ஜப்பான் பனியன் தரி த்து அதன்மேல் ஓர் அங்கவஸ்திரத்தை உல்லாசமாகப் போட்டுக்கொண்டிருப் பவர்களும், பனியனும், ஷர்ட்டும் போட்டு, மணிக்கட்டில் இணைக்கப்பட்டிருக்கும் கடிகாரம் எல்லாருக்கும் தெரியும்படி ஷர்ட்டின் கையை மடித்து விட் டிருப்பவர்களுமாக, திருவிழாவுக்கு வந்திருந்த தனவைசி யர்களெல்லாரும் பற்பல விதமாக தங்களை ஆடையலங்காரம் செய்திருந்தார்கள்.

இந்தக் கூட்டங்களின் மத்தியிலே கதிரேசன் செட்டி யார், முத்தய்யா செட்டியார், சொக்கநாதன் ஆகியமூவரும் நுழைந்து வேடிக்கைகளைப் பார்த்துக்கொண்டு நின்றார்கள்

சிறிது தூரத்தில் ஓர் வீட்டின்முன் பெரிய கொட்டகை ஒன்று இயற்றப்பட்டிருந்தது. அங்கு சென்றபொழுது அதில் ஒரு உண்டியல் பெட்டி கட்டிவைத்து,

"பலவான் குடியில் மாணிக்க விநாயக விக்கிரகம் எழுந்தருளச் செய்வதற்கான நிதி. ஒவ்வொருவரும் இதற்கு பொருளுதவி செய்யும்படி கேட்டுக்கொள்ளப் படுகின்றனர்."

என்று விளம்பரப் பலகை தொங்கவிடப் பட்டிருப்பதைக் கண்டார்கள். அதன் விபரம் என்னவென்று விசாரித்த பொழுது அந்த உண்டியல் பெட்டியை காத்து நின்ற ஓர் வாலிபர் சொல்லுவார்.—"ஐயா பலவான் குடியில் சிவகுரு சுவாமிகள் என்று ஓர் பெரிய மகான்வந்திருக்கிறார். அவர் எப்பொழுதும் யோகநிஷ்டையிலேயே இருக்கிறார். அவருக்கு ஆரூடம் சோதிடம், மாந்தரீகம் இன்னும் அறுபத்துநாலு கலைக்ஞானங்களும் தளபாடம் என்று சொல்லுகிறார்கள். பெரிய பெரிய சீமான்களெல்லாரும்போய் அவரை தரிசித்துப் போகிறார்கள். அந்த சுவாமிகள் வசம் ஓர் அழகான விநாயக விக்கிரகம் இருக்கிறது. அது வெகுகாலத்துக்கு முன்னுள்ள தென்றும், மகாபலிபுரத்துக்கு சமீபத்திலே ஒரு குகையிலிருந்த ஒரு ரிஷி தமக்குத் தந்ததாகவும் அந்த சுவாமி சொல்லுகிறார். அந்த விக்கிரகத்தின் இருகண்களிலும் சிவப்பு இரத்தினங்கள் வைக்கப்பட் டிருக்கிறன. நெற்றியில் இரண்டுகண்களுக்கும் மத்திய பாகத்திலே 'தகதக' வென்று பிரகாசிக்கும் ஒருபெரிய இரத்தினம் அழுத்தப்பட் டிருக்கின்றது. அதை மாணிக்கக் கல்லென்று சுவாமி சொல்லுகிறார். அதனால்தான் அதற்கு மாணிக்க விநாயகர் என்ற பெயர் உண்

டாயிற்றும். அந்த விக்கிரகம் தன வைசியர்களுக்கு உரிமையுள்ளதென்றும், அது பூஜை அபிஷேகம் முதலியன பெறுமல் காட்டில்கிடந்ததால் கணேசப்பெருமானுக்கு கன வருத்த முண்டாகி, அவர் அந்த ரிஷியின் சொப்பனத்தில் தோன்றி "என் அடியார்களின் ஒருவனை இவ்வழி அனுப்புவேன். நீ இந்தவிக்கிரகத்தை அவனிடம் கொடுத்து தன வைசியர் வசிக்கும் பிரதேசத்தில் நான் குறிப்பிடும் ஸ்தலத்திலே ஸ்தாபிக்கும்படி சொல்லு. அது ஸ்தாபிக்கப்பட வேண்டிய இடத்தை நான் கனவிலேவந்து தெரிவிப்பேன்." என்று கூறி மறைந்தாராம். அவ்விதமே இந்த சிவகுருஸ்வாமிகளின் கனவிலும் விநாயகக்கடவுள் தோன்றி "நீ உடனே புறப்பட்டு மகாபலிபுரம் இருந்த இடத்துக்குப்போய் அங்கு ஒரு குகையில் தவஞ்செய்யும் ஒரு ரிஷியை பார். அவர் உனக்கு சொல்லுகிறபடி செய்" என்றருளி மறைந்ததாகவும் அப்படியே இந்த சுவாமிகள் புறப்பட்டு ரிஷியைத் தரிசித்து அந்த விக்கிரகத்தைப் பெற்றதாகவும் சொல்லுகிறுர்.

பின்பு சிவகுரு ஸ்வாமிகள் அந்த விக்கிரகத்தை எடுத்துக்கொண்டு வைசிய மண்டலத்தில் பலவூர்களிலும் திரிந்து வருகையில், பலவான் குடியில் தங்கின அன்றிரவு விநாயகக்கடவுள் அவரது கனவிலே தோன்றி, அந்தமாணிக்க விக்கிரகத்தை அங்கேயே எழுந்தருளச் செய்யவேண்டுமென்று கூறிப்போயினராம். அப்படி அந்த விக்கிரகத்தை எழுந்தருளச் செய்வதற்கு மூன்று லட்ச ரூபாய் செலவு பிடிக்குமென்று சிவகுருஸ்வாமிகள் சொல்லுகிறுர். பலவான் குடியிலுள்ள தனவைசிய சீமான்களில் பத்துபேர் சேர்ந்து இரண்டு லட்ச ரூபாய் கொடுப்பதாக ஒப்புக்கொ

ண்டு விட்டார்கள். இன்னும் ஒரு லட்சத்துக்காக இப்படி நிதி வசூலிக்கிறோம். இது நமது குலத்துக்கே சிறப்பான ஒரு விஷயமாதலின் எல்லாரும் உதவி செய்யவேண்டும். அந்த விக்கிரகத்தில் அழுத்தி யிருக்கும் இரத்தினங்களே இலட்சக் கணக்காய்ப் பெறுமென்று சொல்லுகிறார்கள். உங்களுக்கு இஷ்டமானால் நீங்கள் நேரில்போய் அந்த சுவாமியையும் விக்கிரகத்தையும் தரிசிக்கலாம்'' என்றார்.

முத்தய்யா செட்டியார்.—'' இந்த சுவாமிகள் வந்து எத்தனை நாட்களாகின்றது?''

வாலிபன்.—''பத்து நாட்களுக்கு முந்தித்தான் பலவான் குடிவந்தார். அதற்குமுன் வைசிய மண்டலத்தில் பலவூர்களுக்குப்போய் வந்ததாகச் சொல்லுகிறார். அருளே உருவெடுத்தாற்போல தோன்றுகிறார்.''

அவர்கள் மூவரும் அவ்விடம் விட்டுப் பெயர்ந்து மீண்டும் கூட்டங்களி னிடையே பிரவேசித்தார்கள்.

''அந்த சுவாமிகளைப் போய்க்காண எனக்கு இஷ்டமா யிருக்கிறது'' என்றார் கதிரேசன் செட்டியார்.

''நானும் அவ்விதமே யோசனை செய்துகொண் டிருக்கிறேன்'' என்று முத்தய்யா செட்டியார் கூறினார்.

அவர்கள் போகும் பட்சத்தில் தானும் வருவதாக சொக்கநாதனும் தெரிவிக்க, மறுநாள் எல்லாரும் பலவான் குடிபோவதென்று தீர்மானஞ் செய்தார்கள்.

மறுநாட் காலையில் மூவரும் புறப்பட்டு பலவான் குடி போய்ச் சேர்ந்தார்கள். அவர்கள் போயிறங்கின வீட்டிலே விசாரித்ததில் அங்குள்ளவர்களெல்லாரும் ஏகவாக்காய் சுவாமியைப் புகழ்ந்தே கூறினார்கள். அந்த சுவாமியார் பிற்பகலெல்லாம் நிஷ்டையி லிருப்பாரானதால் மறுநாட்

காலையில் தான் அவரைத் தரிசிக்க முடியுமென்று தெரிந்தது. கதிரேசன் செட்டியார், முத்தய்யா செட்டியார், சொக்கநாதன்—இவர்கள் மூவரும் அன்றுமாலையில் அந்த சுவாமியார் இருக்கிற இடத்தையாவது போய்ப்பார்க்க வேண்டுமென்று புறப்பட்டபொழுது, அவர்கள் இறங்கியிருந்த வீட்டு விஸ்வநாதன் செட்டியார், தானும் வருவதாக கூறி, எல்லாரும் புறப்பட்டுப் போனார்கள்.

பலவான்குடி கிராமத்துக்கு வெளியே ஒருபெரிய அரசமரத்தின் கீழ் தென்னோலைகளால் ஒரு கொட்டகை இயற்றியிருந்தது. இரண்டுபேரும் மூன்றுபேருமாக, ஜனங்கள் அங்கங்கே நின்று கொண்டிருந்தார்கள். சுவாமியாரைப்பற்றியே அவர்களெல்லாரும் பேசிக்கொண் டிருந்தார்களென்று விளங்கினது.

விஸ்வநாத செட்டியார்.—"இந்த சுவாமியாருக்கு ஞான திருஷ்டி இருக்கிறது. யாராவது தன்னைக் காணவந்தால் அவர்களுடைய ஊர், பெயர் முதலான விபரங்களை யெல்லாம் கூறிவிடுகிறார்."

முத்தய்யா செட்டியார்.—"(ஆச்சரியத்துடன்) அப்படியா? அவரைக் காணப்போகிறவர்களின் விருப்பத்தைச் சொல்லுகிறாரா ?"

விஸ்வநாத செட்டியார்.—"என்னவோ நான் கவனிக்கவில்லை. ஊர், பெயர் சொல்லுகிறதும், எல்லாருக்குமல்ல. சிலருக்கு மாத்திரம் சொல்லுகிறார். மற்றவர்களிடம் "வந்த விசேஷம் என்ன?" என்று கேட்கிறார். அவர்கள் கேட்கும் கேள்விகளுக்கும் பதில் சொல்லுகிறார். இராஜவசியம், ஸ்திரிவசியம் முதலான வசிய மருந்துகளும் அவரிடம் இருப்பதாகச் சொல்லிக் கொள்கிறார்கள்."

கதிரேசன் செட்டியார்.—(அவசரமாக) "அந்தவசிய மருந்துகளை யாரும் வாங்கி உபயோகப்படுத்திக் குணம் கண்டிருக்கிறார்களா?"

விஸ்வநாதன் செட்டியார்.—"இவர் கொடுக்கிற மருந்து எதுவானாலும் பலிக்குமென்று எல்லாரும் நம்புகிறார்கள்."

சோக்கநாதன்.—"நான் இந்த வசிய மருந்துகளை நம்பவேமாட்டேன். மருந்து எப்படிப்பட்டதாயினும் தேகத்தில் செயல் செய்யக்கூடுமேதவிர மனதைப் பாதிக்கமாட்டாது. சில மூட ஸ்திரிகள் தங்கள் புருஷரைக் கைவசப்படுத்தவும், சில போக்கிரிகள் நல்ல பெண்களைக் கெடுக்கவும் இவ்வித மருந்துகளைக் கையாடி துக்கமும் துன்பமுமே அடைந்திருக்கிறார்கள். நான் சென்னப்பட்டணத்தி லிருக்கையில் என் நண்பரொருவர் ஸ்திரிவசிய மருந்தினால் ஏற்பட்ட ஒருவினோத சம்பவத்தை என்னிடம் கூறினார். என்னவென்றால், சென்னப்பட்டணத்துக்குச் சமீபத்திலுள்ள ஒரு ஊரிலே ஒரு வாலிபன், தான் இச்சித்திருந்த ஒரு பெண்ணை அடைய விரும்பி அங்கு சோற்றுக்கு வழியின்றி பாதேசிவேஷம் பூண்டுவந்திருந்த ஒருவனை அடுத்து ஸ்திரிவசியம் தெரியுமாவென்று கேட்டானும். அதில் கொஞ்சம் வருவாய் கிடைக்குமென்று கண்ட பரதேசி "எனக்குத் தெரியும் ஆனால் நான் அதை எல்லாரு மறியும்படி காட்டிக் கொள்வதில்லை. நீ நல்லவனாகத் தெரிகிறது. ஆகையால் உனக்காக வேண்டுமானால் ஓர் வசியமை செய்து தருகிறேன். இஷ்டமானால் அதற்காகச் செய்யவேண்டிய பூஜைச் செலவுக்கு ஐந்து ரூபா கொண்டுவந்துகொடு. இல்லாவிட்டால் போய்விடு" என்று மிடுக்காகக்கூற, அதைக் கேட்ட வாலிபன் பரதேசியிடம் ஏதோ சரக்கு இருக்கிறது

அதுதான் அவர் அவ்வளவு மிடுக்கா யிருக்கிறுரென்று எண்ணி வீட்டிலே தாய் தகப்பன் கஷ்டப் பாடுபட்டு சேர்த்துவைத்திருந்த ஐந்து ரூபாய்களைத் திருடிவந்து பரதேசியிடம் கொடுத்து வசிய மை செய்து தரும்படி கேட்டான். பரதேசி மறுநாள் கொடுப்பதாகச் சொல்லி அவனை அனுப்பிவிட்டு வைக்கோலைச்சுட்டுச் சாம்பலாக்கி அதைச்சிறிது ஆமணக்கு நெய்யில் கலந்து குழம்புபோலாக்கி ஒரு சிமிழில் அடக்கம் செய்து வைத்திருந்தான். மறுநாள் வாலிபன் வந்தபொழுது, பரதேசி அந்தச் சிமிழை அவன் கையில் கொடுத்து "இதிலிருக்கிறது வசிய மை, இதை யெடுத்து நெற்றியில் பொட்டிட்டுக்கொண்டு, தனுக்காக உடுத்திக் கொண்டு நீ நினைத்திருக்கும் பெண்ணுக்கு முன்னுல்போய் அவளைக் கூர்ந்து பார்த்துக்கொண்டு நில். உனக்குக் கிடைக்கவேண்டியது கிடைக்கும்" என்று சொன்னுன். வாலிபன் சந்தோஷத்துடன் சென்றுன். மறுநாள் முதல் பரதேசி சொன்னபடி நெற்றியில் பொட்டு வைத்துக்கொண்டு அவன் கருதிய பெண் தண்ணீரெடுக்கச் செல்லும்பொழுதெல்லாம் அவள் முன்னுல் போய் நின்று அவளை நன்றுய்க் கூர்ந்து பார்த்துவந்தான். இப்படியிருக்க, அவன் வசிய மை வாங்கின சமாச்சாரம் எப்படியோ அந்தப் பெண்ணின் தமயனுக்கு எட்டிவிட்டது. அவன் தன் சிநேகிதருடன் கலந்துபேசி, மறுநாள் ஒரு பானையில் சாணித்தண்ணீரும், பழய செருப்புகளும் தயாராக வைத்துக்கொண்டு, அந்தப் பெண் நீரெடுக்கச் செல்லும் வழியில் ஒரு சுவருக்கு பின் பக்கமாய் ஒளித்திருந்தார்கள். அன்று அந்த வாலிபன் வழக்கம்போல தனது வசியப்பார்வையைப் பெண்ணின் மேல் செலுத்திக்கொண் டிருக்கையில், எதிர் பார்த்திராத

விதமாக சாணநீர் நிறைந்த ஒருபானை அவன் தலையின்மேல் தொப்பென்று விழுந்து உடைந்து அவனுக்கு அபிஷேகம் செய்தது. அதோடு உபசாரமாக அடி உதைகளும் கிடைத்து அன்றெல்லாம் அவன் ஆயாசத்துடன் படுக்கையிலிருக்க நேரிட்டதாம். இப்படித்தான் இருக்கும் எல்லா வசிய மருந்துகளும். எத்தனையோ மூட ஸ்திரிகள் இவ்வித மருந்துகளினால் தங்கள் கணவன்மாரை எமபுரம் அனுப்பி விட்டு, வாணாளெல்லாம் அமங்கலிகளாகக் கஷ்டப்பட நேரிட்டிருக்கிறது. ஆகையால் ஸ்திரிவசியம், இராஜவசியம் முதலானவைகளெல்லாம் பாமர ஜனங்களை மருட்டி காசு பறிக்கும் மோசவித்தைகளேயாகும். இந்தச்சுவாமியாரிடம் அவ்வித வேலைகளிருக்குமானால் அவர் ஒரு பெரியமோசக்காரன் என்பதில் சந்தேகமில்லை."

கதிரேசன் செட்டியார்.—"ஆமாம், மகான்களாயிருக்கிறவர்கள் இப்படிப்பட்ட விஷயங்களில் பிரவேசிக்க மாட்டார்கள்."

அந்தக் கொட்டகைக்குள் என்ன நடக்கிறதென்று அவர்கள் காணமுடியவில்லை. சிலநேரம் அங்கு சுற்றிக் கொண்டு நின்றபின் அவர்கள் திரும்பி வீடுவந்தனர்.

மறுநாட்காலை எட்டுமணிக் கெல்லாம் அவர்கள்போய் சுவாமியாரின் தரிசனத்துக்காகக் காத்து நின்றார்கள். அவர்களுக்கு முன்னதாக அனேகர் வந்திருந்தபடியால் வெகு நேரம் காத்திருக்க வேண்டியதாயிற்று. சுவாமியின் சீஷன் ஒருவன் வாசலில் நின்றுகொண்டு ஒவ்வொருவராக உள்ளே விட்டுக்கொண் டிருந்தான். முன்னாக வந்திருந்தவர்களெல்லாரும் சுவாமியைத் தரிசித்து வந்தபின் கதிரேசன் செட்டியார் உட்பிரவேசித்தார். அக்கொட்டகையின் மத்தியில்

ஒரு மேஜைபோட்டு அதன்மேல் ஓர் அழகிய விநாயக விக்கிரகம் நின்றது. அதன் நெற்றியில் அழுத்தப்பட்டிருந்த ஒரு இரத்தினம் பிரகாசமாயிருப்பதை அவர் கவனித்தார். அதுவே தாம் ஏற்கனவே கேள்விப்பட்டிருக்கும் மாணிக்க விநாயக விக்கிரகம் என்று கதிரேசன் செட்டியார் எண்ணிக்கொண்டார். அந்த மேஜைக்கு முன் பக்கத்தில் புலித்தோலை விரித்து அதன்மேல் முண்டனம் செய்த தலையுடன், காவிவஸ்திரம் தரித்தவரான முதிர்வயதுள்ள ஒரு சன்னியாசி உட்கார்ந்துகொண்டு, உள்ளே வருவோரைத் தமது கூரிய கண்களால் பார்த்துக்கொண்டிருந்தார். அவரைக் கண்டதும் கதிரேசன் செட்டியார் கைகூப்பி நமஸ்கரிக்க, அவர் தமது சிரத்தை அசைத்து அதை ஏற்றுக்கொண்டார். அந்தப் பெரியவர் சிறிதுநேரம் கதிரேசன் செட்டியாரை உற்றுப் பார்த்துவிட்டு,

"நாகநாதபுரம் கதிரேசன் செட்டியாரே உட்காரும்" என்று ஆழ்ந்த குரலிலே சொன்னார். இதைக் கேட்கவும் கதிரேசன் செட்டியாருக்குப் பிரமிப்பாய் விட்டது. அவருக்கு என்ன நினைப்பது, என்ன கேட்பதென்றுகூட தோன்றவில்லை. சந்நியாசி கூறியபடி உட்கார்ந்து கொண்டார்.

பெரியவர்.—"செட்டியாரே, என்ன காரியமாக வந்தீர்?"

கதிரேசன் செட்டியார்.—"தங்களைத் தரிசித்துப்போக வந்தேன்."

பெரியவர்.—"ஓர் நகை விஷயமாய் வீட்டிலே மனைவி பிணங்கிக்கொள்ள, அவளைச் சந்தோஷப்படுத்துவது எங்ஙனமென்று எண்ணிக் கொண்டிருக்கையில், ஒரு பெரியவர் வந்திருப்பதாய்க் கேள்விப்பட்டு, அவரால் ஏதாவது உதவி பெறலாமென்று கருதி யல்லவா இவ்விடத்தில் வந்தீர்

அதுவே நீர் வந்த முக்கிய காரணம். என்னைத் தர்கொண்டு அதில் அடங்கிப் போயிருக்கிறது. நான் சொல்ழக்கமாம். தானு ?"
பிரதானியாக

கதிரேசன் செட்டியார்.—(பயத்துடன்.) வாருவருக்கும் களே, தாங்கள் கூறுவது முற்றிலும் சரி. ஸ்ரீவ ரு ரெஞ்டு வில் இப்படி சொல்லாமையால் செய்த அபசாரத்தைப் பொருத்துக் கொள்ளவேண்டும்."

பெரியவர்.—"நீர் அபசாரம் ஒன்றும் செய்யவில்லை. யோசிக்காமல் வாயில் வந்ததைக் கூறி விட்டீர். எனக்கு மனிதரின் உள் மனதிலே எழும்பும் எண்ணங்களையும் அறியத்தக்க சக்தியிருக்கிறது. சரி,உமக்கு வேண்டிய தென்ன?"

கதிரேசன் செட்டியார் திகைத்து ஒன்றும் பேசாமல் இருந்தார்.

பெரியவர்.—"உமது வனிவியை வசப்படுத்த தக்க மருந்தாவது, மந்திரமாவது கிடைத்தால் நல்லதென்று எண்ணி வந்தீரல்லவா ?"

கதிரேசன் செட்டியார்.—(கை கூப்பிக்கொண்டு) "ஆம், சுவாமிகளே"

பெரியவர்.—"உமது மனைவியின் பெயரை மனதிலே நினைத்துக் கொள்ளும்."

கதிரேசன் செட்டியார் தாம் நினைத்துக் கொண்டிருப்பதாகக் கூறினர்.

பெரியவர்.—"அவர் முகத்தைச் சிறிதுநேரம் கூர்ந்து பார்த்து விட்டு,

"அமராவதியா—அமராவதி. நல்ல பெயர்தான். சரி, நான் ஒரு மருந்து கொடுக்கிறேன். அதைக் கொண்டுபோய் கொடுத்துப்பாரும். மந்திரம் வேண்டுமானுல் பூஜை நடத்

ஒரு மே ங்கத்தகட்டில் எந்திரம். எழுதவும் குறைந்தது ஐயா கிரகம் நி ா செல்லும். ஆகையால் மருந்துதான் நல்லது. ”

ஒரு இரத்தி
அதுவே தாய சொல்லிக்கொண்டு பக்கத்திலிருந்த ஒரு சிறு விக்கிர பத்திறந்து ஒரு சீசாவைக் கையிலெடுத்தார். அதில் ஒருவித வெண்மையானதூள் இருப்பதாகத் தோன்றிற்று.

கதிரேசன் செட்டியார்.—“சுவாமிகளே சற்றே பொறுத் தருளவேண்டும். இந்த மருந்தை விட மந்திரம் அதிகப் பலனுள்ளதா யிருக்குமோ?”

பெரியவர்.—“இது ஒரு கேள்வியா? மந்திரத்தின் மகிமையையும், வல்லமையையும் பற்றிச் சொல்ல என்னால் முடியுமா? பதினாலு உலகங்களையும் பஸ்பம் ஆக்க வேண்டுமென்றாலும் ஆக்கிவிடலாமே. மந்திர வல்லமையை அளவிட முடியாது.”

கதிரேசன் செட்டியார்.—“சுவாமிகளே, எனக்கு மந்திரமே செய்து தரவேண்டும். ஐயாயிரம் ரூபா பெரிய காரியமல்ல, நான் அதைத் தந்து விடுகிறேன்.”

பெரியவர்.—“தந்துவிடுகிறேன் என்றால் குறிப்பிட்ட தினத்துக்குள் கொடுத்தால்தான் பூஜை ஆரம்பிக்க சௌகரியமாயிருக்கும். நாளை வெள்ளிக்கிழமை இரவு இந்த பூஜை ஆரம்பிக்கலாம். நாளை மாலைக்குள் பணம் இங்குவந்துவிட வேண்டும்.”

கதிரேசன் செட்டியார்.—“சுவாமிகளின் உத்தரவுப் படியே நடந்துகொள்ளுவேன்.”

பெரியவர்.—உம்மைப்பற்றி எனக்கு நல்ல அபிப்பிராயம் ஏற்பட்டிருக்கிறது. இந்த மாணிக்க விநாயக விக்கிரகத்தை

இந்தவூரில் ஸ்தாபிக்கவேண்டுமென்று கணேசப்பெருகொண்டு என் கனவில் தோன்றி எனக்குக் கட்டளையிட்டவழக்கமாம். அந்தச் செலவுக்காக பணவசூல் செய்கிறோம். பிரதானியாக கிற நீர் அதற்கும் பொருளுதவி செய்யலாமேவாருவருக்கும் ஆயிரம் ரூபா உமக்குப் பெரிய காரியமில்லைவே ா ரெண்டு பெருமானது அருள் கிடைக்கும். உமது மரபுக்கே நன்மையுண்டாகும்.''

கதிரேசன் செட்டியார்.—“ அடியேன் சுவாமிகளின் சித்தம்போல செய்யத்தயாராயிருக்கிறேன். அந்தப் பதி ஆயிரரூபாவும் மற்றப்பணத்துடன் கொண்டுவருகிறேன்.''

பெரியவர்.—“ உமது அபீஷ்டப்படி செய்யும். எல்லாம் வல்ல இறைவன் உமக்கு அருள் பாலிப்பார். சுகமே போய் வாரும்.''

என்று விடைகொடுத்து அனுப்ப, கதிரேசன் செட்டியார் வெளிப்பட்டார். பின்பு முத்தையா செட்டியாரும் சொக்கநாதனும் முறையே உட்பிரவேசித்து அந்தப்பெரியவரைத் தரிசித்து வந்தார்கள். அவர்களுக்கும் அவர்களுடைய ஊர் பெயர் முதலானவைகளைப் பெரியவர் கூறினதாகச்சொல்லி ஆச்சரியப்பட்டார்கள். அவர்களிடமும் மாணிக்க விநாயகரை ஸ்தாபிப்பதற்காகப் பெரியவர் பணவுதவி கேட்க அவர்களும் சொற்பமாய்க் கொடுப்பதாகச் சொல்லி வந்துவிட்டார்கள்.

கதிரேசன் செட்டியார் மந்திரத்துக் காகவும், விக்கிரக ஸ்தாபனத்துக்காகவும், தாம் பணம் அனுப்புவதாக ஒப்புக் கொண்டுவந்த சங்கதியை வெளியிடாமல் ரகசியமாக வைத்துக் கொண்டார்.



# பதினெட்டாவது அத்தியாயம்



## பெரியவரின் முயற்சி


பெரியவருக்கு மந்திர சக்தியும், மனதிலே தோன்றும் எண்ணங்களை அறியும் ஆற்றலும் இருப்பதாகத் தெரிவதால் நாம் சற்றே தாமதித்து நின்று அவரைக் கவனிப்போம். அவர் இருந்த கொட்டகை கிராமத்துக்கு வெளியே மைதானத்தில் ஒரு அரச மரத்தின் கீழ் இயற்றப்பட்டிருந்ததென்று நாம் ஏற்கனவே கூறியுள்ளோம். காலையிலெழுந்து தம் அனுஷ்டானங்களை முடித்தபின்பு அவர் தம்மைக் காணவந்திருப்பவர்களுடன் சம்பாஷிப்பது வழக்கம். அவர் அங்கு வந்த சில நாட்களுக்குள்ளே அவருடைய பிரதாபம் வைசிய மண்டலத்தின் ஒரு எல்லைமுதல் மறு எல்லைவரைக்கும் பரவிற்று. பணத்தால் பெரியவர்களெல்லாரும் மோட்டார் இரதங்களில்வந்து அவருடைய தரிசனைக்காக காத்துநின்றனர். பெரியவர் அங்குவந்திருக்கும் நோக்கம் இன்னதென்று நாம் ஏற்கனவே தெரிந்துகொண்டிருக்கிறோம். அதற்காக அதிதீவிரகதியிலே பணவசூல் நடக்கிறது.

வசூலித்த பணமெல்லாம் பெரியவரிடம் கொடுக்கப்பட்டு வந்தது. அவற்றை யெல்லாம் ஓர் மரப்பெட்டியிலிட்டு அவர் அவர் அந்தக்கொட்டகையில் தானே வைத்திருந்தார். இவ்வளவு மகத்துவமுள்ள பெரியவர் திருடரைப் பற்றி பயப்படவேண்டிய தில்லை யல்லவா?

காலையில், காணவந்திருப்பவர்களுடன் பேசி அவர்களை அனுப்பிய பின் பெரியவர் போஜனம் செய்வார். பகல் பதி

ஐந்து நாழிகைக்கு முன்னரே ஆகார மெடுத்துக்கொண்டு பிற்பகலில் யோக சமாதியில் இறங்கிவிடுவது வழக்கமாம். இந்த விபரங்களெல்லாம் அவர் சிஷ்யர்களில் பிரதாணியாக விருக்கும் இராகவனால் ரகசியமாக ஒவ்வொருவருக்கும் வெளியிடப்பட்டது. இராகவனைத் தவிர வேறு இரண்டு சிஷ்யர்களும் உண்டு. எல்லாரும் இளவயதுள்ள பலாட்டியர்கள் தான்.

இப்பொழுது மாலை மூன்று மணியிருக்கும். கொட்டகைக்குள் பெரியவர் புலித்தோலின்மேல் பத்மாசன மிட்டிருந்துகொண்டு சமாதி நிஷ்டையிலிருக்கிறார். அவருக்கு முன் மேஜையின்மேல் ஒளிவிட்டுப் பிரகாசிக்கும் இரத்தினம் நெற்றியில் விளங்க, ஓர் விநாயக விக்கிரகம் வைக்கப்பட்டிருக்கிறது. இராகவன் கொட்டகையின் வாசலில் பாராக் கொடுத்துக் கொண்டிருக்கிறான். பெரியவர் திடீரென்று சமாதிகலைந்து "இராகவா, இராகவா" என்று கூப்பிட்டார்.

"சுவாமி இதோ வருகிறேன்" என்று சொல்லிக் கொண்டு இராகவன் உட் பிரவேசித்தான்.

**பெரியவர்.**—"இராகவா, விநாயகக் கடவுள் பிரசன்னமாகி இன்னும் மூன்று தினத்துக்குள் இந்த வேலையை நிறைவேற்றக் கட்டளையிட்டுப்போனார். மூன்று நாட்களுக்குள் இந்த விக்கிரகத்தை ஸ்தாபித்து விடவேண்டும். இது வரை எவ்வளவு பணம் சேர்ந்திருக்கிறது. கணக்குப் பார்த்துச் சொல்லு."

**இராகவன்.**—"சுவாமி, இன்று காலைவரை லட்சத்து எழுபத் தையாயிரம் ரூபா சேர்ந்திருக்கிறது. தலைக்கு இருபதினாயிரம் ரூபா தருவதாக வாக்குக் கொடுத்த பல

வான்குடி செட்டிமாரில் ஐந்துபேர்தான் பணம் கொடுத்திருக்கிறார்கள். இன்னும் ஐந்துபேர் பாக்கி."

பெரியவர்.—"உடனே சென்று அவர்களை அழைத்து வா. இன்னும் மூன்று தினங்களுக்குள் இந்தக் காரியம் நடை பெறவேண்டும்."

இராகவன் அப்படியே போய் அந்தத் தனவைசியரை அழைத்து வந்தான். அவர்கள் ஐவரும் அந்தப் பெரியவரை நமஸ்கரித்து நிற்க, அவர் அவர்களை உட்காரச் சொல்லி, பின் வருமாறு கூறலானார்.—

"ஐயா, வைசியகுல சீமான்களே, உங்கள் குலதெய்வமும், எம்பெருமானுமாகிய விநாயகக் கடவுள், இந்த விக்கிரகத்தை இந்த இடத்திலே ஸ்தாபிக்கும்படி எனக்கு கட்டளை யிட்டருளியதால் யான் இங்கு வந்தேன். அந்த ஸ்தாபனச் செலவுக்கு நீங்களெல்லாம் பணவுதவி செய்வதாக ஒப்புக்கொண்டீர்கள். அநேகர் ஒப்புக்கொண்ட படி பணம் செலுத்தி விட்டார்கள். ஏறக்குறைய முக்கால் பாகம் தொகை சேர்ந்து விட்டது. உங்களுடையது தான் பாக்கி. இன்று, மீண்டும் விநாயகப் பெருமான் எனது நிஷ்டையின்போது பிரசன்னமாகி இந்த வேலையை இன்னும் மூன்று தினங்களில் முடித்துவிடவேண்டுமென்று அருளிப்போனார். ஆகையால் நீங்கள் வாக்குக் கொடுத்த பணத்தை இன்று செலுத்தி விட்டால் மாத்திரம் விநாயகப் பெருமாள் அருளியபடி மூன்று தினங்களில் விக்கிரகஸ்தாபனம் நடைபெற முடியும். இல்லையேல் நடைபெறாது. வசூலான பணத்தையெல்லாம் திருப்பிக் கொடுத்துவிட்டு, விநாயகப் பெருமாளின் திருச்சித்தப்படி நடக்கநேரிடும். ஆகையால் நான் உங்களை இங்கே அழைப்

பித்தேன். நீங்கள் இதற்கு என்ன முடிவுசொல்லுகிறீர்கள்?''

என்று கேட்க, அந்தச் சீமான்கள் ஐவரும் சிறிது நேரம் யோசித்துவிட்டு மறுதினமே பணங்கொடுப்பதாகவும், விநாயகக் கடவுள் திருவுளப்படியே மூன்று தினங்களுக்குள் மாணிக்க விநாயகரை ஸ்தாபித்துவிட வேண்டுமென்றும் கேட்டுக் கொண்டார்கள்.

பெரியவர்.—"ஐயா, என்னால் ஆவது ஒன்றுமில்லை. எல்லாம் விநாயகப் பெருமானின் திருவருள். நீங்கள் உங்கள் வாக்கை நிறைவேற்றினால், மூன்று தினங்களுக்குள் இந்தவேலை முடியத் தடையில்லை'' என்றார்.

தனவந்தர் ஐவரும் சுவாமியின் கட்டளைப்படி நடப்பதாகக் கூறி, பெரியவருக்கு நமஸ்காரம் செய்து அவ்விடம் விட்டகன்றார்கள்.

அன்று மாலையில் நாகநாதபுரம் கதிரேசன் செட்டியார் வந்து சேர்ந்தார். பெரியவர் நிஷ்டை தெளிந்து இருந்தமையால், அப்பொழுதே அவரைப்பார்க்க உத்திரவு கிடைத்தது. கதிரேசன் செட்டியார் கொட்டகைக்குள் சென்று பெரியவருக்கு நமஸ்காரம் சொல்ல, அவர் பிரதி நமஸ்காரஞ்செய்து உட்காரச் சொன்னார்.

கதிரேசன் செட்டியார்.-"சுவாமிகளே பணம் கொண்டு வந்திருக்கிறேன்''

பெரியவர்.—"நல்லகாரியம், மந்திரத்துக்காகத்தானே?

கதிரேசன் செட்டியார்.—"மந்திரத்துக்காக ஐயாயிரமும், விக்கிரக ஸ்தாபனத்துக்காக பதினாயிரமுமாக, பதினையாயிரம் ரூபா கொண்டுவந்திருக்கிறேன்."

பெரியவர் உடனே இராகவனை அழைத்து, அந்தப் பணத்தை வாங்கிவைக்கும்படி கூறினார். பின்பு கதிரேசன் செட்டியாரைப் பார்த்து "நீர் காலதாமதமின்றி நடந்து கொண்டீர். அப்படியே நானும் மந்திரம் செய்துமுடிக்க வேண்டும். இன்னும் மூன்று தினங்களில் பூஜை நிறைவேற்றி எந்திரம் எழுதித் தந்துவிடுகிறேன். அதனிடையில் இந்த பஸ்பத்தைக் கொண்டுபோய் கொடும்" என்று கூறி நாலைந்து பொட்டலம் மருந்துகளை அவர்கையில் கொடுத்தார் பெரியவர்.

கதிரேசன் செட்டியார் விடைபெற்றுக்கொண்டு வீட்டுக்குச் சென்றார். இதுவரை அமராவதிக்கு பயந்திருந்ததுபோக, இனி அவளை தன்னிஷ்டம்போல ஆட்டிவைக்கும் காலம் வந்துவிட்டதென்று நினைத்து மனமகிழ்ச்சியால் தமக்குத் தாமே சிரித்துக்கொண்டார். இப்படியாக அவர் போய்க்கொண்டிருக்கையில் எதிரில் ஒரு மோட்டார் இரதம் வெகு விரைவாக வந்தது. அதில் யார் போகிறார்களென்று, பார்த்ததில் சொக்கநாதனும் இன்னொருவரும் இருப்பதைக் கண்டார். அதேசமயத்தில் சொக்கநாதனும் அவரைக்கண்டு, மோட்டாரை நிறுத்தும்படி செய்தார். கதிரேசன் செட்டியாரும் வண்டியை நிறுத்தி என்ன விசேஷமென்று கேட்டார்.

சொக்கநாதன்.—"நாங்கள் பலவான் குடியில் வந்திருக்கும் சுவாமியைத் தரிசிக்கப் போகிறோம். நீங்களும் கூட வரவேண்டும்."

கதிரேசன் செட்டியார்.—"நான் இப்பொழுதுதான் அங்கிருந்துவருகிறேன். நீங்கள்போய் வாருங்கள்."

சொக்கநாதன்.—"நாங்கள் போனவுடன் சுவாமியின்

பூர்ண மகிமையும் வெளிப்படும். இது நல்ல தருணம். சிரமத்தைப் பாராமல் கூட வாருங்கள்.''

கதிரேசன் செட்டியார்.—"நீங்கள் போனவுடனே என்ன பூர்ண மகிமை வெளிப்பட்டு விடும்?. வேடிக்கை செய்கிறதிதானுல் சொல்லுங்கள். நான் வீட்டுக்குப் போக வேண்டும்.''

சோக்கநாதன்.—"வேடிக்கையுமல்ல விளையாட்டுமல்ல. வெற்றி பெறும் விஷயமே. இதோ இருப்பவரும் ஒரு சுவாமிதான். இந்தச் சுவாமியைக் கொண்டுபோய் அந்தச் சுவாமிக்கு முன்முக முகமாய் விட்டுப் பார்த்தால் இரண்டு சுவாமிகளின் மகிமையும் நன்ருய் விளங்கிவிடும். மோட்டாரில் இடமிருக்கிறது வந்து ஏறிக்கொள்ளுங்கள்'' என்று சொல்ல, கதிரேசன் செட்டியார் அதற்கு சம்மதித்து மோட்டார் இரதத்தில் ஏறிக்கொண்டார்.



## பத்தொன்பதாவது அத்தியாயம்



### பெரியவரின் மறுரூபம்



இரவு ஒன்பதுமணி இருக்கும். சிவகுருசாமியும், இராகவனும் கொட்டகைக்குள் பேசிக்கொண்டிருக்கிருர்கள். மற்ற இரண்டு சிஷ்யர்களும் வெளியில் காவல் நிற்கிருர்கள்.

பெரியவர்.—இப்பொழுது எவ்வளவு பணம் சேர்ந்திருக்கிறது. எல்லாம் இங்கே கொண்டுவா. நான் பார்க்கட்டும்.

இராகவன் பணப்பெட்டியை எடுத்து பெரியவர் முன் திறந்து வைத்து மொத்தம் இரண்டு லட்சத்து முப்பத்தையாயிரம் ரூபா இருக்கிறது" என்றான்.

பெரியவர்.—"மாலையில் வந்த ஐவரில் மூன்றுபேர் அறுபதினாயிரம் ரூபா கொடுத்தார்களோ? அவர்களுக்கு இவ்வளவு பணம் உடனே எங்கிருந்து வந்தது?"

இராகவன்.—"அவர்கள் பணம் கொடுப்பதாய் ஒப்புக்கொண்ட மறுநாளே தங்கள் கடைகளுக்கு எழுதி தொகை தருவித்து கையில் வைத்திருந்தார்களாம்."

பெரியவர்.—"சரி. எல்லாம் நோட்டுகளாகவேயிருப்பது நமக்கு சௌகரியந்தான். நான் நாளைக் காலையில் மதுரை மீனாக்ஷியம்மன் தரிசனைக்காக போய், இனி நடக்க வேண்டிய வேலைகளுக்கு ஏற்பாடு செய்யவேண்டும். வெள்ளையன் செட்டியார் மோட்டார் இரதத்தைப் பற்றி ஏதும் ஆட்சேபனை கூறினரோ?

இராகவன்.—"கிடையாது. சுவாமிக்கு என்றதும் உடனே சம்மதித்து விட்டார்."

இந்த சமயத்தில் அந்தக் கொட்டகையின் தென்பக்கத்திலிருந்து மூன்று உருவங்கள் மெல்லன நடந்து முன் சென்றன. வட திசையிலிருந்து மூன்று பேர் கொட்டகையை நோக்கி வந்துகொண்டிருந்தார்கள்.

வட திசையிலிருந்து வந்த மூவரும் கொட்டகையின் வாசலைச் சமீபித்த அதே சமயத்தில் தென்பக்க மிருந்து மூன்று பேர் வந்து அவர்களுடன் கலந்து கொண்டனர். கொட்டகைக்கு வெளியே காவலிருந்த இரண்டு சிஷ்யரும் நித்திராதேவியின் வசப்பட்டிருந்ததால் அவர்கள் வரவை ஒருவரும் அறியவில்லை. வந்தவர்களில் இருவர்

திடீரென்று உட்பிரவேசித்தனர். அந்த அரவங்கேட்டு பெரியவருடன் பேசிக்கொண்டிருந்த இராகவன் "யார் அது?" என்று கூறிக்கொண்டு திரும்பினான். மறுக்ஷணத்தில் முன்னால் சென்றவருடைய வலதுகை முஷ்டி அவன் முகத்தில் பலத்துடன்மோத, அவன் நிலைதடுமாறி தரையிலே விழுந்தான் அதைக்கண்ட பெரியவர் ஓவென்றிரைந்துகொண்டு, புலித்தோலாசனத்திலிருந்து குதித்தெழுந்து முன்னால் நின்ற மனிதன்மீது பாய்ந்தார். முன்னால் நின்ற மனிதன் வேறெவருமல்ல; நமது நண்பர் பத்மநாதனே; அவர்கூட வந்தவர் இன்ஸ்பெக்டர் கேசவ நாயுடு. பத்மநாதன் பெரியவரின் பாய்ச்சலைக் கையால் விலக்கி, அவரைக் கீழேதள்ளி அவருடைய கைகளில் விலங்கு மாட்டிவிட்டு இன்ஸ்பெக்டர் கேசவ நாய்டுவைப் பார்த்து,

"இதோ இவர்தான், காரைக்குடியில் வீட்டோடு எரிபோன ஸ்ரீமான் இராமசுவாமி ஐயர்" என்று புன்சிரிப்புடன் கூறினார்.

இன்ஸ்பெக்டர் கேசவ நாய்டு.—"இது ஆச்சரியகரமான வேலை. தங்களால் நாராயணனுடைய உயிர்தப்பிற்று. இல்லையேல் அவன் அநீதமாய் மரணதண்டனை அடைவான் இந்தத் துஷ்டனும் யதேச்சையாய் ஊரைக் கொள்ளையடித்துக்கொண்டு திரிவான். இதற்குமுன் நீங்கள் வெளிப்படுத்தி யிருக்கிற குற்றங்களிலும் இது நூதனமானதென்று நான் மனதாரக் கூறுகிறேன்."

இதற்குள் சொக்கநாதனும் கதிரேசன் செட்டியாரும் அவ்விடம் வந்தார்கள். கதிரேசன் செட்டியார் சிவகுருஸ்வாமியென்று நம்பிய பெரியவர் கையில் விலங்குடன் போலீஸ் காவலில் நிற்பதைக்கண்டு பேச்சற்று ஸ்தம்பித்து விட்டார்.

சோக்கநாதன்.—"இந்த இரண்டு சுவாமிகளையும் முக முகமாய் விட்டால் இருவரின் பூர்ணமகிமையும் விளங்கு மென்று நான் சொல்ல வில்லையா?"

பத்மநாதன் மேஜையிலிருந்த விக்கிரகத்தைக் கையி லெடுத்து அதன் நெற்றியிலிருந்த இரத்தினத்தைச் சுட் டிக்காட்டி "இதுதான் முத்துக் கருப்பன் செட்டியார் வீட்டிலிருந்து களவுபோன வைரக்கல் என்று கூறினார்."

சொக்கநாதன் அதைக்கூர்ந்து பார்த்து—"அது பதக்க மாயிருந்ததே" என்க,

பத்மநாதன்.—"பதக்கமா யிருந்தது உண்மையே. ஆனால் இராமசுவாமி ஐயர் அது இணைக்கப்பட்டிருந்த தங் கக்கட்டை எடுத்து விற்றுவிட்டு, வைரக்கல்லை இந்த வேலைக்கு உபயோகப்படுத்தி யிருக்கவேண்டும்."

கதிரேசன் செட்டியார் அதைபார்த்து "என்னிடம் இராமசுவாமி ஐயர் என்பவன் கொண்டுவந்த தங்கமாலையில் இதைப்போல ஒரு வைரம் இருந்தது" என்றார்.

பத்மநாதன்.—"இராமசுவாமி ஐயர் என்பவனா? இதோ நிற்கிறானே இவன் யாரென்று பாருங்கள்" என்று சொல் லிக்கொண்டு கையில் விலங்கு பூட்டப்பட்டு நிற்கும் கிழ வனை அணுகி அவன் வேஷத்தைக் கலைத்தார். உடனே கிழவன்போலிருந்த அவனுடைய தோற்றம் மாறி நடுப் பிராயமுள்ள ஒரு மனிதனாகக் காணப்பட்டான். கதிரேசன் செட்டியாரும், சொக்கநாதனும் அவன்தான் இராமசுவாமி ஐயரென்று கூறினார்கள்.

இன்ஸ்பெக்டர் கேசவ நாயுடு போலீசுச் சேவகரைக் கூப்பிட்டு இராமசுவாமி ஐயரையும், இராகவனையும் அவர்

கள் வசம் ஒப்புவித்து அங்கிருந்த பணப்பெட்டியை தாமே எடுத்துக் கொண்டார்.

கதிரேசன் செட்டியார்.—"ஐயோ, நான் இன்றுதானே பதினையாயிரம் ரூபா கொண்டுவந்து கொடுத்தேன், அதெல்லாம் தொலைந்ததே."

பத்மநாதன்.—"பயப்படாதேயுங்கள். ஒன்றுந்தொலையாது. எல்லாப்பணங்களும் இந்தப் பெட்டியிலேயே இருக்கிறது. அதைப்பற்றி விசாரணைசெய்து அவரவர் பணத்தை அவரவருக்குத் திருப்பிக் கொடுத்து விடுவார்கள்."

சொக்கநாதனும் அப்படியே நடக்குமென்று உறுதி கூறினதின்மேல் கதிரேசன் செட்டியார் சற்றே மனந்தேறினார். அதனிடையில் சிவகுரு ஸ்வாமிகள் போலீசாரால் கைதுசெய்யப் பட்டாரென்று ஊரெங்கும் தெரிந்து விட்டது. பணங்கொடுத்த சீமான்களெல்லாரும் துடித்துப் பதைத்து எழுந்து ஓடிவந்தார்கள். திரளாக ஜனங்கள் கூடி விட்டனர். எங்கும் லாந்தர் மயமாகவே யிருந்தது.

இனி அங்கு தம் தாமதிப்பது அவசியமல்லவென்று பத்மநாதன்கூறி விநாயக விக்கிரகத்தை எடுத்துக்கொண்டு புறப்பட்டார். இன்ஸ்பெக்டர் கேசவ நாயுடு தமது கைதிகளைப் போலீஸ் பந்தோபஸ்தில் அனுப்பிவிட்டு பத்மநாதனோடு வந்தார். அவர்கள் இருவரும் கதிரேசன் செட்டியாரும், சொக்கநாதனும் மோட்டர் இரதமேறி காரைக்குடிக்குப் புறப்பட்டார்கள்.

இன்ஸ்பெக்டர் கேசவ நாய்டு.—"ஐயா, தாங்கள் இதை எப்படிக் கண்டுபிடித்தீர்களென்று எனக்கு இன்னும் விளங்கவில்லை."

பத்மநாதன் முத்துக் கருப்பஞ் செட்டியார் வீட்டில்

நடந்த களவையும் தமது விசாரணையையும் பற்றிச் சுருக்கமாகக்கூறி,

“எனக்கு முன் சம்பவங்களைப்பற்றி அவ்வளவுதூரம் தெரிந்திருந்ததாலும், எரிந்துபோன வீட்டின் மரக்கட்டுகளில் மண்ணெய் பூசியிருந்ததைக்கவனித்ததாலும் இந்த இராமசுவாமி ஐயர் இறக்கவில்லை; ஏதோ சூழ்ச்சி செய்கிறான் என்று சம்சயம் உண்டாயிற்று. களவுபோன வைரக்கல் விலையேறப் பெற்றதால் அவன் தானாக அதை விற்பனை செய்வது கஷ்டசாத்தியம். ஆகையால் தக்க அந்தஸ்துள்ள ஒருமனிதன் உதவியை அவன் தேடவேண்டியதாகும் என்று உணர்ந்தேன். அதன்மேல் அவ்வளவு அந்தஸ்துள்ள யாராவது ஆட்கள் அவனுக்கு பழக்கமா என்று விசாரணை செய்ததில் காரைக்குடியில் ஒரு வீட்டில் மின்சார விளக்குப் போட்டதற்கு அவன் ஏஜண்டுபோல திரிந்துகொண்டிருந்ததாகவும், அவ்விஷயமாய் சென்னப்பட்டணம் மார்ஷல் கம்பனியிலிருந்து ஹாமில்டன் என்ற ஓர் ஐரோப்பிய மின்சார வேலைக்காரன் வந்திருந்ததாகவும் அறிந்து, அந்த ஹாமில்டனிடம் இராமசுவாமி போயிருக்கக்கூடுமென்று எண்ணி சென்னைக்குப்போய் மிஸ்டர். ஹாமில்டனைக் கண்டதில் அவர் இராமசுவாமி தன்னிடம் வந்து நகை வியாபாரிகளான பி. ஆர். அண்ட் சன்ஸ் கம்பனியிலுள்ள ஒரு துரைக்கும் பிளாஸ்டர் பதுமைகள் செய்கிற காக்ஸ் என்பவருக்கும் சிபாரிசுக் கடிதங்கள் பெற்றுச் சென்றதாகவும் பி. ஆர். அண்ட் சன்ஸ் கம்பனியில் ஒரு செட்டியாருக்காக ஏதோ நகை வாங்கவேண்டுமென்று கூறினதாகவும் சொன்னார். நான் உடனே பி. ஆர். அண்ட் சன்ஸ் கம்பனிக்குப்போய் விசாரித்ததில் ஒரு பிராமணன்

ஹாமில்டன் துரையிடமிருந்து ஒரு கடிதம் கொண்டுவந்த துண்டென்றும், அவன் ஒரு தங்கக்கைக்கடிகாரம் வேண்டு மென்று அங்குள்ள கடிகாரங்களை யெல்லாம் பார்வையிட்டு ஒன்றும் வாங்காமலே போய்விட்டதாகவும் கூறினார்கள்.

இனி சிற்பி காக்ஸைப்பார்க்க சென்றபொழுது அவர் உதகமண்டலம் சென்றுவிட்டதாக அறிந்து உதகமண்ட லம் போனேன். ஹாமில்டன் துரையிடமிருந்து கடிதம் வாங்கிவந்த ஒரு பிராமணன் அவரிடம்போய் ஒரு சிறிய ஆனைமுகக் கடவுள் செய்து கொடுக்கக் கேட்டு அதற்கு மாதிரியாக ஒரு படத்தைக் காட்டி அம்மாதிரிவிக்கிரகம் செய்து கண்களிலும், நெற்றியிலும் இரத்தினங்கள் பதி த்து, வெகு காலத்துக்குமுன் செய்யப்பட்டதுபோல அதன் தோற்றத்தை மாற்றித் தரவேண்டு மென்று கேட்டதாகவும், அவர் அப்படிச் செய்வதற்கு ஆயிரத்து ஐந்நூறு ரூபா பிடிக்கும் என்று சொல்ல, அவன் ஒப்புக் கொண்டு முன் பணம் கொடுத்துச்செய்து வாங்கிக்கொண்டு போனதாகவும், அதன் நெற்றியில் பதிக்கப் பட்டிருந்த கல் நல்ல ஒளியுள்ள இரத்தினமாய்க் காணப்பட்ட தென்றும் கூறினார். இனி அவன் இருக்குமிடத்தையும் கண்டுபிடிக்க வேண்டிய வேலைதான் பாக்கியிருந்தது. நான் அதைப் பற்றி யோசித்துக் கொண்டிருக்கும் பொழுதே ஸ்ரீமான் சொக்கநாதன் சிவ குருஸ்வாமிகளையும், மாணிக்க விநாயக ரையும் குறித்தெழுதின கடிதம் எனக்குக் கிடைத்தது. உடனே உங்களுக்கு தந்தி கொடுத்துவிட்டு இங்குவந்தேன். இங்கு நடந்தவைகளை நீங்களே நேரில் பார்த்திருக்கிறீர் கள்" என்று சொல்லி முடித்தார்.

கதிரேசன் செட்டியார்.—"இவன் என் பெயரையும்,

மனைவி பெயரையும் கூறி, நான் வந்த நோக்கத்தையும் கூறினதினால் தான் நான் பிரமித்து அவன் கேட்டபடியே ரூபாய் கொண்டுபோய் கொடுத்து விட்டேன்."

பத்மநாதன்.—"இவனுக்கு இந்த வட்டகையிலுள்ள தனவைசிய சீமான்களின் பெயர்களும் குடும்ப விஷயங்களும் தளபாடமாகத் தெரியும். ஆதலின் அவன் உங்கள் ஊரையும் பெயரையும் கூறினது விசேஷமல்ல. அதெல் அவனுக்கு மிகவும் எளிது."

சோக்கநாதன்.—"ஆமாம். நானும் அன்று என் பெயரைச் சொன்னவுடனே ஆச்சரியப்பட்டேன். இப்போது எனக்கு விளங்குகிறது. இவன் என்னை நன்றாய் அறிவான். அதுவுமன்றி இவன் எல்லாருக்கும் ஊர், பெயர் சொல்லவில்லை. ஆகையால் தெரிந்த ஆட்களுக்கு மாத்திரம் சொன்னதாகத் தெரிகிறது."



## இருபதாவது அத்தியாயம்



### ஓர் கனவு—நவபுரிக் காட்சி



காலை பத்துமணி இருக்கலாம் ஒரு மோட்டார் இரதம் வேகமாய் வந்து செவல்பட்டியில் முத்துக்கருப்பன் செட்டியார் வீட்டு வாயிலில் நின்றது. அதிலிருந்து ஸ்ரீமான்கள். பத்மநாதனும், சொக்கநாதனும் இறங்கி உட்பிரவேசித்தார்கள். பத்மநாதன் கையிலே இரத்தினம் பதித்த விநாயக விக்கிரகம் இருந்தது.

முத்துக்கருப்பன் செட்டியாருக்கு நமஸ்காரம் செய்து

அவர் முன்பாக அந்த விக்கிரகத்தை வைத்து, "இதோ இருக்கிறது உங்கள் வைரக்கல்" என்று கூறி அதன் நெற்றியில் அழுத்தியிருந்த வைரக்கல்லைக் காண்பித்தார். அதற்குள் சோமசுந்தரமும் அங்குவந்து தான் அந்த வைரக்கல்லைப்பற்றி முன்னிரவில் ஓர் அற்புதமான கனவு கண்டதாகக் கூறினார்.

முத்துக்கருப்பன் செட்டியார்.—"களவு போனது வைரப் பதக்கமல்லவா? இப்பொழுது அந்தக் கல் மாத்திரந்தானே கிடைத்திருக்கிறது."

பத்மநாதன்.—"ஆமாம். களவுபோன பதக்கத்திலுள்ள வைரந்தான் இது. திருடர் இதைச் சுற்றியிருந்த தங்கக் கட்டை உடைத்தெடுத்து விற்றுப் பணமாக்கிக் கொண்டனர். ஆனால் இந்த வைரம் விலை யேறப்பெற்றதால் அவர்களால் விற்பனை செய்யமுடியாமல் வேறு தந்திரம் செய்தார்கள்."

என்று ஏற்கனவே வாசகர்களுக்குத் தெரிந்துள்ள விபரங்களை ஆதியோடந்தமாய் எடுத்துரைத்தார். எல்லாரும் ஆச்சரியத்துடன் கேட்டுக் கொண்டிருந்தனர்.

பத்மநாதனது உரை முடிந்ததும சோமசுந்தரம் தாம் கண்ட கனவை விவரிக்கவேண்டுமென்று சொக்கநாதனும் பத்மநாதனும் அவரை வற்புறுத்த அவர் பின்வருமாறு கூறினார்:—

"நேற்று மாலையில் காற்று வாங்குவதற்காக ஊருக்கு வெளியே சாலைமார்க்கமாய்ச் சில தூரம் சென்றுவந்தேன். சாலையில் மழைக்காலத்தில் வண்டிச் சக்கரங்களால் உண்டான பள்ளங்கள் இன்னம் மறையாமையால் பாதை கரடுமுரடாயிருந்தது. நடப்பதில் கஷ்டம் தோன்றிற்று. என்

இந்தப் பாதைச்செம்மை செய்யப்படலாகாது என்று எண்ணினேன். பின்னர் திரும்பி ஊர்க்குள் புகும்பொழுது வீடுகள் ஒழுங்கற்று நிற்பதும், தெருக்களின் கேவல நிலையும் என் மனதில் உறுத்தின. 'ஏன் நேரான தெருக்களாய் அமைக்கக்கூடாது? அவற்றை செப்பனிட்டுச் சீராக வைத்தால் நல்லதல்லவா ? ஊருக்குப் பக்கத்தில் பலரும் வந்து கூடி விளையாடவோ, வேடிக்கையாயிருக்கவோ தக்கதான ஓர் மைதானம் இருந்தால் ஊருக்குச் சிறப்பாய் இருக்குமே —இம்மாதிரியான பற்பலநினைவுகள் என்மனதிலெழும்பின. நான் போஜன மருந்திப் படுக்கைக்குச்செல்லும் பொழுதும் அந்த எண்ணங்கள் என் மனதை விட்டு அகலவில்லை. அங்ஙனம் சிந்தித்துக்கொண்டே யிருக்கையில் நான் தூங்கிப் போயிருக்க வேண்டும் என்று நினைக்கிறேன். ஆனால் அந்தச் சமயத்தில் நான் பிரக்ஞையுடனிருந்ததாகவே எனக்கு தோன்றினது. பின்புதான் நான் உணர்வு நிலையிலிருந்து விலகி சொப்பன நிலையில் பிரவேசித்திருந்தேன் என்று எனக்கு புலனாயிற்று. முன்னேரத்தில் என் மனதில் ஓடிக் கொண்டிருந்த எண்ணங்கள்தான் என் விருப்பத்துக் கிணங்க மறுரூபங்கொண்டு மனோகரமான ஓர் கனவாக எனக்குக் காணப்பட்டதோ என்னவோ என்னால் சொல்ல முடியாது. ஆனால் நான் இது வரையில் அக்கனவைப் போல சிறப்பானதும், இன்பமானதுமான ஓர் காட்சியை பார்த்ததில்லையென்று துணிந்துசொல்ல மாட்டுவேன்.

ஏற்கனவே சொன்னபடி நான் சிந்தையில் ஆழ்ந்திருக்கையில் திடீரென்று ஒரு சுழற்சியில் அகப்பட்டு சக்காகாரமாகச் சுழன்று வருவதுபோல எனக்கு உணர்ச்சி உண்டாயிற்று. மறுகணத்திலே ஓர் விசாலமான பாதை

என் முன் தோன்றிற்று. நான் அந்தச் சுழற்சியிலிருந்து விடுபட்டு அந்தப்பாதையை அடைந்தேன். அதன் இருமருங்கிலும் விரிந்து, இலையடர்ந்த விருட்சங்கள் நின்றன. அமர்ந்த மெல்லிய காற்று அந்தவிருட்சங்களின் இலைகள் நடுவே புகுந்து அவைகளை அசைக்க, அதிலிருந்து ஒருவித இரைச்சல் எழும்பிற்று. அந்த இரைச்சலும், அழகிய பாதையும், அடர்ந்த தருக்களின் நேர்மையும் மனதுக்கு நிம்மதியையும், குதூகலத்தையும் தந்தன. கீழ்திசை உதித்துவரும் குமாரசூரியன் தன் ஒளிதரு கிரணங்களை எங்கணும் பரப்பிக் கொண்டிருந்தான். நான் உள்ளக் கிளர்ச்சியடைந்து அந்தப்பாதையிலே உல்லாசமாகச் சென்று கொண்டிருந்தேன். அதிகாலையா யிருந்தால் வேறு மனிதர்கள் இன்னும் அங்கு காணப் படவில்லை. இப்படி நான் சென்று கொண்டிருக்கையில் எதிரில் சிறிது தூரத்திலே ஒரு பட்டண மிருப்பது என் கண்களுக்கு புலப்பட்டது. அந்தப் பட்டணம் மரச்சோலைகளால் மூடப்பட்டிருப்பது போல தோன்றினது. அதைப்பார்க்க ஆசைகொண்டு விரைந்து நடந்து அப்பட்டணத்தைசமீபித்தேன். இப்பொழுது பல திக்குகளிலும் அலங்காரமாக உடை தரித்துள்ள ஸ்திரிபுருஷர்கள் தங்கள் தங்கள் கருமமே கண்ணாய் சென்று கொண்டிருந்தார்கள். அந்தப் பட்டணத்தின் பெயரென்ன, அந்த ஜனங்கள் எந்நாட்டினர் என்று அறிய விரும்பி என் எதிரே வந்த ஓர் கண்ணிய புருஷனை நெருங்கி,

"ஐயா இவ்வூரின் பெயரென்ன? இங்குள்ளார் எந்த நாட்டினர்?" என்று வினவினேன்.

அவர் ஆச்சரியத்துடன் என்னை உற்று நோக்கி,

"வாலிபனே, நீர் இந்தப் பாகத்துக்கே சுத்த அன்னி

யன் போலிருக்கிறது. இல்லையேல், இவ்வூரைப் பற்றி நீர் கேள்விப்பட்டிருப்பீர். இந்த ஊரின் பெயர் நவபுரி. நாட்டுக் கோட்டையாரென்ற தனவைசியர்களே இப்பட்டணத்தைக் கட்டி அதில் வாழுகின்றனர். உம்மைப் பார்த்தால் ஓர் தனவைசியன் போலவே தோன்றுகிறது. அப்படியானால், உமக்கு இந்த நகரத்தைப் பற்றித் தெரியாதது ஆச்சரியமே.'' என்று சொன்னார்.

"தாங்கள் சொல்லியபடி நான் ஓர் தனவைசியன்தான். ஆனால் இதுவரையில் இவ்வழகிய பட்டணத்தைப் பற்றிக் நான் கேள்விப்பட்டதில்லை'' என்று கூறினேன்.

"சரி, இந்தப் பட்டணத்தைச் சுற்றிப்பார்க்க உமக்கு அவா விருப்பதாக உணர்கிறேன். போய் பாரும். நான் பட்டணத்துக்கு வெளியே போக வேண்டிய திருக்கிறது'' என்று கூறி அவர் போய்விட்டார்.

நான் அவ்விடம் விட்டுப் பெயர்ந்து ஓர் வீதியிலே பிரவேசித்தேன். அதன் விசாலமும் நேர்மையையும், அதைப் பட்டணத்தின் பிரதான வீதிகளில் ஒன்றென எனக்கு உணர்த்தின. இருபக்கங்களிலும் குடியிருப்பதற்கு வசதியும், அலகங்காரமுமுள்ள வீடுகள் நின்றன. ஒவ்வொரு வீட்டின் முன்பாகத்திலும் பலவித புஷ்பச் செடிகளும், படர்கொடிகளும் வளர்ந்து கொண்டிருந்தன. மதலைமொழிகள் என் செவியில்பட அந்தப் பக்கமாய் திரும்பிப் பார்த்தேன். ஆடைதரித்த பிள்ளைகள் விளையாடிக் கொண்டிருந்தார்கள். அம்மணமா யில்லாது எல்லாப் பிள்ளைகளும்,—கைக்குழந்தைகளுங்கூட—அழகாய் உடை தரித்துக் கொண்டிருந்ததைப் பார்த்து ஆச்சரிய மடைந்தேன். சில வீடுகளுக்கப்பால் ஒரு இடைவெளி இருந்

தது. அதில் ஒருகிணறு; அந்தக் கிணற்றைச் சுற்றி ஸ்திரிகளும், சிறுமிகளும் நின்று தண்ணீர் திரட்டிக்கொண்டிருந்தார்கள். பிந்திவந்த ஸ்திரிகளெல்லாரும் பொன்போல ஒளிரும் செப்புக் குடங்களை வரிசையாக வைத்துக்கொண்டு அங்கிருந்த ஓர் கல்லாசனத்தின் மேல் அழகாய் வீற்றிருந்து மெல்லிய குரலிலே தமக்குள் சம்பாஷித்துக்கொண்டிருந்தார்கள். அரைமைல் தூரம் கேட்கும்படி உச்சத்தொனியிலே பேசும் அங்கனைமார் வாழும் நாட்டிலிருந்து வந்த எனக்கு அது பேராச்சரியமாக இருந்தது. அந்த ஸ்திரிகளெல்லாரும் ரவிக்கை போன்ற ஓர்வகை மேல் சட்டையணிந்து அதன்மேல் அழகாகவும் அடக்கமாகவும் அலங்காரமான நாட்டு சேலைகளைத் தரித்திருந்தார்கள். தண்ணீர் எடுத்துக்கொண்டிருந்த சிறுமிகளில் ஒருவள் கிணற்றுக்கருகில் நின்று பல்துலுக்க எத்தனித்தாள். அதைக்கண்ட இன்னொருமாது,

"ஏனடி விசாலாக்ஷி, குடிதண்ணீர் எடுக்கிற கிணற்றண்டையிலா பல்துலக்கித் துப்புகிறது? நல்ல வேலை செய்தாய்போ." என்றாள். மற்றப் பெண்களும் அவளுக்கு துணையாக அந்தச் சிறுமியைக் கண்டிக்க, அவள்,

"அம்மம்மா, கிணற்றுக்கு வெளியிலே முகங்கழுவினால் என்ன கெட்டுப்போகும்," என்றாள்.

"என்ன கெட்டுப்போகுமா? நீ இங்கே பலதுலக்கி துப்புகிற எச்சில் தண்ணீரெல்லாம் தரையிலே சுவறி கிணற்று நீரிலேதானே போய்க்கலக்கும். அதுகுடிநீராச்சே. அதை அசுத்தப் படுத்தலாமா? நீ வீட்டிலாவது வேறெங்காவது போய் பல் விளக்கிறதுதானே" என்று முதலில் பேசிய ஸ்திரிகூறினாள். உடனே அந்தச் சிறு

பெண், "வீட்டிலே போய் பல்துலக்கிக் கொள்ளுகிறேன்" என்று சொல்லி நீர் நிறைந்திருந்த ஒரு பெரிய செப்புக் குடத்தைத் தூக்கிக் கொண்டு வீட்டை நோக்கி விரைவாய் நடந்தாள்.

நான் அவ்விடம் விட்டு முன்னேக்கிச் சென்றேன். சிறிது தூரத்தில் ஒரு குறுக்குத் தெரு நான் போனபெரிய வீதியுடன் சந்தித்தது. அந்தத்தெரு அகலத்தில் சிறிது குறைந்திருந்தாலும் நான் சென்ற வீதியைப் போலவே நன்ருய் செப்பனிடப் பட்டிருந்தது. அங்கு சென்றதும் என் காதில் பட்ட யந்திரசத்தத்தால் சமீபத்தில் ஏதோ ஒருவிதத் தொழிற்சாலை இருக்க வேண்டுமென்று உத்தேசித்துக்கொண்டு அந்தக் குறுக்குத்தெருவில் திரும்பி யந்திர சத்தம் கேட்கிற பக்கமாய்ப் போனேன். சிறிது நேரத்துக்குள் அந்த ஊரின் வடபாகத்திலுள்ள ஒரு மைதானத்தை யடைந்தேன். வருவோரும் போவோருமாக பலஜனங்கள் அங்கு நடமாடிக் கொண்டிருந்தார்கள். ஒருபக்கத்திலே நெல்லறைக்கிற ஓர் யந்திரசாலை யிருந்தது. அங்கு வேலை நடக்கிற சத்தந்தான் நான் கேட்ட யந்திரத்தொனி என்று அறிந்துகொண்டேன். அந்த யந்திரசாலைக்கு பக்கத்தில், அந்தப் பட்டணத்துக்கு மின்சார வெளிச்சம் போடுவதற்கு வேண்டிய மின்சாரம் சக்தி உண்டாக்கும் ஓர் யந்திர நிலையமும் இருந்தது. அவற்றை யெல்லாம் சுற்றிப் பார்க்குமுன் நேரம் காலை பத்து மணிக்கு மேலாகி விட்டது எனக்குப் பசி யெடுத்தது. அந்த மைதானம் ஜனப்புளக்கமுள்ள இடமாயிருந்ததால் அங்கு யாராவது நாட்டுக் கோட்டைப் பெண்கள் பழங்களாவது பலகாரங்களாவது விற்பனை செய்ய வந்திருப்பார்கள். அவர்

களிடம் எதையாவது வாங்கிப்புசித்து பசியாறலாமென்று எண்ணி அங்கு ஜனங்கள் கூடிநின்ற மரத்தடிகளையும், அங்கிருந்த ஊருணிக்கரையையும் சுற்றிவந்தேன். அப்படிப் பலகாரம் விற்கும் பெண்கள் ஒருவளேனும் காணப்படவில்லை. "சரி இதற்கு நவபுரி என்று பெயர் ஏற்பட்டிருப்பதால் எல்லா நடவடிக்கைகளுமே நவமாயும், நாகரீகமாயும் இருக்கும் போலிருக்கிறது" என்று எண்ணிக்கொண்டு, அந்த குறுக்குத் தெருமார்க்கமாய் மீண்டும் பெரிய தெருவுக்குப்போய், நகரத்தின் மத்திய பாகத்தை நோக்கி நடந்தேன். அங்கு சில சிற்றுண்டி கடைகளும் போஜனவிடுதிகளும் இருந்தன. நான் ஒரு போஜன விடுதியில் நுழைந்து பசி தீரஉண்டேன். உண்டபின் களைப்புநீங்க அங்கு உட்கார்திருக்கையில் அவ்விடுதிக்காரன் சொல்லுவான்,—

"ஏனையா உஷ்ணமான நேரத்திலே இங்கு உட்கார்ந்து கொண்டு கஷ்டப்படுகிறீர். இன்னும் கொஞ்சதூரம் போவீரானல் பட்டணத்தின் மத்தியிலே பெரிய நந்தவனமும் அதில் வாசக சாலையும், வேறு மண்டபங்களும் இருக்கின்றன. அங்கேபோய் சுகமாய் இருக்கலாமே" என்றான்.

அதைக் கேட்டதும் நான் அவ்விடம்விட்டு நீங்கி நந்தவனத்தை நாடிச்சென்றேன். சில நிமிஷங்கள் நடந்தபின் நந்தவனத்தின்கீழ் எல்லையை அடைந்தேன். நான் போன வீதி அந்த நந்தவனத்தை ஊடறுத்துச்சென்று மறுபக்கமும் நெடுந்தூரம்வரை வீடுகளுக்கு நடுவே செல்வதாக தோன்றிற்று.

அந்த நந்தவனம் நவபுரி என்னும் அந்தப்பட்டணத்தின் நடுமையத்தில் அமைக்கப்பட்டுள்ளது. சுமார் அரை மைல் சதுர மிருக்கலாம். அதைச் சுற்றிலும் ஓர் ரஸ்தா

அமைக்கப்பட் டிருந்தது. பிரதான வீதிகள் மாத்திரம் அந்த நந்தவனத்தை ஊடறுத்து மறுபுறம்போயின. மற்ற வீதிகள் நந்தவனத்தைச் சுற்றிப்போகும் ரஸ்தாவிலே வந்து முடிவுபெற்றிருந்தன. நான் கீழ்திசையிலிருந்து அந்த நந்தவனத்தில் பிரவேசித்ததாகச் சொல்லியிருக்கிறே னல்லவா? அந்தப் பக்கத்தில் ஓர் பெரிய அச்சடிக்கும் யந்திரசாலை இருந்தது அதில் "நவபுரி நண்பன்" என்று ஓர் வாரப்பத்திரிகை பிரசுரிக்கிறார்கள். நான் ஒரு பத்திரிகை வாங்கிக் கொண்டு தென்பக்கமாகத் திரும்பினேன். அங்கு ஓர் சிறிய கோவில் காணப்பட்டது. அந்தச் சமயத்தில் "கோவிலைக் கண்டால் கும்பிட்டெழுந்திரு" என்ற வசனம் என் ஞாபகத்துவர, அங்கு சென்று சுவாமி தரிசனம் செய்துவாலாமென்று போனேன். கோவிலில் பளிங்குக் கல்லாலாய மரகதம்போன்ற விநாயக சுவாமி இருப்பதைக்கண்டதும் என் கரங்கள் தானகவே கூப்பிக்கொண்டன. என்மனம் எல்லாம் வல்ல எம்பெருமானைச் சிந்திக்கலாயிற்று. இப்படியாக பகவத்தியானத்திலே பல நிமிஷங்கள் கழித்தபின் அங்கிருந்து புறப்பட்டு,"பக்திக்கும் நாகரீகத்துக்கும் உறைவிடமான இத்துணைச் சிறந்த ஓர் நகாத்தை ஸ்தாபித்தவர்களின் ஞானமே ஞானம்" என்று மனதிலுன்னிக்கொண்டே அந்த நந்தவனத்தின் ஊடாகச்செல்லும் பல கிளைவழிகளில் ஒன்றைப்பற்றி மேல்பக்கமாய் நடந்தேன். அந்த பூங்காவிலே கனிவிருட்சங்களும், புஷ்பச்செடிகளும் நிரை நிரையாக செழித்து வளர்ந்தன. ஆங்காங்கு படர்கொடிப் பந்தல்கள் காணப்பட்டன. இடையிடையே ஜனங்கள் நடப்பதற்காக உலா பாதைகள் குறுக்கும் நெடுக்கமாய் ஓடின. செயற்கை ஊற்றுகள் வெள்ளிய நீரை அந்தரத்தில் எறிந்து

கொண்டிருந்தன. அவைகளைப் பார்த்துக்கொண்டே நான் மேல்பக்கம் சேர்ந்தேன். அங்கு ஓர் பெரிய மண்டபம் இருந்தது. "நவபுரி வாசகசாலை" என்று அதன்முன் விளம்பரப் பலகை நாட்டப்பட்டிருந்தது. அந்த மண்டபத்துள் புகுந்தேன். அங்கு பல நீண்ட மேஜைகளில் பத்திரிகைகள் வரிசையாக வைக்கப்பட்டிருந்தன. சிறப்பாக உடுத்துக் கொண்டிருந்த அநேகர், வாலிபரும், முதியோருமாக அங்கு உட்கார்ந்து வாசித்துக்கொண்டிருந்தார்கள். புஸ்தகள் நிறைந்திருந்த பல கண்ணாடி அலுமாரிகள் இருந்தன. ஏறக்குறைய 3000 புத்தகங்கள் இருக்குமென்று நான் மதிப்புப்போட்டுக்கொண் டிருக்கையில் அங்கிருந்தவர்களில் ஒருவர் என்னைப் பார்த்து,

"தம்பி நீர் இவ்வூருக்கு அன்னியனோ" என்று கேட்க, நான் "ஆமய்யா அது உங்களுக்கு எவ்விதமாய்த் தெரிந்தது?" என்றேன்.

"நீர் இங்குவந்து இவைகளை யெல்லாம் வெகு ஆச்சரியத்துடன் பார்ப்பதனாலேயே நீர் இவ்வூருக்குச் சுத்த அன்னியனென்று சுலபமாய்த் தெரிந்துகொண்டேன்" என்று அந்த நவபுரிக்காரர் கூறினார்.

"ஐயா இந்த ஊர், இதன் பெயருக்கேற்ப புது ஊராகவே யிருக்கிறது. நான் இதற்குமுன் இதைப்பற்றிக் கேள்விப்பட்டதே யில்லை. இது நாட்டுக்கோட்டையார் நகரமென்று காலையில் ஒருவர் என்னிடம் சொன்னார். நானும் ஒரு நாட்டுக்கோட்டை செட்டியார் தான். எனக்கு இவ்வூரின் நேர்மை புதுமாதிரியாகத் தெரிகிறது" என்று சொன்னேன்.

"இந்த ஊர் நன்ருய் காணப்படுகிறதா, இல்லையா? என்று நவபுரிக்காரர் கேட்டார்."

"மிகவும் சிறப்பாகவே இருக்கிறது" என்றேன். அதைக்கேட்டு அவர் சொல்லுவார்.—

"தம்பி, நீர் நாட்டுக் கோட்டையாராக இருப்பதால் இவ்வூர் கட்டப்பட்ட நோக்கத்தைப்பற்றி நான் உமக்கு விவரித்துக் கூறுவது என் கடமையாயிருக்கிறது. நமது நாட்டுக்கோட்டையாரின் வழக்கங்கள் உமக்கு நன்ருய்த் தெரிந்திருக்கும். அந்தப் வழக்கங்களில் அனேகம் தற்காலப் போக்குக்கு மாருனதாகவும், சமூகமுற்போக்குக்கு தடைகளாகவும் இருக்கின்றன. அந்த வழங்களில் சிலவற்றைக் கூறுகிறேன் கேளும். முதலாவது வசிப்பதற்குத் தக்க சௌகரியமில்லாத, இடவிசாலமான வீடுகளைக் கட்டுதல். அப்படிப்பட்ட வீடுகளில் வெளிச்சமும் காற்றும் உட்புகத் தக்க சாதனங்கள் இருப்பதில்லை. அதனல் தேக சௌக்கியத்துக்கு இடையூறு உண்டாகிறது. அவற்றைக் கட்டுவதற்கு பெருவாரியான பணச்செலவு நேரிடுகிறது. பிரயோஜனமோ ஒன்றுமில்லை. இரண்டாவது பெண்களுக்கு கிரயம் வாங்குகிருர்கள். இது. தீமையான ஒரு வழக்கம். மூன்ருவது கலியாணம், சாந்தி முதலிய விசேஷ காலங்களில் கண் மூடித்தனமாக பணத்தை வாரி வீணிலே இறைக்கின்ருர்கள். இன்னும் இவை போன்ற பல பழக்க வழக்கங்கள் இருக்கின்றன. அவை யெல்லாம் நமது ஜாதீய முன்னேற்றத்துக்கு பாதகமானவை. இவைகளைப்பற்றி நம்மவரில் முன் யோசனைக்காரரான சிலர் சிந்தனை செய்து இந்தப் பழக்க வழக்கங்களை விரைவில் மாற்றும்படி கிளர்ச்சி செய்து வருகின்றனர். அநேகர் அதனுண்மையை உணர்ந்து

தீதான பழக்கங்களை விலக்கிவிட்டு காலத்துக் கேற்றவாறு நவமான—ஜாதீய முற்போக்குக்கு அநுகூலமான—சீர்திருத்த முறைகளை அநுஷ்டிக்க மனங்கொண்டனர். அவர்களின் புதிய உற்சாகம் நாளடைவில் மங்கி, சேர்க்கை வாசனையின் பலத்தால் பக்கத்திலுள்ளவர்களைப்போல வாளா இருந்து விடுவார்களென்று எண்ணி இந்த உபாயம் செய்யப்பட்டது. என்னவெனில், புதுமுறைகளை அநுசரிக்க மனங் கொண்டோரை யெல்லாம் சில நிபந்தனைகளுக்குக் கட்டுப்படுத்தி இந்தப் புதிய ஊரை கட்டி இதில் அவர்களைக் குடியேற்றுவித்தார்கள். இந்த ஊரின் நடுவிலே ஜனங்கள் சாவகாசமான நேரங்களில்—சாதாரணமாக மாலை நேரத்திலே—உல்லாசமாக கூடி மனங்களிப்பதற்காக நந்தவனமும், அதில் ஒரு பக்கம் அச்சாபீசும், ஒரு புறம் புத்தக சாலை, கூட்டுறவு பண்டக சாலை, தபாலாபீஸ்—தந்திஆபீசுகளும், ஒரு பக்கம் விநாயகர் கோவிலும், அருகில் ஓர் பொதுமடமும், இன்னொரு பக்கம் கல்யாண மஹாலுமாக நாலுபக்கங்களிலும் பொதுஜன உபயோகமான ஸ்தாபனங்களை ஏற்படுத்தியிருக்கிறது. இவ்வூரார் பெண் கிரயம் வாங்கமாட்டார்கள். பெண்களுக்கு தக்க கல்வி பயிற்றுவிக்கிறார்கள். பெண்கள் அங்கங்கள் மறைய அழகாக—நாகரீகமாக—சேலை தரித்துக் கொள்ளுகிறார்கள். பிள்ளைகளை சிறுவயதி லிருந்தே சுயமரியாதை, பிறர்பால் நேசம், விவேகம், அஞ்சாத வீரம் முதலான நற்குணங்கள் பொலியுமாறு வளர்த்து வருகின்றனர். வீடுகளெல்லாம் சுகாதார விதிகளுக்கிணங்க—குடியிருக்கத்தக்க வசதிகளுள்ளவைகளாக—சொற்ப செலவில் சுமார் 4000 த்துக்குள், கட்டப்பட்டிருக்கின்றன. தெருக்கள் மழைநீர் தேங்கும்

பள்ளங்களாயிராமல் செம்மையாய்ச் செப்பனிடப் பட்டிருக்கின்றன. முதல் முதலாக முப்பது வீட்டுக்காரரே இந்த நவபுரியில் வந்து குடியேறினர். பின்பு அவர்களுக்கு உண்டாயிருக்கும் சௌகரியங்களைக் கண்ட பலர் ஒருவர் பின்னொருவராகவந்து குடியேறத் தலைப்பட்டார்கள். இங்கு குடியேறுகிறவர்களெல்லாரும், இந்த ஊரைக் கட்டுவித்த "வைசியர் அபிவிருத்திசங்கத்தாரின் நிபந்தனையைக் கைக்கொள்ளவேண்டும். எல்லோரும் அவைகளை ஒப்புக்கொண்டு தான் இவ்வூரில் குடியேறி அப்படியே நடந்து வருகிறார்கள். இவ்வூரில் இப்பொழுது ஏறக்குறைய ஆயிரம் வீடுகளிருக்கின்றன. அநேகமாய் எல்லாவீடுகளிலும் கொல்லையில் சுத்தநீர்க் கிணறுகள் உண்டு. சொந்தமாய்க் கிணறுகளில்லாத ஜனங்களின் உபயோகத்துக்காக ஊரின் பல பாகங்களிலும் ஊர்க்கிணறுகள் இருக்கின்றன. பெரும்பான்மையான வீடுகளையும், தெருக்களையும், மின்சார விளக்குகளால் பிரகாசிப்பித்திருக்கிறது. இந்த இடத்தில் வசிப்பவர்கள் ஒற்றுமையுடனும் செட்டுடனும் வாழ்கிறார்கள். இவைகளை யெல்லாம் நீரே நேரில் கண்டறியலாம். இராத்திரிகாலத்தில் மின்சார தீப வெளிச்சத்திலே இந்த நந்தவனம் வெகு அற்புதமாய் விளங்கும்."

என்று அந்த நவபுரிக்காரர் சொல்லிமுடித்தார். இதையெல்லாம் கேட்கவும் எனக்கு அத்யந்த ஆச்சரியமுண்டாயிற்று. அந்தவூரிலேயே தங்கிவிடவேண்டுமென்று நான் ஆசை கொண்டேன். இதற்குள் சூரியன் அஸ்தமித்தது. சூரியன் மறைந்ததைக் கண்ட அந்தகாரம் தைரியங்கொண்டு பூமியின்மீது பாவாவண்ணம் தடுப்பதுபோல, நட்சத்திரங்கள் பிரகாசித்தன. நவபுரியெங்க

ணும் மின்சார தீபங்கள் ஒளிர்ந்தன. மேகபடலங்களற்ற விசும்பின் கண்ணே சந்திரன் தன் குளிர்ந்த கிரணங்களை வீசிக்கொண்டு முழுரூபத்துடன் தோன்றினான். அந்த நந்த வன மெங்கும் மின்சார தீபங்களால் ஜொலித்துக்கொண்டி ருந்தது. நான் நந்தவனத்தின் ஊடாக செல்லும் பாதைகள் ஒன்றில் பிரவேசித்து நடந்தேன். என் எதிராக சில ஸ்திரி களும் ஒரு ஆடவரும் வந்துகொண் டிருந்தார்கள். அவர் கள அங்கு நின்ற ஓர் விளக்கின் சமீபத்தில் வந்தபொழுது அந்த ஸ்திரிகளுடன் வந்த ஒரு சிறுபெண்ணின் கழுத்தில் கிடந்த ஓர் ஆபரணம் என் கவனத்தைக் கவர்ந்தது. அது நமது வைரப்பதக்கமே. "ஆ, இதோ இருக்கிறதே அந்த வைரப்பதக்கம்" என்று "நான் மெய்மறந்து கூவிக்கொண்டு அந்தப் பெண்ணை சுட்டிக் காட்டினேன். உடனே அந்த ஸ்திரிகளும், ஆடவரும் நின்று விட்டார்கள். அந்தச்சிறுமி திடுக்கிட்டு என்னை ஏற இறங்கப் பார்த்தாள்.

"எந்த வைரப்பதக்கம், என்ன விசேஷம்" என்று அந்த ஆடவர் என்னைப்பார்த்து எரிச்சலாய்க் கேட்டார்.

நான் அந்தப் பெண்ணின் கழுத்தில் கிடந்த வைரப் பதக்கத்தை விரலால் சுட்டிக் காட்டிக்கொண்டே "இந்தப் பதக்கம் தான். இது எங்களுடையது. போனமாதத்தில் இது எங்கள் வீட்டிலிருந்த களவுபோயிற்று" என்று கூறி னேன். அதைக்கேட்ட அந்த ஆடவர்,

"என்ன, உமக்கு பைத்தியமா என்ன? நீர் எந்த ஊர்க் காரன் காணும், வழியைவிட்டு அப்பாலேபோம்" என்று இரைந்து சொன்னார். அதனிடையில் நாலைந்து மனிதர் அங்குவந்து சேர்ந்தார்கள். புத்தகசாலையில் என்னுடன் பேசிக்கொண் டிருந்தவரும் அவர்களில் ஒருவர். அவர்

வந்ததும் நடந்த சம்பவத்தை விசாரித்துக்கொண்டு என்னைப் பார்த்து.

"தம்பி நீர் சொல்வது உண்மையாயிருந்தால் உமது வியவகாரத்தைப் போலீசில் தெரிவிக்க வேண்டுமேயன்றி, இப்படி நந்தவனத்தில் நின்று சத்தம் செய்வது சரியல்ல. இந்தக் கனவான் இவ்விடத்திய கௌரவஸ்தர்களில் ஒருவர். பதக்கம் தரித்திருக்கும் பெண் அவருடைய புத்திரி. அவர்களைப்பற்றி பயமில்லை. நீர் போலீஸ்டேஷனில் வந்து சொல்லவேண்டியதைச் சொல்லிக்கொள்ளும்" என்றார். மற்றவர்களும் "ஆம், அப்படித்தான் நீர் செய்யவேண்டும். வாரும் போலீசுக்கு" என்று என்னை அழைத்தார்கள். நான் அவர்கள் பின்னாலே போனேன். அவர்கள் எல்லாரும் என்மீது எரிச்சலாக வருவதாய்த் தோன்றினதால் எனக்கு மனதில் அச்சமுண்டாயிற்று.

"முட்டாள் தனமான வேலைசெய்து விட்டேன். போலீசுக்குப்போனால் எனக்கு ஒரு அநுகூலமும் உண்டாகாது. நான் செய்தவேலைக்கு உதையும் குத்தும் தான் கிடைக்கும்போ லிருக்கிறது," என்று எனக்குள் சொல்லிக்கொண்டேன்.

அப்படி நடந்துபோகையில் ஒரு கல் தடுக்கி நிலத்தில் விழுந்தேன். மறுகணத்தில் எனக்கு விழிப்புண்டாயிற்று. நான் என்று வீட்டிலே படுக்கையில் படுத்திருப்பதாக உணர்ந்தேன். மேல்கண்டவைகளெல்லாம் ஒரு கனவென்று அறிந்தேன். அப்பொழுது காலை நாலுமணி இருக்கும். அதன்பின் எனக்குத் தூக்கம் பிடிக்கவில்லை. காலையில் இந்தக் கனவைப்பற்றி தகப்பனாரிடம் சொல்லி வைரப்பதக்கம் வெகு சீக்கிரத்தில் அகப்படும் என்று நானே சோதிடமும்

கூறினேன். அப்படிக்கூறி இன்னும் ஒருமணி நேரம்கூட ஆகவில்லை. அதற்குள் நீங்களும் வந்துவிட்டீர்கள்'' என்று சோமசுந்தரம் தமது அற்புத கனவைசொல்லி முடித்தார்.

முத்துக் கருப்பன் செட்டியார் வைரக்கல் அழுத்தியிருந்த விநாயக விக்கிரகத்தை உடைத்து அந்த கல்லை எடுக்க இஷ்டப்படவில்லை. இந்தச் சம்பவங்களின் ஞாபக சின்னமாக அதை அப்படியே தமது வீட்டில் வைத்துக் கொள்வதாகக் கூறினார். பத்மநாதன் அதற்கு இணங்கி அந்தப் பிரதிமையை அவரிடம் ஒப்புவித்தார்.

நாராயணன்மேல் சுமத்தப்பட்டிருந்த கொலைக்குற்றமும், அக்கினி வைத்த குற்றமும் விலக்கப்பட்டு அவனும் சுப்பய்யாவும் முத்துக் கருப்பன் செட்டியார் வீட்டில் நகை திருடினதாக மாத்திரம் குற்றம் சுமத்தப்பட்டார்கள். அவர்களுக்கு தலைக்கு நாலுவருடகாலம் கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டது.

இராமசுவாமி ஐயர் பேரில் திருட்டு சாமான் வாங்கினதாகவும், தனது வீட்டை கொளுத்தி இன்னொருவன்மீது அபாண்டமாய் கொலைக்குற்றம் சுமத்தப்பட சூழ்ச்சிசெய்ததாகவும் குற்றஞ் சாட்டப்பட்டு அவனுக்கு ஏழுவருடம்கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டது. அவனுடைய சிஷ்யா மூவருக்கும் அவர்களின் குற்றத்துக்குத் தகுந்த தண்டனை கிடைத்தது.

பத்மநாதனுக்கு, முத்துக்கருப்பன் செட்டியார் ஒரு நல்ல தொகை வெகுமதி யளித்ததாகப் பிரஸ்தாபம்.

அவர் இன்னும் செட்டிநாட்டிலேயேதங்கி, தற்சமயம், வெளிப்படாம லிருக்கிற சில கொள்ளைகளையும், மோசடிகளையும்பற்றி விசாரணை செய்துகொண்டிருப்பதாக அறிகி

றோம். அவர் செய்யும் துப்பு விசாரணையின் விபரங்கள் எமக்கு கிடைத்தவுடனே அவற்றை பிரசுரிக்க உத்தேசித் திருக்கிறோம்.

பத்மநாதன்

முற்றிற்று



அக்டோபர் 23

PRINTED AT THE GUARDIAN PRESS, BROADWAY, MADRAS.

